

# சிதாகாச கீதை

[ஆத்ம ப்ரபாவம்]



ஆசிரியர் :

ஸ்ரீலஸ்ரீ நித்யானந்த ஸ்வாமிகள்



தமிழில் மொழிபெயர்த்தவர் :

ஸ்ரீ பண்டித கி. வேங்கடகோபால செட்டியார்

கோயம்புத்தூர்



பிரசுரிப்பவர் :

(ஸ்ரீலஸ்ரீ நித்யானந்த ஸ்வாமிகளின் சிஷ்யராகிய)

மாரிமுத்து நாயுடு

22/521, பெரிய கடைவீதி, கோயம்புத்தூர்

1946 [விலை ரூ. 1

ஓம்.

# சிதாகாச கீதை

## [ஆத்ம ப்ரபாவம்]



ஆசிரியர் :

**ஸ்ரீலஸ்ரீ நித்யானந்த ஸ்வாமிகள்**



தமிழில் மொழிபெயர்த்தவர் :

**ஸ்ரீ பண்டித கி. வேங்கடகோபால செட்டியார்**

**கோயம்புத்தூர்**



பிரசுரிப்பவர் :

(ஸ்ரீலஸ்ரீ நித்யானந்த ஸ்வாமிகளின் சிஷ்யராகிய)

**மாரிமுத்து நாயுடு**

22/521, பெரிய கடைவீதி, கோயம்புத்தூர்

# பதிப்புரை

ஸ்ரீலஸ்ரீ நித்யானந்த ஸ்வாமிகளால் இந்நூல் முதன் முதலில் கன்னட மொழியில் அருளிச் செய்யப் பட்டது. பின்னர் ஸ்வாமிகளின் ஆஜ்ஞையின் பேரில் ஆங்கிலம், மஹாராஷ்ட்ரம், ஹிந்துஸ்தான் முதலிய பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இருப்பினும், நம் தமிழ் நாட்டு மக்கள் எளிதில் உணர்ந்துய்யுமாறு தமிழில் மொழி பெயர்க்கப்பட வில்லையே என்று பல அன்பர்கள் கருதியதுண்டு. அக்குறைபாடு நீங்க, இந்நூலை எளிய நடையில் உயர்ந்த முறையில் தமிழில் மொழி பெயர்த்துத்தந்து இறைவன் திருவடி நீழலெய்திய நண்பராகிய கோயம்புத்தூர் ஸ்ரீ பண்டித-கிரந்தி-வேங்கட கோபால செட்டியார் அவர்களுக்கு இத்தண்டமி ழுலக முழுதும் நன்றி பாராட்டல் தகும். இந்நூலை அச்சியற்ற ஒப்புக்கொண்டு, உண்மையன்புடனும் பக்தி சிரத்தையுடனும் மிகுந்த ஊக்கம் செலுத்தி இத்திருப்பணியை இனிது நிறைவேற்றித்தந்த ஸ்ரீ வாணிவிலாஸ் அச்சகத்தினர்க்கும் நமது நன்றி உரியது.

இத்தமிழ் மொழிபெயர்ப்பு நூல் ஸ்வாமி களின் ஆஜ்ஞையின் பேரில் எழுதப்பட்டு, அச்சிடப் பட்டு அடக்க விலைக்கு விற்கப்படுகிறதென்பதை

சுண்டு குறிப்பிட விரும்புகின்றேன். ஆன்மார்த்தச் சுகம் விரும்பும் பேரின்பப் பசியுடையார் யாவர்க்கும் இந்நூலின் செம்பொருள் தெவிட்டா தினிக்கும் தீஞ் சுவை விருந்தாகலின், அன்பர்கள் அனைவரும் பக்தி சிரத்தையுடன் பெற்றுப் பயின்று, உள்ளத்திருத்தி யோக ஞானத் துறைகளில் ஈடுபட்டு, ஸ்ரீ சற்குரு நாதனின் திருவருள் துணையால் ஆத்மானந்தம் அனுபவிக்க வேண்டுமென்பதே ஸ்வாமிகளின் திரு வுள்ளமும், அன்பர்களின் கோரிக்கையும், அடிமை யின் பிரார்த்தனையுமாகும்.

இங்ஙன்,

| | |
|---|---|
| *22/521, பெரிய கடைவீதி*<br>*கோயம்புத்தூர்*<br>*17-10-1945* | **(ஸ்ரீலஸ்ரீ நித்யானந்த ஸ்வாமி களின் சிஷ்யனாகிய)**<br>**மாரிமுத்து நாயுடு.** |

# ஆசிரியர் முன்னுரை

சாந்தமான சாதனங்களினால் ஜீவன் தர்மா தர்மங்களைத் தெரிந்து, தான் எவ்விடத்திலிருந்து வந்ததோ, அவ்விடம் போய்ச் சேருவதற்கும், தான் எடுத்துவந்த ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களின் குண தோஷங்களை ஆராய்ந்தறிவதற்கும் இந்நூல் பயன்படும். இதன் கருத்தை, அறிவாகிய ஆகாசத்தில் இடைவிடாது ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

மனிதனாகப் பிறந்து வந்த பின் செய்ய வேண்டியவை யாவை? அவை எல்லாந் தெரிந்துகொண்டு, சாந்தியைப் பெற்று, சாந்த நிலையில் நிற்கவேண்டும். அதி சிரேஷ்டமான (அருமையான) இம் மானுஷ ஜன்மத்தை அடைந் திருக்கிறோம். இதன் மர்மத்தை மிக மேன்மையான சிரத்தையுடன் ஆராய்ந்து, "தான் யார்?" என்று விசாரணை செய்து, தெளிய வேண்டும். சதா சாந்த மூர்த்தியாக இருக்க வேண்டும். விஷயங்களில் வேகத்துடன் அலைவதை விட்டுச் சாந்தமான நிலையில் நிற்க வேண்டும். சாந்தனும், எந்த சிந்தைகளு மில்லாதவனும், நிராமயனும் (எவ்வித நோயு மில்லாதவனும்) இருத்தல் வேண்டும்.

பரப்பிரம்மமாகிய பிரணவ ஸ்வரூபமே (ஓம்) எல்லாம். 'ஓம்' சாஸ்வதமானது. 'ஓம்' என்பதே எல்லா மந்த்ரங்களும் ஆம். 'ஓம்' என்பதே ஆத்மாவில் நித்யமாய் நின்றதுமாம். எல்லாம் அதனிடத்தே

லயிக்கும்; அது எல்லாவற்றையும் அடக்கி யுள்ளது. இவ்வுண்மையை உலகத்தாரும் உகந்து பொருந்த வேண்டும். தெளிந்தவர்கள் மறந்தால், தெளிந்தவர்கள் தெரியாதவர்களென பிரத்யேகமாக இராது. இந் நூலில் சொல்லப்பட்ட உண்மை இதிலுள்ள சொற்களின் அளவே யன்றி, (அவரவர்களின்) ஆந்தரிய ஸ்திதிக்கு யாது சம்பந்தமும் இல்லை. இந்நூலின் உத்தேசம், அதை யறிந்தவர்களுக்குப் பெருமை அதிகம் என்றும், அது தெரியாதவர்களுக்குப் பெருமை குறைவு என்றும் இல்லை. இதை அறிதலோ அறியாமையோ இரண்டும் சரி. இதில் சொன்ன சொற்கள் உள் இலக்ஷியத்தில் ஆராய்ந் தறியப்படட்டும். இச் சொற்கள் அந்தரிக்ஷத்தில் (நமது மனத்தி னுள்ளே) ஆராயப்படட்டும். இவ்வார்த்தைகள் ஒருவர் மேல் குறிப்பாய்த் தாக்குவதற்கும் அல்ல. இவை உற்பவித்த இடத்தில் சேரட்டும்.

'ஓம் தத் ஸத்'. ஓம் பரா (சாஸ்வத சத்தியம்). ஓம் சிதா (ஞானம்). 'ஓம்' என்பதே சிருஷ்டி கர்த்தா. 'ஓம்' என்பதே சம்ஹார கர்த்தா. 'ஓம்' என்பதிலேயே புன ஸ்ருஷ்டியும் ஸம்ஹாரமுமாம்.



# மொழி பெயர்த்தா னுரை

இக்கன்னட முதனூல் இக்காலச் சித்த புருஷராகிய ஸ்ரீலஸ்ரீ நித்யானந்த ஸ்வாமிகளால் திருவாய் மலர்ந்தருளப் பெற்றுளது. இப் பெரியார் இன் சொல்லால் பேரின்பப் பேற்றின் தெள்ளமுதப் பெருக்கைப்பருக அறிவுறப் புகட்டும் திருவாக்குகளைத் தமிழுலகம் அறிந்து களிகூர்ந்து மேம்பாட்டைத் துய்யுமாறு, பல நண்பர்களின் ஒரு முகமான வேண்டுகோள். "இஃதடியேனால் தமிழில் மொழி பெயர்க்கப்பட வேண்டு" மெனக் கேட்டலால், அப்பெரியாரின் திருமொழி பல பொருள் சில்லெழுத்தில் அருளிய அரிய வேதாந்த நூல், பல் பொருளகலுரைச் செந்தமிழால் விளங்கவைத்தற்பாலதாய்ப் புன்சொற் சிற்றறிவு மடமையு முடையா னடியேன் மிகத் தகுதியற்றன் எனத் தெரிந்தும், பல நண்ப ரொருமுகமாய் 'நும்மாலேயே இஃதாக வேண்டு' மென்றதால், அடியேன் முன்னோர் செய்த சுகிருத பலத்தால், இம்மஹா புருஷரின் திருவருணோக்கு இக்கடையன்பால் வீழ்ந்ததெனக் கடிதுட் கொண்டு அவ்வேண்டுகோளுக் கிணங்கி அப்பெருமானின் அனுக்கிரஹத்தினால் மொழி பெயர்க்கப் பெயர்க்க அடையாத அர்த்தங்களை அடைய நேர்ந்தது. அடியேன் சிற்றறிவுக் கெட்டியபடி யெழுதி, இஃதன்னாரது கிருபையினால் முடிவுற்றது. அவரதின்னருளே என வம்மஹான் திருவடி மலர்ச்சரண் பணிந்து, தமிழுலகத்துக்கும் விண்ணப்பித்துக் கொண்டேன். இதில் குற்றங்களிருப்பின் அடியேன் மடமையைப் பொறுத்தாட் கொள்ளவேண்டுமெனக் கோருகிறேன்.

இங்ஙனம் அடியேன்,

கோவை நகர்,
7 டிசம்பர் 1942.

கிரந்தி. வேங்கடகோபால செட்டி,
நெ. 82, வைசியர் வீதி, கோவை.

# ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகள்.



ஆனந்த மானநின்னை யன்றியொன்றை யுன்னுத
மோனந் தமியேற்கு முத்தி பராபரமே.

[ தாயுமானுர் ]

''நினைத்து நினைத்து நினைப்பற்ற நெஞ்சே
நினைப்பற்றி நீயாகி நில்''

# ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகள்.

## ஞானவீரன்.

''தன்னையறிந்தவன் தேவமனிதன்: அவன் கடவுட் கலப்பில் சுடர்பெற வாழ்பவன்; அச்சமில்லான்; அகந்தையில்லான்; மாசற்ற தூயன்; தேசுறு ஞானி; யோகசித்தன்; தியாக மூர்த்தி; புலனடக்கியோன்; பொறுமை மிக்கோன், இன்னுரை சொல்வோன்; தன்னலமில்லான்; உள்ளத்துறைபவன்; அனைத்திலும் ஒருமையங் காண்போன்; யாருக்கும் தீங்கிலான்; ஆனந்தன்; அருள்வலி மிக்கான்; இன்பதுன்பம் இரண்டும் சமமாக நினைப்பவன்; இத்தகைய தெய்வத் தன்மைகள் பொருந்திய புனிதனே ஞானவீரனாவான். அவன், தன்னைப்போல அனைத்தையும் கருதி, தற்பெருமையின்றி, தன்னலமின்றி, அற்புதமான அருள் வல்லபத்தால் உலகிற்கு அறிவும் திறனும் ஒளியும் இன்பமும் அளிக்கவல்லான். [illegible]யும் [illegible]யும் அழிவ[illegible] உலகுக்கு வெளிச்சம் தருகிறது. அதுபோல இத்தகைய ஞானவீரன் தன்னைக்கொடுத்தும் பிறர்க்கு இதஞ் செய்வான். அவன் பலாபலன்களிற் கட்டுப்படான். அவன் இறந்தும் இறவான். பிறந்தும் பிறவான்; செய்தும் செய்யான்; சும்மாயிருந்தும் எல்லாம் புரிந்தவனாவான். அவனைச் சுற்றிக் கடவுட் காந்தம் வீசும். அதுவே பல அற்புதங்களைப் புரியும்; அத்தகைய மகாத்மாக்களே பாரத சமுதாயத்தின் பழம்பெருங் கனிகள்.''

''சிந்தையாம லெண்ணித் தெளிந்தாலுன் னுள்ளே
அதுநானென் றேயுணர லாம்''

ஓம்



# சிதாகாச கீதை

## ஆத்ம ப்ரபாவம் (ஆத்மாவின் பெருமை)

## முதற் பாகம்.

ஞானிகளுக்கு மனது என்பது இல்லை. ஞானிகளுக்கு எப்போதும் இருப்பது சம[1] ஆத்மா. அவர்களுக்கு நித்திரையும், கனவும், சுத்தமாய்த் தன்னை மறந்திருப்பதென்பதும் இல்லை. எப்போழ்தும் நித்திரையில் (இருப்பவரைப்போல் வெளிக்குக்) காணப்படுவார்கள்.

சூர்யன் சந்திரன் என்று வெவ்வேருக இல்லை. எப்போதும் சூர்யோதய சமயமே (எப்படி உதய சமயத்தில் சூரியன் பிரகாசித்துக்கொண்டு நிற்குமோ, அப்படியே எந்நேரமும் ஆத்மா பிரகாசித்துக்கொண்டே) இருக்கும். ஒரு கண்ணுடிச் சிம்னியில் அழுக்குப்பட்டிருந்தால், ப்ரகாசம் சரியாக வியாபிக்காது. (அழுக்கு அகன்ற பின்னரே வியாபிக்கும்.) அதைப்போல், மனதின் அழுக்கைப் போக்கவேண்டியது அவசியம்.

---

1. சம ஆத்மா - தன்னைந் தெரியும் உணர்ச்சி: தன்னிலையில் நின்று எப்போதும் மறகியின்றிந் தன்னை யறிந்துகொண்டே யிருக்கும் உணர்ச்சி. எல்லாம் தனக்கு ஸமமான தோற்றம்.

2. சூர்யன்—ஸுஷும்ன நாடி; சந்திரன்—இடா நாடி; நக்ஷத்ரம்—பிங்களா நாடி. முறையே சிவப்பு வர்ணம், நீல வர்ணம், பச்சை வர்ணம்.

3. மூன்று நாடிகளும் கூடிய இடம் இருதயாகாச மண்டலம். தினங்கள் செல்லச் செல்ல பிந்துவின் நாதம் (ஹார்மோனியம், தபலா, பிட்டில் முதலியவை போல பத்துவிதமான நாதங்கள் முதலியன) தலைக்குள் கேட்கலாம். ஒலிகளுக்குக் குறைவில்லாமல் நிறையக் கேட்கலாம்.

4. நெருப்பில் கர்ப்பூரம் உரு மாய்ந்து போவது போல், மனது ஆத்மாவில் லயம் ஆகவேண்டும்.

5. காய்ந்து உலர்ந்த தேங்காயை ஆட்டினால் சிப்பிக்கு ஒட்டாமல் ஆடும். அதுபோல் சரீரம் வேறு. ஞான விசாரம் வேறு. ப்ரகாசம் ஒன்றே. அந்த ப்ரகாசத்தினால்[1] துரப்யாசங்கள் எல்லாம் சுடப்பட்டுப்போம்.

6. கிணற்றிலிருந்து நீர் மொண்டு மேல் இழுக்கப் படுவதைப்போல் சுவாஸம் மேல் இழுக்கப்படும். சுவாஸம் விடப்படும்போது கிணற்றில் வெறுங் குடம் விடப் படுவதுபோல் போக வேண்டும். விடுவது அழுக்கு ஸ்வாசம். மேல் உள்ளுக்கு இழுக்கப்படுவது - ஓம் - கார சுவாஸம். ஓம்-கார சுவாஸம் என்று சொல்லப் படுவதே மனது.

---

1. துரப்யாஸங்கள் - சரீரம் நான் அபிமானித்தல். வெளியில் கண்டதை எல்லாம் பார்த்து தான் என்று அபிமானித்தல் ஆசை கொள்ளுதல் முதலியவை - காமாதிகளுடன் கூடியிருத்தல்.

7. 'மனம்' என்று சொல்லப் படுவதெதுவோ — அதுவே ஜீவாத்மா. ஆனால், இடம் மாத்திரம் வேறு வேறு. ஜீவாத்மா வென்பதே பரமாத்மா.

8. வித்தையைக் கற்க வேணடும். வித்தை என்றால் என்ன? பரமாத்மாவின் உண்மை ஜீவாத்மாவுக்குத் தெரிய வேண்டும்.

9. ஜீவாத்மாவுக்குள் பரமாத்மா இருக்கிறார். ஸ்தூலத்தினுள் சூக்ஷ்மத்தைப் பார்த்துத் தெரிந்து கொளவதே நிஜமான முக்தி.

10. ஸ்தூல நித்திரையை விட்டு சூக்ஷ்ம நித்ரை செய்யவேண்டும். சுவாஸ உசுவாஸத்துக்குள் நித்ரை செய்ய வேண்டும்.

11. ஊர்த்வ சுவாஸம் கடியாரத்தின் முள்ளைப்போல் உள்ளிலிருந்து உள்ளுக்கு நடப்பது. அப்போது உலகமானது தன்னிடத்திலேயே உண்டாகிறது (தெரியும்).

12. ஓர் மண் பாண்டத்தில் நீர் நிறைத்து, அதில் பார்த்தால் ஆகாசம் எப்படி காணப்படுகிறதோ, அப்படியே தன்னிடத்தில் இந்த உலகம் தன்னிடத்தில் தோன்றும்.

13. தங்கப் பாத்திரத்தில் சமையல் செய்தாலும் நாய் தின்னும் மண் பாத்திரத்தில் செய்த சமையலையும் நாய் தின்னும். (எதில் சமையல் செய்தாலும் நாய் தின்பது சாதாரணம்)

14. உப்பு நீரிலும் சூர்ய ப்ரகாசம் காணப்படும். அவ்வண்ணமே பெரிய குளத்திலும் எல்லா நீர் நிலயங்

களிலும் காணப்படும். கண்ணினுல் பார்த்த மாத்திரத்தில் பிரயோஜனம் இல்லை; கைக்குக் கிடைக்க வேண்டும்.

15. ஒரு மரத்தில் பூ அதிகம் பூக்கிறது. பூக்கள் கெட்டும் போகின்றது. ஆனுல் மரத்துக்குக் கேடு இல்லை. அதுபோலவே அதோகதியடைதல். (வெளிப் புலன்களுக்குத் தோற்றுவன எல்லாம்) புஷ்பத்தைப் போலாம். மத்திமகதி (அவ்வாறு தோற்ருதவை) (ஆதரவு) மரத்தைப் போலாம்.

16. நெருப்புப் பெட்டியில் குச்சிகள் இருக்கின்றன. குச்சியை, நெருப்புப் பெட்டியில் மருந்து தடவியிருக்கிற பக்கத்தில் உறைத்தால் மாத்திரம், நெருப்பு பற்றிக் கொள்ளுகிறது. அப்படியே 'குச்சி' என்பது மனசு. 'புத்தி' என்னும் பெட்டிக்கு 'மனது' என்னும் குச்சியை உறைத்து, "ஜீவன் முக்தி" என்கிற ஸ்வராஜ்யம் பெற வேண்டியது.

17. மானுபிமானங்களை விடவேண்டும். சரீராபிமானத்தை விடவேண்டும். இவ் விரண்டையும் விட்டவர்களுக்கு ஒன்றும் இல்லை. வஸ்து தன்மயமாகித் தோன்றும்.

18. ஜகஜ் ஜோதி, பரஞ் ஜோதி என்பது ஒன்றே.

19. மரப் பலகை யொன்றினுல், நாற்காலி, 'குரிச்சி' 'மேஜை' முதலியவை ஆகின்றன. முதலில் இருப்பது பலகைதான்.

20. மனதும் ஆத்ம ஸ்தானமும் யாவருக்கும் ஒன்றே. முடிவில் எல்லாருக்கும் ஒன்றே. இப்போதுள்ள நிலையில் சுவாஸத்தின் விசாரமும் மனோ விருத்திகளும் வேறு.

21. அக்னி, வாயு, நீர், மண் (இவை) யாவருக்கும் ஒன்றே. எல்லாருடைய கைகளிலும் எடுக்க வருகிறது. அப்படியே, குழாய் தண்ணீரும், ப்ராம்மணர், பறையர், சிறுவர், பெரியார் எனும் பேதம் இல்லாமல் யாவருக்கும் வருகிறது.

22. 'மனது' என்கிற எள்ளை, 'புத்தி' என்கிற செக்கில் வைத்து, 'அமிருதம்' என்கிற எண்ணெயை எடுக்க வேண்டும்.

23. புத்தி அரசன். மனது மந்திரி. புத்தி சொன்னதை மனது கேட்டு நடக்கவேண்டும்.

24. வழியில் 5000, 6000 ஜனங்கள் கூடியிருந்தால். குதிரை வண்டியை ஓட்டிக்கொண்டு போவது அசாத்தியம், மிகவும் ஜாக்கிரதையுடன் விட்டுக் கொண்டு போக வேண்டும். ஒருவன் 'ஸைக்கிலை' விட்டுக் கொண்டு போகும்போது. அவனுக்கு (எதிரில் வருகிற) இதரரின் மேல் கவலை. தன்பேரில் அவனுக்குக் கவலையில்லை.

25. முழுதும் மூழ்கி நனைந்தவனுக்குக் குளிர் இல்லை. அப்மாதிரியே, பூர்ணத்துவத்தை அடைந்தவனுக்குக் கலவரம் இல்லை.

26. அக்னியில் சுட்ட விதையில் முளை வராது. எண்ணெய் தீர்ந்து போனதை விளக்கு என்று சொல்லார். சூர்ய ப்ரகாசம் இருக்கும்போது 'கியாஸ் லைட்' ப்ரகாசிக்காது. முழு ப்ரகாசம் நிறைந்திருக்கிற போது ஜகத்தெல்லாம் சோபித்துக் கொண்டிருக்கும். (மஹா ப்ரகாசத்தில்) அரசைப் போன்ற மனத்துக்கு புத்தி மந்திரி. (பழம் தரும் மரத்துக்கேயல்லாது) பலம் இல்லாத மரத்துக்குச் சோபை (பொலிவு) இல்லை. காரணம் இல்லா

மல் காரியம் இல்லை. இருளில் விளக்கைப் பார்ப்பதே காரியம். இருள் என்பது அஞ்ஞானம். விளக்கு என்பது ஞானம். தன் சொரூபத்தைத் தன்னிடத்திலேயே பார்க்கவேண்டும். தான் தன்னிடம் சேரவேண்டும். தான் பெற்றுக் கொண்ட வஸ்துவை திருப்பிக் கொடுக்க வேண்டும்.

27. 'குரு' வென்பவர், எவருக்கும் (முட்களுள்ள) காட்டுத் தடத்தைப் போலுள்ளதை ராஜ மார்க்கமாக்கித் தருபவர். குருக்கள் இருவகையார். காரண குருவென்றும், கார்ய குரு வென்றும். விளங்கும்படி தெரிவிக்கிறவர் காரண குரு. மனது கார்ய குரு. ஒருவரால் ஒருவர் குருவாவதில்லை. ஒருவருக்கு ஒருவர் காரண குரு. கிணற்றில் நீரைக் காட்டுகின்றவர் காரண குரு. ஸர்வ பிராணிகளிடத்திலும் விளங்குகிற ஸர்வாந்தர் யாமியே (தன்னைக் காட்டிக்கொண்டே இருக்கிற) ஜகத் குரு.

28. 'குரு', 'குரு' வென்பது சரீர பாவனை. காலுக்குப் பாதக் குறடு இல்லை. கையில் ஒருவித மாலையும் இல்லை. வாயில் பேசுவது பிரம்மஞானத்தைப் பற்றி. கொடுப்பது கற்கள். அம்மாதிரியான பேர்வழி குரு அல்ல. வாயில் சொல்லியபடி செய்விக்கிறவன்; தான் சொல்லியதும் செய்வதும் ஒன்றே. முதலில் தான் செய்ய வேண்டும்; (பிறகு) மற்றவர்களுக்குச் சொல்லவேண்டும்.

29. சரீர பாவனையை நிஸ்ஸாரமாக ('ஸாரமில்லை' என்று தள்ளி) விட்டவனே குரு. குருவைவிட சிரேஷ்டர் யாரும் இல்லை. குருவுக்குமேல் தேவரும் இல்லை. குருவே தேவர். தேவரே குரு.

30. கையிலிருக்கும் சர்க்கரையைச் சரீரத்தின் எந்த அவயவத்தில் வைத்தாலும் அதன் ருசி அறியப்படாது. வாயில் வைத்துத் தின்றால் நாக்குக்கு மாத்திரம் அது தெரிகிறது. 'ராம', 'க்ருஷ்ண', 'கோவிந்த' என்று ஆயிரம் வருஷங்கள் (வாயினால்) சொன்னாலும் முக்தி கிடைப்பதில்லை. மனதினால் சொல்லவேண்டும்.

31. மாட்டின் பால் கசப்பாகாது. மண்ணின் மேல் நிறுத்தப்பட்ட கல் பேசுவதற்கில்லை. காசி, இராமேஸ்வரம் முதலிய க்ஷேத்ரங்களுக்குப் போய்ச் சுற்றினாலும் முக்தி அடைவதற்கில்லை. இதில் முக்யமானது யாதெனில், ஒரு நிமிஷமாவது மனதை நிறுத்தி புத்தி மார்க்கமாக விசாரம் செய்து பாருங்கள். கல்லிலும் மண்ணிலும் (பரமாத்ம) தர்ஸனமில்லை. இவை யாவும் மனதின் பிராந்தி. இது தெரியாவிட்டால் புருஷார்த்தம் அடைவது கஷ்டம். தான் பெற்றுக்கொண்டது என்பது (ஜீவன் சரீரத்தை எடுத்துக்கொள்வது) அவனுக்குக் காரியம். அதைத் திருப்பிக்கொடுப்பது அவனுக்கு காரணம். அப்படி காரண காரியங்களை அறிய வேண்டும். அப்படி நியாயான்யாயங்களையும் தெரிய வேண்டும். சாந்தி பதவியில் சேர வேண்டும்.

32. நிலைவாசல் இல்லாதது வீடல்ல. நெருப்பில்லாமல் சூடாகுவதில்லை. காற்றில்லா விடத்து நெருப்பு இருக்காது. சாப்பாடும் நித்திரையும் இல்லாமல் எத்தனை நாள் இருக்கமுடியும்? பிராணவாயு வில்லாமல் ஐந்து நிமிஷமும் இருப்பது சாத்யமல்ல.

33. சிருஷ்டி சம்ஹாரங்கள் வாயுரூபம். நிழற் சாயை. ராஜயோகம் என்பது அகண்டமான அத்வைதத்

தின் கூண்டு எனலாம். நிற்காமல் போகிற கூடுபோல் அகண்டமாய் இடைவிடாமல் செல்வது.

34. துண்டுகளில் அகண்டமென்பதில்லை. ஞானிகளுக்கு அஞ்ஞானிகளென்று பேத பாவனை இல்லை. அஞ்ஞானிகளுக்கு ஞானிகள் என்று தெரிவது இல்லை. மக்கள் அடித்தாலும் அவர்களைத் தாய் தள்ளிவிடுவது இல்லை.

35. அம் மாதிரியே குரு கடாக்ஷம் என்பதைப் பெற்றால் இடம் விட்டு அலையவேண்டியதில்லை. நீரில் சூர்யன் எப்படி அலைவதாகக் காணப்படுகிறதோ, அவ்வண்ணம் மனதை அலையவிடக்கூடாது.

36. சமுத்திரத்தின் நீருக்கு எல்லையில்லை. குளத்தின் நீருக்கு எல்லை உண்டு. குளத்தின் நீர் போல் மனது நிற்க வேண்டும். நன்மைக்கும், தீமைக்கும் மனது காரணம். தன்னுலோசனையினுல் ஒருவன் கெட்டவனுகக் கூடும். நல்லவனும் ஆகக்கூடும். தேவன் ஒருவனுக்கும் கெடுதியும் செய்வதில்லை; நல்லதும் செய்வதில்லை. ஏனென்றால், புத்தி, ஞானங்கள் தேவாம்சம் ஆகையால் நல்ல ஆலோசனை உள்ளவனுக்கு (பீரங்கி)க் குண்டும் படாது. அப்படி (இல்லாதவனுக்கு) செய்யாதவனுக்கு கர்மம் விட்டுப் போவதில்லை.

37. (உள்ளடங்கி யிருக்கிற) மர்மத்தை அறியாமல் உடம்பின் மேல் அலங்காரம் செய்தால், கர்மம் விட்டுப் போவதில்லை. சன்யாசி (பிச்சை யெடுத்துண்கிறவன்) தன்னுள் வஞ்சனை வைத்து, வெளிக்காரியத்தைச் செய்யக் கூடாது. தன் மனதில் வருத்து தீர்மானித்து வைத்துக் கொண்டதையே (எண்ணிக் கொண்டதையே) வாயால்

சொல்லவேண்டும். வாயினால் சொன்னதையே காயத்தால் செய்யவேண்டும். சொல்வதையே செய்யவேண்டும் செய்வதையே சொல்லவேண்டும். அவனே ஞானி. யோகி. அவனே பரம ஹம்ஸன். அவனே சன்யாசி. ஆசை விட்டவனே சன்யாசி. ஆசையை விட்டவன் யாவருக்கும் ஆச்சாரியன் எனலாம்.

38. வேறொருவனுக்கு (இலையில்) படைத்ததைத் தான் தின்னலாகாது. தான் வேறொரு இலையைப் போட்டு அதில் இட்டதைச் சாப்பிட வேண்டும்.

39. ஒருவனிடம் அதிகம், ஒருவனிடம் குறைவு என்றில்லாமல், ஆலோசனை செய்யும் சக்தியும், காது மூக்கு கை கண் முதலியவை போலவே எல்லாருக்கும் சமம். சம தர்மமுடையன. சமமான ஸ்தானத்திலிருப்பவை.

40. கண் இருக்கும் இடத்தில் மூக்கு இருப்பதில்லை. சரீரத்தில் ஒரு அவயவம் (உறுப்பு) செய்யும் வேலையை, மற்றொரு அவயவம் செய்யாது. அந்தந்த அவயவமே செய்து தீரவேண்டும். காலினால் ஆகவேண்டிய காரியங்கள் காலினாலேயே ஆகவேண்டும். கையினால் செய்யப்பட வேண்டிய காரியங்கள் தலையினாலாவதில்லை.

41. தலை என்பது ஆனந்த சமுத்திரம். அதனுள் இருப்பது 'பிராண லிங்கம்' என்கிற முக்தி ஸ்தானம். ஆனால் இதை அறிவது புஸ்தக ஞானத்தினால் (புஸ்தகப் படிப்பினால் ஏற்பட்ட ஞானத்தால்) அல்ல. மஸ்தக ஞானத்தினால்தான் ஆகவேண்டும். மஸ்தகம் என்றால் சிரஸ். புஸ்தகம் எல்லையுள்ளது. மஸ்தகமோ அகண்டமானது. புஸ்தகம் பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

மஸ்தகமோ, அகண்டமாய் (பிரிக்கப்படாததாய்) ஏகமாய் இருக்கிறது.

['சாஸ்த்ரம்' என்னும் பதம், குருவாக்யம் அல்லது பகவத் வாக்யம், அல்லது குரூபதேசம் என்றும் பொருள் கொள்ளும்படியாக சொல்லப்படுகிறது.] சாஸ்த்ரத்தில் ஸ்திரம் அல்லது நம்பிக்கை இல்லாதவர்களுக்குப் புஸ்தகம் வேண்டும். சாஸ்த்ரமென்பது நிச்சயமானது; எப்போதும் நிலை நின்ற அகண்ட வஸ்து. (தாய்) வயிற்றிலிருந்து வரும்போது (இருப்பது) புஸ்தகம் அல்ல; மஸ்தகம்தான் இருப்பது. போகும் போதும் இல்லை; வரும்போதும் இல்லை; இடையில் வந்தது புஸ்தகம்.

42. வந்த போதும் போகும் போதும் அவதூதை. நடுமத்தியில் மாயை. நான்கு பக்கங்களிலும் வியாபித்து நிற்பது அகண்ட வஸ்து. அந்த எல்லைக்குள் இருப்பது பிரபஞ்சம்.

43. நீரோட்டமுள்ள இடத்தில் சேறு நிற்காது. ஸ்வச்சமாய் தெளிந்ததாய் இருக்கும். சேறு என்பது அஞ்ஞானம். நீர் என்பது பக்தி ஞானங்கள்.

44. பக்தி என்பது, அல்பமாகிய பொருளைத் தருவதும், (அனுபவிக்கப்படுவதாகிய) ஊணைத் தருவதுமல்ல. பக்தி என்பது அன்பு. அன்னிய பாவனைகளை விட்டு, எல்லா வஸ்துக்களையும் ஸம திருஷ்டியினால் பார்ப்பதுதான் பக்தி.

45. ஸ்வாஸத்தை நிறுத்தி வழக்கப் படாதவர்கள் யோகிகள் அல்லர்; சன்னியாசிகள் அல்லர். சுக்கான் இல்லாத படகு, வேண்டிய பக்கம் போக முடியாது.

46. தான் நல்ல சமர்த்தனுய் இருந்தால் எல்லாம் நல்லவையே. தான் நன்னுலேயே சமர்த்தனுக வேண்டும்.

47. கரும்பின் சாற்றைக் குடிக்கின்ருேம். இளங் கோந்தாளேயை நீக்கிவிடுகின்ருேம். அதைப்போல், இவ் வுடல் ஓர் மனே. மனே இடிந்து போகும்போது வேருென் றைக் கட்டுகின்ருேம்.

48. பக்ஷிகளுக்கு நாசமில்லே. கூண்டுகள் நாச மாகின்றன; பக்ஷிகளுக்குக் கேடில்லே. கூண்டு மண்ணேப் போலுள்ள தனுலானது. மண்ணினுலானவை நாடிகள், நரம்புகள், நாடிக்குள் ரத்தம், சுக்லம் முதலியவையே. மாம்சத்தினுலான வுடல் ஸ்திரமல்ல. ஒரு நாள் கழுவா திருந்தால் துர் நாற்றம் வருகிறது. இம் மானிட வுடம் பின் இயல்பு (இப்படி இருப்பதால்) நம்பி இருப்பதற்கு சாத்தியமில்லே.

49. மனது என்பது பாவனேயின் உருவம். (மனதே சகல ரூபங்களேயும் சிருஷ்டித்துக் கொள்ளுகிறது.) ஸ்தூல பாவனேயை விட்டு சூக்ஷ்ம பாவனேயில் நிற்பதே சமாதி. 'சமாதி' என்பது, ஒரு பக்ஷியைக் கூண்டிலடைத்து. எங் கும் போக முடியாதபடி காலேக்கட்டி, பேச்சுக்களேக் கற் பிப்பதைப்போன்று, புத்திக்குள் மனதை நிறுத்தி, தனக் குள் தானே அறிந்து கற்றுக் கொள்ளவேண்டும்.

50. கடியாரத்தில் திருகு மிடத்தில் திறவுகோலே இட்டுத் திருப்பிய மாதிரி, கையினுல் மூக்கைப் பிடித்து, மேலே நோக்கி மூச்சை யடக்கி, "ஸர்க்கஸ்" வகையராக் களில் செய்வதைப் போல் செய்வது சமாதியல்ல.

51. (மனேபாவனேயைச் சமமாக்க வேண்டும்.) ஸம மான மனேபாவனேயில் இருப்பதுதான் சிரேஷ்டம். உல

தில் சாயை (நிழல்) உண்மையை மறைவு செய்கிறது. அதாவது உலகத்தின் உண்மையை உள்ளபடி அறிவதற்கு இல்லாமல் மறைவுபடுத்துகிறது. ஸூக்ஷ்ம திருஷ்டி (உள்ளவனுக்கு) அதாவது நிதானித்து உள்புகுந்து ஆராய்ந்து அறிகிறவனுக்கு மறைவுபடுதல் மிகக்குறைவு. லக்ஷம் ஜனங்களில் ஒருவருக்கு அல்லது இருவருக்கு நிஜம் மறைவுபட்டு இருக்கும். உண்மை விளங்காமல் வேற்றுமை பட்டுப் பொய்யாக வேறென்றாய்த் தோன்றுவதே மருள். மற்றவர்க்கு (சாதாரண ஜனங்களுக்கு) ஒரு நாழிகைக்குப் பதினாறு மருள் படும். 'அது வேண்டும்'; 'இது வேண்டும்;' 'அது வேறு;' 'இது வேறு;' என்று வேற்றுமை தோன்றுவது மருள், நானாவித எண்ணங்களே மருள். தளர்ந்து போதல் என்பதும், பாரம் எனத் தோன்றுவதும் மருள். சாதனை செய்து பார்த்தவர்களுக்கும் மருள். ஜீவன் முக்தியும் மருள். உற்று (ஊடுருவி ஆராய்ந்து) நோக்காதவருக்குத் தங்கள் உடலே மருள். எல்லா ஜனங்களுக்கும் ஒவ்வொருவிதமான மருள். பலதொட்டிக் கட்டுகளுடைய விடு, வயிரம் முதலிய ரத்னங்கள், ஆபரணங்கள், ஸ்வர்ணம், உத்தமாஸனங்கள் (யாவும்) போகும்போது போவதில்லை; வரும்போது வருவதில்லை.

52. சரீரமோ (ஸ்திரமாய்) இருப்பதுவும் அல்ல; (போகிறவனோடு) போவதுமல்ல. கர்த்தவாகி நின்று செய்கிறவன் ஒருவனே. வயிற்றிலிருந்து வந்தபோது கொண்டுவந்தது ஓர் மூச்சு. போகும்போது விட்டுப் போவது ஓர் மூச்சு. ஆஸ்திகளும், கீர்த்தியும், இங்கும் (இந்த உலகத்திலும்), அங்கும் (அந்த உலகத்திலும்), ஒன்றுதான். இங்கேதான் பேதங்கள். அங்கே பேதங்கள் இல்லை. அவதூதன் என்பவனே எல்லாரிலும்

மேன்மையானவன். யோகிகளுக்கும் சன்யாசிகளுக்கும் யோக சித்தியாயிருக்கவேண்டும். அவதூதனுக்கு (அப்படி) ஒன்றுமில்லை.

53. சத்தும் சித்தும் கூடியதே ஆனந்தம். பரமானந்தமும், ஸ்ரீ சச்சிதானந்தமும். தலைக்குள் இருப்பது பரமானந்தம். தலைக்குள் இருக்கிற ப்ரம்ம நாடியில் உள்ளது பிர்ம்மானந்தம். பிரம்மானந்தம் (ஜீவதத்துவத்துடன்) கூடினுல் ஆனந்தம் ஆகிறது. அது கூடக்கூடக் கூடினுல் பரமானந்தம். ஜீவாத்மாவும் பரமாத்மாவும் கூடிக்கூடி ஆனந்தமாவது சிவானந்தம். தலையாகிய சிரஸில் பரமானந்தம். ஜீவன் முக்தியானந்தம். இது நித்தியானந்தம். உத்தமோத்தமமான ஆனந்தம்.

54. (உலகத்தில் உள்ள) போகத்தை விட்டு யோக ஞானத்தில் ஈடுபட்டு உற்றுப்பார்த்தறிந்து நிலைத்தவனே ஞானி. உபதேசத்தைக் கேட்டது மட்டும் ஆனந்தமல்ல. யோக ஞானங்களைத்தானே அனுபவிக்கப் பெற்ற ஸ்திதியே ஆனந்தம். அப்படி ஆனந்தம் அனுபவித்தவர்கள். மஹாத்மாக்கள். கல், மண், இவற்றைப் பார்த்தும், கல்லாகவும், மண்ணுகவும் பார்க்கிறவர்கள் மஹாத்மாக்கள் அல்ல. தன்னில் தன்னையே அறிந்தவர்கள் (பிறிதொன்றும் பார்க்காதவர்கள்) மஹாத்மாக்கள்.

55. அவதூதன் ஜனன மரணங்களை ஜயித்தவன். சரீரத்தைப்பற்றிய பாவனையை ஒழித்தவன். குணங்களைத் தாண்டி நின்றவன். எல்லாம் அறியும் பேரறிவால் அறிகிறவன். குறுகிய அறிவு (ஆகிய 'நான்' என்பது) இல்லாதவன். அவனே ராஜயோகி. ஹடயோகியல்லன். ஒரு கிராமத்தில் இருந்து யாரைப் பார்த்தாலும் ஆனந்தந்தான். அங்குமிங்கும் திரிந்தாலும் இருமை

(அவன், நான்) எனும் பாவனையே இல்லாதவன். பசி என்பதில்லாதவன். வைத்தால் எவ்வளவானாலும் தின்கின்றான். வைக்காது போனால் யாரையும் கேட்பதில்லை. விஷம் கொடுப்பவரும் பால் கொடுப்பவரும் ஒன்றுதான். தன்னை (தன் சரீரத்தை) அடிப்பவரும், தன்னிடம் அன்பு வைப்பவரும் ஒன்றுதான். அவதூதனுக்கு இப் பிரபஞ்சம் தாய்; தந்தை; பந்துக்கள். தான் பிரபஞ்சமாகி நிற்கிறான். பிரபஞ்சம் தானாயிருக்கிறது. தன்னில் பிரபஞ்சம் கலந்து போகிறது.

56. பிராணாயாமத்தில் (ரேசகம், பூரகம், கும்பகம் என்னும் மூன்றுமாகிய யோகத்தில்) ரேசகம் என்பது ஸ்வாசத்தை வெளியில் விடுவது; கும்பகம் என்பது ஸ்வாஸத்தை நிறுத்துவது; பூரகம் என்பது உள் இழுப்பது. இம்மூன்று விதங்களும் உள்ளிருந்து செய்யப்படுகின்றன. வெளியில் உள்ள எதினாலும் செய்வது அல்ல. அவ்வகை அறிந்து அப்பியாசம் நடத்தும்போது, இஃது ஒரு நாடியால் நடத்தப்படுவது எனத்தெரியலாகும். அது நமக்கு ஆனந்தமாக இருக்கும். இந்த ப்ரம்மானந்தத்தை யாரால் சொல்லலாகும்? அப்போது இவ்வெளியுலகத்தின் எண்ணமே தோன்றாமல் மறந்து விடுகிறோம். மேல் உலகத்திலிருப்பதாகத் தெரியும்.

57. இவ்வுலகம் என்றால் ஜீவாத்மாவாக (உலக வ்யவகாரம் செய்துகொண்டு) இருக்கும் நிலை. அவ்வுலகம் என்றால் பரமாத்வில் ஜீவாத்மா கலந்து போன நிலை.

58. சிறு நதிகள் கடலில் போய் விழுந்து விடுதல் போல், நமது லக்ஷ்யம் உள்நடக்கும் ஸ்வாஸத்தையே கவனித்துக் கொண்டிருந்தால் மேலே செல்லும்.

59. வெளிப் பார்வையினுல் பார்க்கப்படுவதெல்லாம் அசத்தியம் (பொய்). இவைகள் நாசமடைகின்றன. மனது உள் பார்வையால் பிந்து நாதங்களைக் கேட்டு லயித்துப்போகிறது. இதுதான் "நிர் விகல்ப சமாதி" என்பதாம். இவ்வானந்தத்தை நாடி நமது லக்ஷயம் (கவனம்) இருக்கும். புருவமிரண்டிற்கு நடுவில் லக்ஷயத்தை நிறுத்தினுல், பிராணனுனது பிரம்ம ரந்திரத்தில் செல்லுகிறது. (அதில் நின்று பார்த்தால்) ஜோதி தர்ஸனம் ஆகிறது. இது நித்யமான (அழியாத) முக்தி. இது சாஸ்வதமான பேரானந்தம். இந்த நிலையில் மனதை எந்நேரமும் நிறுத்தவேண்டியது. (பரமாத்மாவின்) இடம் இதுதான். இங்கிருந்து எல்லாம் உண்டாகின்றன.

60. இந்த நிலையில் நின்று கண்டால், எல்லாவற்றிலும், பரமாத்மாவைக் காணலாம். இதுவே ஜீவாத்மாவுக்கு மேலான நிலை. ஜீவனுடைய உண்மையான இடம், உருவமற்றதும் பிரிக்கப்படாததும். அகண்டமானவர் கடவுள். அவர் (கடவுள்) சரவஸ்துக்களிலும் ஸ்தாவர வஸ்துக்களிலும் வியாபித்திருக்கிறுர். அவர் இரண்டற்ற ஒருவரே. எல்லாம் ஒன்றுகி நிறைந்திருக்கிறுர். வேதங்களுண்டானதும் அவரிடமிருந்தே. அறிவு எனும் ராஜ்யம் உடையவர். அறிவேயான ஜீவன் முக்தியைத் தந்தருளும் கர்த்தா. அவரே மனம் என்பதற்கு நிலை. அவ்வறிவுருவானவரை அறிந்து அறிந்து நின்றுல்தான் மனுஷ்யன் எனப்படலாம்.

61. உண்மை எதுவென்று ஆராய்ந்து அறியத் தலைப்பட்டவனே "ஸந்யாசி"; "யோகி"யும் அவனே. "பறையன்" எனும் வித்யாஸம் வெளி நடவடிக்கைகளில்தான்.

உள் நடவடிக்கைகளில் வித்யாசங்களில்லாமல் யாவரும் ஒன்றே. இறந்த பின்னர் "பறையன்" என்பதில்லையன்றோ? மதம் (கர்வம்) மத்ஸரம் உள்ளவனும் ஆத்ம (சமய) சம்பந்தமான விஷயங்களில் வீண் தர்க்கம் பேசுகிறவனும், பின்னால் நிந்தனை செய்கிறவனும் பறையனாவான். தையல் என்பது நூலைக் கோர்த்துத் துணியில் தைப்பது அல்ல. மனதையும் புத்தியையும் தைப்பது; மனதை புத்திக்குள் செலுத்துதலாம். ஆண், பெண் என்கிற வேறுபாடும் இப்படித்தான். உண்மையில் ஆண்பிள்ளை என்றால் உள்நோக்கில் ஆழ்ந்தவன்; பெண் என்றால் வெளி விஷயங்களில் ஈடுபடுகிறவள். புத்தி (புள் பார்வைத் திண்ணம்) ஸ்திரத்துவம் உடையராயின், ஆண் எனல் ஆகும். (ஸ்திரத்துவம் குறையக் குறைய பெண் எனலாம்.) ஆகவே இவ்வேறுபாடும், வெளி விஷயமே. உள் நடவடிக்கைகளில் இவ்வகையான வேற்றுமை இல்லை. புத்தியும் அறிவும் ஒரு கடையில் நின்று ஆராய்ந்து ஆத்மாவை அறியுமாயின் வெளி வகையில் பெண் என்றிருந்தாலும், உள் அறியும் திண்மையால், ஆத்மானுபவத்தால் ஆணாகிறான்.

62. சரீரம் ஒரு மலையிலுள்ள குகை. இந்த குகைக்குள் ஆத்மா வசிக்கிறது. இப்படி வாசம் செய்து மோக்ஷத்தை அடைய வேண்டியது. (சரீரத்தின்) அவயவங்கள் வெளிக்கு வெவ்வேறாகக் காணப்படுகின்றன. உள்ளில் ஒன்றாய்ப் பிரிக்கப்படாத ஏகமாய் இருக்கிறது. 'ஓம்' என்பது ப்ரணவம். உருவமெல்லாம் வியாபித்து நிற்பது ப்ரணவம்; ஓங்காரம் என்பது சரீரம் இல்லாததும், உருவமில்லாததும்.

63. பக்தி முதலில் சுயநலங் கருதும், பின்னால் சுய நலமின்றி நிற்கும். (ஒருவன்) பூர்ண பதவியையடைந்தபின்,

இந்த ப்ரபஞ்ச மெல்லாந் தானே யாகத் தன் அனு பவத்தில் காண்கிருன். இவ்வுலகம் குருவாகிறது.

64. ஹட யோகம் என்பது தற்சுகம் பேணல். ஹட யோகத்தில் தன் நலத்தை வேண்டுகிருன். தான் நல்ல வனுக வேண்டுகிருன். தனக்குப் பேரும் கீர்த்தியும் வரவேண்டுமென்றும், தான் சூர்யோதய மாகாமல் நிறுத்தி விடலாம் என்றும், இந்த மண்மேடு தங்கமாக வேண்டு மென்றும், தானே பிரம்மா ஆய்விட்டான் என்றும் சொல்லுவது தகுதியல்ல. கடவுளே! எல்லாம் நீயே. ஜகத்தெல்லாம் நீயே. எல்லாம் என்ருல் தானும் அடங் கியுள்ளான். ஒருவன் யோகியானுல் ஜகத்தெல்லாம் தானுகி விட்டான் என்று க்ரஹிக்கவேண்டும். தானே எல்லாம் ஆயிருப்பதாக அறிகிருன்.

65. ஒருவன் காட்டுக்குச் சென்று குகைக்குள் இருந்து கொண்டால் ஒரு மிருகம் குகைக்குள் அடை பட்டிருப்பதைப் போலாகும். இவனை விடக் காட்டில் நட்டுக்கிடக்கிற மைல் கற்கள் மேன்மையானவை. அக் கற்களால் இவ்வளவு தூரம் என்று தெரிகிறது. இவனுல் அத்தகைய பிரயோஜனமும் இல்லை. தீர்க்க ஆலோசனை உள்ளவன் தெரிந்து, ஒவ்வொன்ருய்த் தியாகம் செய்து, தள்ளிவிட வேண்டியது. ஒருவன் சாப்பிட்டால் அவன் வயிறுதான் நிறையும்; மற்றவர் களுக்கு பிரயோஜனம் ஒன்றுமில்லை. இருளை விட்டு நீங்கினுல் போதாது; வெளிச்சத்தில் நிற்கவேண்டும்; இருள் நிறைந்த வழியில் வெளிச்சம் இருந்தால் பய மில்லை. இருளில் நடந்தால் பயம் இருந்து கொண்டி ருக்கும்.

66. ஆசைகளுடனே (பலா பேட்சையுடன்) ஆயிரம் வருஷங்கள் தபசு செய்த போதிலும், பிரயோஜனமில்லை; பலாபேட்சை யில்லாமல், ஒரு நாழிகை தபசு செய்தாலும் எல்லாந் தன் மயமாகிக் காணப்படும். (பலாபேட்சை-செய்கைகளின் பயனின் மேல் இச்சை. தன்மயம்-கடவுளில் எல்லாமும், எல்லாவற்றிலும் கடவுளும் இருப்பதாகத் தோன்றுகிற தோற்றம்.)

67. ஹடயோக மென்பது துண்டு பட்டது. ராஜயோகமென்பதே மேன்மையானது. அகண்டத்தில் எதுவாயினுந் தன்னாலாகிறது. (ஆனால்,) 'என்னாலாகின்றது'; 'நான் செய்கிறேன்' என்கிற டம்பாசாரம் செய்யக் கூடாது. (எல்லாம் கடவுளால் ஆகின்றது). (சமுத்திர) நீரிலிருந்து உப்பு உண்டாகிறது. அது நீரில் கரைந்து ஐக்கியப்பட்டுப் போகிறது. அந்த மாதிரியே பரமாத்மாவினிடத்திலிருந்து வந்த மாய்கை அதிலேயே ஐக்கியமாய் விடுகிறது.

68. "வேதாந்தம்" – 'வேதம்' என்பது மூச்சு (பிராணன்). எந்நேரமும் மூச்சைக் கொண்டு நியதியாய் சாதனம் செய்தல் வேதாந்தம் – என்பது. "வேதம்" என்பதற்கு 'இடைவிடாமல் இருப்பது' என்று அர்த்தம். இடைவிட்டது அல்ல. அந்த வேதத்தை உச்சரிப்பது நாக்கினால் அல்ல; தொண்டைக்குள்ளேயே உச்சாரணை (சொல்லுதல்) செய்கிறவர்கள் 'பிராம்மணர்கள்'. "வேதம்" என்பது ஒரே ஒரு சொல். (ஓம்). அது அக்னி சொரூபம். வேதாந்த மென்பது உருவமற்றது. மாறுதலில்லாதது. துண்டு படாதது (அகண்டமானது). வேதத்தைச் சொல்லுவதனாலேயே பிரகாசம் உண்டா

கிறது. யோகத்தில் 'தாரணை' 'தாரணை' என்பது இந்த வேதத்தை தொண்டையில் உள்ளுக்கு உள்ளே உச்சரித்தல் தான்.

69. 'ஸைகிள் பம்பி'னுல் வாயுவை நிறைவிப்பது போல, வேதாந்த விசாரத்தினுல் (வேதாந்த விசாரம்—வேதாந்தங்களைத் தெரிந்து கொண்டதினுல் ஏற்பட்ட விவேகமும் உள்நோக்கமும்) நாடிகளில் பிராண சக்தி நிறையும்படிச் செய்யவேண்டியது. பிரம்மரந்திரத்திற்கு விசாரம் (உட் பார்வை) போக வேண்டியது. நாடிகளுக்குள் இருக்கிற அழுக்கைப் போக்கி படிப்படியாய் ஏறவேண்டும். புத்தியும் மனதும் ஒன்ருகி பரமாத்மாவினிடத்தில் சேரவேண்டியது. பரமாத்மாவில் கலந்து கொள்ளவேண்டியது. இப்படியடைந்த பதவியாகிய மேல் மாளிகையில்-நீ-ஏறி உட்கார வேண்டியது. அரசாட்சி இடம் புத்தி. புத்தியும் அறிவும் ஒரே இடத்தில் நின்று பார்க்கவேண்டும். (பரமாத்மாவினிடத்தில் சேர வேண்டியது.) நித்யம், நித்யானந்தமான அமிர்தத்தைக் குடிக்கவேண்டியது. அந்த ஆனந்த அமிர்தத்தில் அழுந்தி இரண்டறக் கலந்துபோகவேண்டும். இப்படியொன்ருகிக் கலந்த நித்யானந்தர்கள் யாவர் எனத் தெரிந்து ஆங்கு அறியப்படும் ரஹஸியத்தை நீயும் அறிய வேண்டும். ஆனந்த பிரம்மத்தினிடத்தில் உள்ள ரஹஸியத்தைப் பார்த்துத் தீரவேண்டும். நிஜமாக குண்டலினீ சக்தி எழுப்பப்பட்டு, ஒரு குழந்தையைத் தொட்டிலில் போட்டு ஆட்டி, தூங்கச் செய்வது போல, நமது ஞாபகத்தை சிரஸில் நிறுத்தி, ஆட்டி, ஆட்டி, ஆராய்ந்து அறியவேண்டியது. பரமானந்தமும் சதானந்தமும் அங்கேதான் இருக்கின்றன. சிவலிங்கத்தில் (தலையில்)

சேரவேண்டியது. அதனில் நீயும் அப்படி ஒன்றாய் ஐக்யமாக வேண்டியது.

70. நெருப்புக் குச்சியை உறைத்து, அக்னியை பிரகாசிக்கச் செய்து, ஒவ்வொரு நாளும் சமைக்கவேண்டும். அப்படிச் செய்வதில், எவ்விதமான பேதங்களும், வித்யாசங்களும் இருக்கக்கூடாது. பாத்திரம் நன்றாய்ச் சூடு ஏறிய பிறகு, அதில் ஜலத்தை விடவேண்டியது. அதுபோல் நல்ல விவேகம் உண்டானவர்களுக்கு ஆத்ம ஞானத்தைத் தெரியப்படுத்த வேண்டியது

71. வயிற்றில் நன்றாய் பசியில்லாதவனுக்கு ஆகாரம் கொடுத்தால் அஜீர்ணத்தை உண்டாக்கிவிடும். வயிறு நிறைந்து உள்ளவனுக்கு (உலகப் பற்று நிறைந்தவனுக்கு ஞானம் வேண்டும் என்கிற) பசியில்லை. நன்றாய் ஆடைகளைத் தரித்தவனுக்குத்தான் குளிர் அதிகமாகத் தோன்றும். (ஆடைகள் - உலகப்பற்றுகள். குளிர் - அஞ்ஞானம்).

72. 'ரெயிலில்' உட்கார்ந்து ஒருவன் காசிக்குப் போகவேண்டும். "சிவானந்தம்" என்னும் நகரத்தைச் சேரவேண்டும்; "சாந்தி" என்னும் ஊருக்குப் போக வேண்டும்; "பிரம்மானந்த புர"த்தில் தங்கவேண்டும். (ரெயில் - குண்டலினீ சக்தி.)

73. ஒரு மனுஷ்யன் தன்னை 'யார்?' என்று அறிய வேண்டும். மனது இல்லாதவனே மனுஷ்யன். (மனசு இல்லாதவன் - மனதை ஜயித்தவன்.) அவன்தான் சந்நியாசி; அவன்தான் யோகி; அவன்தான் தன்னை (ஆத்மாவை) எல்லாவற்றிலும் பார்க்கிறவன். ஒருவன் நல்ல வெயிலில் அலைந்துவிட்டு, ஒரு இருட்டு அறைக்குள்

புகுந்தால், அவனது நிலைமை என்ன நிலைமை? ஐந்து நிமிஷம் சூர்யனை உற்றுப் பார்த்து, இருட்டறையில் பார்த்தால் யாதொன்றுந் தெரியாது. உடனுக்கு உடன் பார்த்தால் இப்படித்தான் இருக்கும். சற்று நிதானித்தல் வேண்டும். அப்படி ஒருவன் தன் உள் நோக்கினால் உள்ளே உற்றுப் பார்க்கவேண்டும்.

74. ஒரு நல்ல வாழைக்கனி தின்பதற்கு ருசியாக (இனிப்பாக) இருக்கிறது. காயாய் இருக்கும்போது ருசி, துவர்க்கும். இவ்விரண்டு (ருசி பேதங்களு)ம் ஒரே மரத்திலுண்டானவற்றில்தான் காணப்படுகின்றன. வித்யாசத்திற்கு சமயம்தான் காரணம். ஒரு தென்னங் காயைப் பூமியில் நட்டால் உடனே செடியாவதில்லை. முதலில் சிறுமுளையாக மேல்கிளம்பி, நாளாவட்டத்தில் செடியாகி மரம் ஆகிறது. இளம் பிஞ்சு, கையினால் தொட்டுப் பார்த்தாலும், கூடவே கைக்கு வந்துவிடுகிறது. முற்றல் காய் அப்படி வராது; அம்மாதிரியே, மற்ற ஜனங்கள், யார் என்ன சொன்னபோதிலும், நம்மைப்பற்றி அவர்கள் என்ன பேசிக்கொண்டாலும், அதனால் கலவரம் அடையாமல், நம்முடைய மனது நமது ஸ்வாதீனத்தில் இருக்கவேண்டும். இதுதான் ஒருவன் தன்னுடைய ஜீவித காலத்தில் சாதிக்கவேண்டியது. தன்னுடைய உத்தேசத்தை இம்மாதிரியாக நிறைவேற்ற வேண்டும். தம்முடைய கழுத்தே இதனால் போன போதிலும், பயப்படாமல் செய்யவேண்டும். மனதினால் நாம் ஒரு அடி அடிக்க வேண்டுமேயல்லாது, பிரம்பினாலாவது, கையினாலாவது, அடிக்கக்கூடாது. கயிறு இல்லாமல் ஒருவனைக் கட்டப் பழகவேண்டும்.

இதைத்தான் ஒருவன் தன் வாழ்க்கைக் காலத்தில் செய்து முடிக்கவேண்டியது.

75. மனதில் நினைத்து, கெடுதியாக விளையும் காரியங்களைச் செய்தல் பாவமாம், இதற்குக் காரணம் மனதின் செயல். மனது இல்லாவிட்டால் பேச்சே இல்லை. போவதுமில்லை. வருவதுமில்லை. ஒன்றும் ஆவதில்லை. மனது இல்லாவிட்டால், எந்தச் செயலும் தோன்றவும் தோன்றாது; செய்யவும் மாட்டோம்; எதுவும் ஆகாது. ஒருவனுக்கு இங்க்லிஷ் பாஷையைப் பேசுவதற்குத் தெரியும்; எழுதுவதற்குத் தெரியாது; பேசுவதற்கு மாத்திரம் தெரிந்திருந்தால் அவன் பாஸ் இல்லை, (பாஷையை சம்பூர்ணமாய்த் தெரிந்தவனென்று சொல்லப்படான்.) இரண்டும் தெரிந்திருக்கவேண்டியது. அப்போதுதான் அவனை 'பாஸ் செய்தவன்' என்போம்.

76. ஐந்து வருஷத்திய குழந்தைக்கும் கடவுள் ஒருவர் உண்டென்று தெரியும். ஆனால், கடவுள் எங்கு இருக்கிறார்? என்பது தெரியாது. சூரியன் எல்லாரையும் பார்க்கிறான். ஆனால் ஒன்று. லக்ஷம் ஜனங்களில் இரண்டொருவர் மட்டும் (ஒருவன் அல்லது இருவர் மாத்திரம்) சூரியனைப் பார்ப்பார்கள். இந்த உலகத்தில் முக்கால் பங்கு ஜனங்கள் அதோகதி. (மிருகங்களைப் போல், விஷய சுகங்களையே விரும்புகிறார்கள்.) மத்திய கதியிலுள்ளவர்கள், கால் பங்கைவிட மிகக் குறைவு. ஸத் காரியங்கள் மிகமிகக் குறைவு. கெட்ட காரியங்களைச் செய்கிறவர்களோ, அநேகம்; அநேகம்.

77. "சத்" என்பதில் "சித்" என்பதை ஐக்கியப் படுத்தினவர்கள், ஸ்வாமியார்கள். (சத் - எப்போதும்

நிலைத்திருப்பது. சித் - எதையும் அறிவது.) உபாதி என்பது -சாந்தி விருட்சம். (இதனுடைய நிழலில் இளைப்பாறுதல் ஆம்.) சாந்தி விருட்சத்தைச் சேர வேண்டும்.

78. பிரம்மத்தினிடத்தில் (கடவுளில்) யார் ஒன்று பட்டு இருக்கின்றார்களோ, அவர்கள் 'பிரம்மச்சாரி'கள். அவர்கள் பறையர்களானாலும் சரி. யாரானாலும் சரி. ஆனால், "ஸ்வாமி" என்றால், ஒருவன், கையில் தண்டம் பிடித்து, காவி வஸ்திரம் உடுத்து, பகவத் கீதை கையிலேந்தி, கண்டவர்களுடன் எல்லாம் தர்க்கம் பேசித் திரிகிறவன் 'ஸ்வாமியார்' ஆகமாட்டான்.

79. தங்கம், நெருப்பில் வைத்து உருக்கினால் ப்ரகாசத்தை எப்படிப் பெறுகிறதோ, அப்படி, தன் உள்ளே இருக்கிற காம - க்ரோதாதிகளைக் கொன்றுவிட்டு, உள்ளுக்கு தன்னுடைய மனோ வியாபாரத்தையும் சீர்ப்படுத்தி, உள் பழக்கத்தை கையாடவேண்டும். ஒரு மனிதனுடைய மனது ஒரே நிலைமையில் எப்போதும் இருக்காது.

80. ஒருவன் எவ்வளவு கெட்ட வாசனையுள்ளவனாக இருந்தாலும் ஐந்து நிமிஷத்திற்குள் அவனது மனோ நிலைமையை மாற்றிவிடலாம். மேகங்கள் இருக்கிறவரைக்கும், சூரியனுடைய கிரணங்கள் பிரகாசிக்கிறதில்லை. மேகங்கள் எல்லா திக்குகளிலும் சிதறிப் போய்விட்டால், சூரியன் காணப்படுகிறான். "ஓம்-காரமே சாந்தி என்னும் நாடு. ஓங்காரமே சாந்தமாகிய ஆகாரம் (ரூபம்). ஓங்காரத்துக்கே நமஸ்காரம். (ஓம் என்பது - கடவுள்; கடவுளுடைய நிலைமை - ஏகாந்தம்.)

81. ஆஹார விஷயத்தில் கணக்கு (கட்டுப்பாடு) வேண்டியதில்லை. யோக சாதனை செய்கிறவன் சாப்பிடாமல் செய்யவேண்டுமென்று இல்லை. சாப்பிட வேண்டும். கொஞ்சம், கொஞ்சமாகக் சாப்பிடலாம். பாதி வயிறு ஆஹாரமும், கால் பாகம் ஜலமும் எடுத்துக் கொள்ளலாம். நித்திரை சுகத்தை அதிகமாக வேண்டல் ஆகாது.

82. அக்கினியில் எதுவும் எரிக்கப்பட்டு விடுகிறது. 'இது நல்லது', 'இது கெட்டது' என்று பார்க்காமல் எரித்து விடுகிறது. அப்படியே, கர்மம் செய்கிறவர்கள் எதையும் தின்னலாம். கர்மம் செய்யாத (இல்லாத) வர்களுக்குத் தாங்கள் என்ன செய்யவேண்டுமென்பதே தெரியாது. அவர்களுக்கு அஜீர்ணம்தான் ஆகும். அக்னி சரியாக இருக்கிறவர்கள் எதையும் தின்னலாம். ஜீர்ணமாகும். நித்திரையும் வேண்டும். மிதமான நித்திரை வேண்டும். வயிறு நிறைகிறவரைக்கும் சாப்பிடக்கூடாது. எப்பொழுதும், கொஞ்சம் குறைய, ஒரே மாதிரியாக சாப்பிட்டுக் கொண்டு வரவேண்டும்.

83. கழுத்துக்குத் தங்கச் சலங்கை; காதுக்குக் குண்டலம், அல்லது கடுக்கன்; கைக்கு மோதிரம் இருந்தால் பயம் உண்டு. அவை உடம்பின் மேல் இருக்கிற வரைக்கும் பயம் உண்டு. பயத்துக்குக் காரணம் பணம் தான். சரீரத்தின் பேரில் தங்கம் இல்லாவிட்டால் பயமே இல்லை. (தங்கம், பணம் - உலக விஷய வாஞ்சைகள். பயம் - மரண பயம்.)

84. பயம் என்பது மனதில் தோன்றிய பாவனை. சூக்ஷ்ம திருஷ்டிக்கு (உட் பார்வைக்கு) பயம் என்பது கிடையாது. வெளிப் பார்வையுடையவனுக்குத் (உள்

பார்வையில்லாதவனுக்குத்)தான் பயம். கண்ணில்லாத குருடனுக்கு வண்டி இது என்று தெரிந்து சொல்வதற்கு முடியாது. அதே பிரகாரம் காரண குரு இல்லாத ஒருவனுக்கு இடமில்லை. (இடம் - ஞான சித்திக்கு இடம்.)

85. அன்ன மயம் என்றால் பிராண மயம். (அன்னம் - பிராணன்.) கையிலிருக்கும் பணத்தை சிந்தியாமல் பெட்டியில் வைத்திருந்தால் அது அப்படியே பெரிய நிதியாக இருக்கும். அதிலிருந்து நாம் செலவு செய்யச் செய்யப் பணம் குறைந்து கொண்டே போகும். பணம் என்பது ஜீவன். பெட்டி என்பது புத்தி. (நிறைந்த) அந்தப் பெட்டியில் எதுவும் வேண்டுமென்று இல்லை. தன்னிடத்தில் உள்ளதைத் (தன்னைத்) தான் நோக்கி அறிந்தால், வேறெதுவும் தனக்கு வேண்டுமென்று இராது. கையில் இருக்கும் சாதனத்தை உள்ளில் நடத்தி, பிரம்ம ரந்திரத்தில் ஐக்கியம் செய்தால், வேறு எதுவும் வேண்டுமென்று இல்லை. அதோ கதியை விட்டு விட்டு "மத்திய கதி" என்கிற ராஜ மார்க்கத்தைக் காண்பித்துக் கொடுப்பதே அன்னம்.

86. "ராம" என்று சொல்வது நிஜமாகவே "ராம" (என்னும் ஆனந்தத்தைத்) தான். (ராம - ஆனந்தம்.) நித்யாத்மாவே "ராம". நிஜானந்தமே "ராம". அந்த ராத்ம ஆனந்தமே "ராம". குண்டலினி சக்தியின் பூர்ண ப்ரகாசமே "ராம". மனஸே "ராம". கர்மேந்திரியங்கள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும் ஆகிய இப்பத்து இந்திரியங்களைக்கூடி நடத்துகிறது எதுவோ, அதுவே "ராம". 'ராம' என்றால், ஆத்மா. 'ராவணன்'

என்றால், தன்னுள் இருக்கிற கெட்ட குணங்கள். 'சீதை' என்பது சித்தம். 'லக்ஷ்மணன்' என்றால் லக்ஷியம். தன்னைத்தானே பார்த்துக் கொள்வதே 'கிருஷ்ணன்'. தன்னிடத்தில் தானே தன்னை பார்த்துக் கொள்கிறவனே "நித்யாத்ம ராமன்".

87. எல்லாரும் மனுஷ்யர்களே. மனுஷ்யர்களை விட மேன்மையான அவதாரம் வேறு இல்லை. மனுஷ்யனே ப்ராணிகோடிகளில் சிரேஷ்டன். அவர்களில் சூக்ஷ்ம ஆலோசனை செய்கிறவர்களே சிரேஷ்டர்கள்.

88. 'ஏகாதசி' என்பது ஏகாராதனை. (ஏகாராதனை - ஏக வஸ்துவைப்பற்றி ஆராதித்தல்.) அதைச் செய்கிற எல்லா நாளும் ஏகாதசியே. அப்படி ஏகாதசியைச் செய்கிறவர்களே மனுஷ்யர்கள். சூக்ஷ்ம (பரமாத்ம) விசாரத்தில் ஒரு மணி நேரம் (செலவிட்டு), ஸ்தூல ப்ரபஞ்ச) விசாரத்தில் ஒரு நிமிஷம் செலவிடலாம்.

89. ஸ்மசான வைராக்யம் என்பது விபூதி வைராக்யம்; அப்போதைக்குத் தோன்றுகிற வைராக்யம்; இது சரீரத்தின் ரஹஸ்யம். ஆனால் குருவினால் காட்டிக் கொடுக்கப்பட்ட வைராக்யத்தை விடக்கூடாது. வைராக்யத்தினாலேயே, ஒருவன் பந்தத்திலிருந்து விடுபடுகிறான். இது முதல் தரமான வைராக்யம். குரு என்பது இரண்டாவது தரம். தனக்கு உபதேசம் வேண்டியது என்று இச்சிப்பது மூன்றாவது தரம். ஒரு குருவைப் போய்ச் சேர்வதும், குரு கிடைக்க வேண்டுமென்பதும் இரண்டாவது வர்க்கம். அதைச்செய்து முடித்து அனுபவத்தைப் பெறுவது புருஷார்த்த வைராக்யம். (முத்தி யடைகிற வைராக்யம்.) ஒருவன் இதை எல்லாம் சாதித்து

மற்றவர்களுக்குச் சொல்லி வைக்கக்கூடியது,யோக ஆனந்த வைராக்யம். அது அகண்டமான பதவி. அது சாந்தி விருட்சம். தலையில் இருக்கிற அந்தச் சாந்தி மரத்தினை யடைந்து, அதில் நின்ற நிலையில் நிலைத்திருப்பதே அகண்ட வைராக்யம். ஆசாபாசப் பற்றுகளினுடைய ஆணி வேரைப் பிடுங்கி எறிவதே அகண்ட வைராக்யம். காம க்ரோத முதலான துர்க்குணங்களை விடுவதே முதல்தர மான வைராக்யம். சம்சாரத்தில் இருந்துகொண்டு ஸ்வல்ப சுகத்தை அனுபவித்து, அனந்தரம் துக்கம் சம் பவிக்கையில், எல்லாவற்றையும் தியாகம் செய்வது இரண்டாவது வைராக்யம். "வைராக்யம்" என்றால் ஜீவன் முக்திப் பதவி. 'வைராக்யம்' என்றால் உலக பந்தத்தி லிருந்து விடுபடுதல். இந்த ஜன்மத்திலேயே விடுபடுதலாம்.

90. விசுவாசம் இல்லாதவர்களுக்கு வைராக்கியம் இல்லை. மனது இல்லாதவர்களுக்கு வாசனைகளும் இல்லை. விசுவாசம் இல்லாதவர்களுக்குப் பலனும் இல்லை. (பலன் கிடைக்காது). ஒரு வைரத்தை நாம் ஐயாயிரம் ஆறுயிரம் கொடுத்து வாங்குவது நமது மன தின் பிரமை. நாம் வாங்குவதற்கே மனதில்லாவிட்டால் அந்த வைரத்திற்கு மண்ணாங் கட்டியின் மதிப்பே.

91. பட்ச பூதங்களில் நான்கு பூதங்கள் - மண் - நீர் - அக்னி - வாயு - (ஐந்தாவது) ஆகாசம். அகண்டமான வெளி. பூமியோ பரந்திருக்கிறதாக வுள்ளது. நீருக்கு மேல் வாயு. வாயுவுக்கு மேல் ஆகாசம். சமுத்திரம் எல்லை. பூமியானது இருக்குமிடம். ஆகாசம் வீடு. மேலே வாயு. கீழே பூமி. பூமி அல்லது மண் சிவப்பு. வாயு வெண்மை. நான்கு பூதங்களினால் ஆக்கப்பட்ட பூமி உருண்டை அல்ல; த்ரிகோணம். சூரியன் சந்திரனுக்கு

இடையில் சுழி முனை நாடி. சுழி முனை அகண்டமானது. பூமியானது நமது முகத்தைப்போல், ஆகாரம் (வடிவம்) உள்ளது.

92. வாயுவிற்கு நாசம் இல்லை. அதுவும் அகண்டமானதே. அது எல்லாவற்றிலும் இருக்கிறது. ஒரு விளக்கினுடைய கண்ணாடி 'சிம்னி'யை மறைத்தால் பிரகாசம் இல்லை. அதை மூடாமல் இருந்தால் தீபத்தின் பிரகாசம் இருக்கிறது. மண்கட்டியை எடுத்துக்கொண்டு 'இது சர்க்கரை' என்று நினைத்துக்கொண்டால் நினைப்பில் மாத்திரம்தான் சர்க்கரை. மண்ணினுடைய இயல்பு மாறாது. அப்படி மனுஷ்யன் ஒருவன் யோகியானாலும், ஞானியானாலும், சரீரத்தினுடைய சுபாவம் விட்டுப் போவதில்லை. மனது மாத்திரம் ஐக்கியமாய் இருக்கிறதே தவிர, சரீரம் ஐக்கியம் ஆகவில்லை. ஞானிகளுக்குச் சரீர அவஸ்தை உள்ளதுதான். ஆனால், அவர்களுக்கு மனது இல்லாதிருப்பதினால், அவர்களுக்கு உள்ள சரீர அவஸ்தையைப் பற்றிய நினைப்பு இல்லை. (நினைப்பு-கவனிப்பு.) எப்படி நித்திரையில் சர்ப்பம் கடித்தால் சர்ப்பமென்று நினைப்பிற்குத் தெரிகிறதில்லையோ, அந்தத் தோஷமும் அவர்களைப் பாதிக்கிறதும் இல்லையோ, அப்படி ஞானிகளுக்குச் சரீர அவஸ்தை கவனத்திற்கு வருவதில்லை. ஆகவே, அந்தச் சரீர அவஸ்தைகள் அவர்களை பாதிக்கிறதும் இல்லை. ஐந்து, ஆறு மாத வயதுள்ள சிறு குழந்தைகள் கையில் இங்கிலீஷ் முதலிய பாஷைகளில் எழுதிய கடிதத்தைக் கொடுத்தால் அவர்கள் அதை வீசி விடுகிறார்கள். அதில் எழுதியிருக்கும் சங்கதியையும் அவர்கள் அறிகிறதில்லை. ஆறு மாதக் குழந்தை கையில் ஒரு வயிரத்தைக் கொடுத்தால், அதற்கு வயிரமும் ஒன்றுதான்;

மண்கட்டியும் ஒன்றுதான். அத்தகைய குழந்தைகளுக்கு அவர்களின் சரீரத்தைப் பற்றிய பாவனையே இல்லை. ஆத்ம பாவனை உண்டு. குழந்தைகளுக்குப் பேத பாவனை இல்லை. ஆனால் அவர்களுடைய மூளை முதிர்ந்த பின், (வித்யாசங்களை) அறிகிற புத்தி வருகிறது. அவர்களுடைய மூளை முதிர்ச்சி அடையாது இருப்பின் பிராண சக்தி அச்சிறு குழந்தையின் சுழிமுனையில்தான் இருக்கும். (மத்திம ஸ்வாசம் - சுழிமுனை.)

93. குழந்தைக்கு ஒவ்வொரு மாதம் ஆக ஆக விஷய ஞானங்கள் ஒவ்வொன்றாய் வருகின்றன. இப்படி ஆதியில் குழந்தைகள் பெற்ற ஞானம் ஒன்றும் பிரயோஜனப் படுவதில்லை. எல்லாவிதமான ஞானங்களையும் அறிந்த பின் அவர்கள் குழந்தைகளைப்போல் இருப்பார்கள். ஒரு ஞானியினுடைய அவஸ்தை ஆறு மாதக் குழந்தையின் அவஸ்தை போலும். அது மல மூத்திர வித்யாஸம் இரண்டையும் பிரித்து அறியாது. அப்படித்தான் ஞானிகளும். ஞானிகளுக்கு ஒரு வஸ்து வேண்டுமென்றும் ஒரு வஸ்து வேண்டாமென்றும் இல்லை. விஷத்தின் பாவனையுமில்லை. விஷம் கொடுக்கிறவர்கள் (தான் அப் பாவனையை) ஆலோசனை செய்துகொள்ள வேண்டும். தின்கின்றவர்கள் அதைப்பற்றிய லட்சியம் செய்வதில்லை. அம்மாதிரி ஞானி. ஞானிக்குத் தன் உள்ளில் 'சாப்பாடு வேண்டும்;' அல்லது 'வேண்டாம்;' என்பது கிடையாது. அவர்கள் எந்நேரமும் அந்தராத்மாவிலேயே ஆழ்ந்திருப்பார்கள்.

94. தென்னங் காயைப் போல் நமது தலை உள்ளது. அதிலும் நீரும் பருப்பும் உள்ளது. அதுபோல் நமது சிரஸி

லும் நீரும், சிப்பியும் உள்ளது; பிரகாசமும் இருக்கிறது. அதுதான் ஹ்ருதய ஆகாசம்; அதுதான் ஹ்ருதயாகாசக் கிணறு. அதிலிருந்து நீர் எடுத்துக் குடிக்கவேண்டும். பூமியில் இருக்கிற கிணற்று நீரைக் குடிப்பதில் பிரயோஜனமில்லை.

95. ஒரு வஸ்துவைக் கையில் வைத்துக்கொண்டு, அதை மற்ற இடங்களில் தேடினால் காணப்படுவதில்லை. ஒரு மாளிகையில் தீபத்தை வைத்து, வாசலை மூடி வைத்தால் கீழே ப்ரகாசம் காணப்படுவதில்லை. சினிமாவைப் பார்ப்பதும், ஒரு நாடகத்தை பார்ப்பதும், எல்லாம் தலைக்குள்ளேயாம். எல்லாவற்றையும் தலைக்குள் இருந்தே பார்க்கவேண்டும். அந்த இடத்திலிருந்தே எல்லாவற்றையும் பார்க்க வேண்டும். (வெளியில்) ஒவ்வொரு இடத்திற்குப்போய் ஒவ்வொரு வஸ்துவைப் பார்க்க வேண்டியது போலில்லை. அதே ப்ரகாரம், மதராஸ் பட்டணமும் தன்னிலே காணப்படும். இங்கே வெளியிலும் காணலாம். ஒரே இடத்திலிருந்து கொண்டு (எல்லாவற்றையும்) பார்ப்பது நல்லது. நம்முடைய தலைக்குள்ளேயே *“சாயா தரிசனம்” செய்யவேண்டியது. எல்லாம் நம்முடைய மூளையிலேயே பார்க்கவேண்டியது. ஹ்ருதயம் என்றால் கீழே அல்ல; மேலே தான். சமையல் செய்யும் போது எப்படி அக்னி எரிந்து, எரிந்து மேலே கிளம்புகின்றதோ, அப்படியே ஹ்ருதயத்திலிருந்து, ப்ரகாசம் வியாபிப்பது. ஹ்ருதயத்தில் இருள் என்பதே இல்லை. ஒருவனுடைய சிரஸை வெட்டி விட்டால், அவனுடைய

* தன் நிழலைப் பார்த்து வெளிமுகமாயறிவது “சாயா தரிசனம்” என்பர். ஆனால் தன்னுள் நோக்கித் தன்னையறிவதே உண்மையான “சாயா தரிசனம்” ஆகும.

முண்டத்தைப் பார்த்து, இன்னவனுடைய முண்டம் என்று சொல்வதற்கு முடியாது. கண்ணின் மூலமாக, அதிலிருந்து எது பார்த்து அறிகிறதோ, அதுதான் ஹ்ருதயம். உள் நோக்கி அறிகிற சக்தியை உபயோகப் படுத்த வேண்டும். 'ஹ்ருதய ஆகாசம்' என்பது த்ரி கோணுகாரமாக இருக்கிற நமது முகமே. முகத்தைப் பார்த்து ஒருவனைக்குறிப்பாய்த் தெரிந்து கொள்ளலாம். அப்படித் தன்னுடைய உள் நோக்கத்தின் குறிப்பு தானே தெரிந்து கொள்ளவேண்டும். தன்னுள்ளே தானே தன்னுடைய பூரணமான ஸ்திதியைத் தெரிந்துகொள்ள வேண்டும். எவ்வளவு பிரயாசைப்பட்டாலும் தன்னைத் தான் தெரிந்து கொள்ளத்தான் வேண்டும்.

96. நமக்கு இருக்கும் பக்தி எவ்வளவு எவ்வளவோ, அவ்வளவு அவ்வளவே முக்தி. நல்ல பிரயாசைப்பட்டு பிரயத்தனம் செய்தால் நல்ல சம்பளம். சொற்ப பிர யாசையானல் சொற்பச் சம்பளம்.

97. சின்னஞ் சிறு வயதில் தந்தை தாய்கள் என்கிற விசாரமே இல்லை. பெரியவர்கள் ஆன பிற்பாடு தெரி கிறது. கோழி அரிசியைப் பொறுக்கித் தின்னும்போது, எல்லாந் தன் பக்கத்துக்கு (கால்களினல்) இழுக்கிறது. அதுபோல் மனிதனுடைய புத்தி வளர வளர, தன்னலப் பற்று உண்டாகிறது. ஒவ்வொரு நாளும் மனிதர்கள் இறக்கிருர்கள். பிரதி தினமும் பிறக்கிருர்கள். துண்டு துண்டாக இருக்கிற வஸ்துக்கள் அகண்ட வஸ்துவில் போய் ஐக்கியமாய்விடுகின்றன. அப்போது தன்னல மென்பது பரிபூர்ணமாக விட்டுபோகிறது. அதே ப்ர காரம், அரிசியிலிருந்து எத்தனையோ தின்பண்டங்கள்

ஆகின்றன; அம்பிலி (கூழ்) ஹல்வா முதலானவை; அப்படி ஆனவைகளை அரிசி என்று சொல்வதில்லை.

98. நீரில்லாத பாத்திரத்தினால் ப்ரயோஜனம் இல்லை. நீர் பக்தி. பாத்திரம் புத்தி. சூக்ஷ்ம பக்தி இல்லாதவன் மனுஷ்யன் அல்ல. ஆவேசம் வருவதும், தோற்றங்கள் தோன்றுவதைச் சொல்லுவதும் சக்தியல்ல; யுக்தி; இது அதோ கதி (கீழுக்குக் கொண்டுபோகிற பாபகதி). சக்தி மத்யம கதியாய் இருக்கிறது. யுக்தி உடலின் கூறு. (அல்லது சரீர பாவனை). சக்தி ஆத்மாவின் கூறு. அக்னி ஸ்வரூபமான ஆத்ம சக்திக்குமுன் யுக்தி (சக்தியற்றதாய் விடும்.) நிற்பதற்குக்கூட த்ராணி இல்லாது போகும்.)

99. எல்லா வஸ்துக்களுக்கும் (பழங்களுக்கும்) விதை உள்ளேயிருக்கிறது. முந்திரிப் பழத்திற்கு மட்டும் விதை வெளியில் இருக்கிறது. நம்முடைய மன்தானது முந்திரிப் பருப்பைப்போல சம்ஸாரத்திற்குப் புறம்பாக இருக்க வேண்டும். தான் மாத்திரம் சர்க்கரை தின்றுவிட்டு மற்றவர்களுக்கு மண் கொடுக்கக்கூடாது. தான் ராஜ மார்க்கத்தில் போவதும், மற்றவர்களுக்குக் காட்டு வழி காட்டுவதும் கூடாது. அவர்களுக்கும் ராஜ மார்க்கத்தைக் காட்டித் தருவதே கடமை. (ஏனெனில்,) இப்பொழுதோ, கொஞ்சம் தாமதித்தோ, அல்லது நாளைக்கோ என்று சொல்வதற்கு (நமது நிலை) நிச்சயமில்லை.

100. ரெயில் வண்டி, வேறொரு (பக்கத்து) ஸ்டேஷனிலிருந்து புறப்படும்போது இந்த ஸ்டேஷனுக்குத் தந்தி வருகிறது. மணி அடிக்கப்படுகிறது. அப்படி மணி

என்பது பிந்து நாதம். ஒரு கிணற்றுக்குள் கல்லைப் போட்டால் சப்தம் கேட்கிறது. அதைப்போல் நம்முடைய தலையிலும் உள்ளது.

*101.* ஒன்றாவது வகுப்பு பாஸ் ஆகி, இரண்டாவது வகுப்புக்குப் போகும்போது, ஒன்றாவது வகுப்பு புஸ்தகத்தை வீசி விடுகிறார்கள். ஒருவன் நன்றாய்த் தூங்குகையில், சந்திரன், சூரியன், நக்ஷத்திரங்கள், இவைகளைப் பார்க்கிறதில்லை. எதுவும் தெரிகிறதில்லை. அப்போது மனது இல்லை. நித்திரைக்கு சூக்ஷ்மமான ஸ்திதி, ஸ்தூலமான விருத்தி இல்லை. நித்திரையில் சரீர பாவனையும் இல்லை. ஆத்ம பாவனை. ஒரே ஸ்தானத்தில் பிராணன் சஞ்சரிக்கிறபோது நாம் தூங்குகிறோம். தன்னை விட்டு மற்றதைப் பார்ப்பது பிரதி பிம்பம். மனதின் பிராந்தி ஸ்திரமல்ல. சிவனுமல்ல.

*102.* பி. ஏ., பி. எல்., பாஸ் செய்தவன் ஒரு (Gown) ("கௌன்") அங்கியை பெறுகிறான். அது கழுத்திலிருந்து கால்வரை உள்ள நாலு கை கொண்ட அங்கி. (இரண்டு கை + இரண்டு கால் = நாலு) சித்தும் சத்தும் கூடி(னால்) ஆனந்தம். பிரம்மானந்தம். பரமானந்தம். ஸ்ரீ சச்சிதானந்தம், யோகானந்தம். (உலக) போகங்களை விட்டு யோகானந்தத்தினால் ஆனந்த பரப்ரம்மத்தினுடைய ரஹஸ்யத்தைப் பார்க்கப் பார்க்க ஆனந்தம் (மிகும்). ஜீவாத்மா (பரமாத்மாவைப்) பார்த்து (கூடி அடைகிறதே) ஆனந்தம். சம்பூர்ண ஆனந்தம்.

*103.* குரு இல்லாதவர்களுக்கு நிஜ ஸ்திதி தெரிகிறதில்லை. ஜகத்தில் காரணமில்லாத காரியம் இல்லை. ஜகத்தில், இருள் விளக்காகித் தோன்றுவதே (பிரமை

தோன்றும்) ஞானம். இருள் அஞ்ஞானம். விளக்கு ஞானம். உள்ளில் வஞ்சனையை வைத்து வெளிக்கீர்த்தி சம்பாதிப்பதுகூடாது.

104. செய்ததையே சொல். சொன்னதையே செய்.

105. உன் மரண காலத்தில் காட்டுப் பாதையை விட்டு, ராஜ மார்க்கத்தைச் சேர். மரண சமயத்தில் வாத பித்த கபங்கள் நிறைந்து, நரக வாதனையாய் இருக்கும்.

106. "ஐ. ஸி. எஸ்." பாஸ் செய்தவர்களுடைய வார்த்தையைக் கேட்பதற்கு அநேகர் இருக்கிறார்கள். இதை (உள் நோக்கத்தால் தன்னைத்தானே பார்ப்பதைப் பற்றிக்) கேட்பதற்கு யாரும் இல்லை. ஜீவன் முக்திச் சுபராஜ்யத்தைச் சொல்லுவதற்கு யாராலும் சாத்தியமில்லை. ஆதியிலிருந்து சதாசிவன் சொன்ன மதம் இது ஒன்றுதான் - ஒன்றுதான் - ஒன்றுதான்.

107. சிவன் கொடுத்த கஷ்டம் கஷ்டமல்ல. சிவன் கொடுத்த துக்கம், துக்கமல்ல. அது உன்னுடைய மனதில் தோன்றிய பிராந்தி. நமது ஆதியிலும் (பிறத்தல்) துக்கம். அந்தியத்திலும் (இறத்தல்) துக்கம். வயிற்றிலிருந்து வெளியில் வரும்போது கண்ணிலிருந்து நீர் பெருகி வருகிறது.

108. எல்லாம் சிவன். நியாயான்யாயம் என்பதறிதலும் சிவன். மனமே அநியாயத்தைவிட்டு நியாயத்தைச் சேர்.

109. ஓங்கார ஸ்வரம் ஒன்றேதான். ஓங்காரம் சிருஷ்டி, லயத்துக்குக் காரணம். ஓங்காரம் மனோ லயம்

செய்கிறது. ஓங்காரம் உண்மையில் உன்னில் நித்ய ஆத்மாவாக இருக்கிறது. ஓங்காரம் என்பது பிரிக்கக் கூடாததது. துண்டுகளில் அகண்டமில்லை. ('ஓம்' என்பது எப்போதும் பாகிக்கப்படாத ஏக வஸ்து.)

109. ஆதியில் சிவ மதம் ஒன்றே (போதிக்கப்பட்டு வந்தது). ஒரு அரையில் நீ உட்கார்ந்து கதவுகளை மூடினால் வெளியிலிருக்கிற எதுவும் உனக்குத் தெரியாது. கதவுகளை மூடி உட்கார்ந்திருக்கிறபோது ஜீவன் பரமாத்மனிடத்தில் ஐக்யப்படுகிறான். கதவுகள் திறந்து வெளியில் வரும்போது, ஜீவாத்மா வேறு; பரமாத்மா வேறு.

110. ஓங்காரம் அகண்டமானது. ஓங்காரந்தான் சிருஷ்டி; ஓங்காரமே மாயை; ஓங்காரமே உள்நோக்கி ஆராயும் விசாரம் முதலிய தொழில்; ஓங்காரமே மனது; ஓங்காரமே சித்த விருத்தி; ஓங்காரமே சித்தத்தினுடைய ப்ரகாசம். சித்தத்தினாலேயே ஆசாபாசங்கள் உண்டாகின்றன.

111. 'சத்' என்பது அகண்டமான அல்லது பிரிக்கக் கூடாத சூட்சும வஸ்து. 'சித்' என்பது எப்போதும் மாறுகின்றது.

112. சத்தானது சித்துடனே கலந்தால் ஆனந்தம் ஆகிறது. இது சச்சிதானந்தம். இம்மேலான ஆனந்தம். ஸ்ரீநித்தியானந்தம். இது பரமானந்தம். ஜீவாத்மாவும் பரமாத்மாவும் கூடிய ஆனந்தம், யோகானந்தம்; இது பரமானந்தம்; இது சச்சிதானந்தம்; ப்ரம்மானந்தம்.

113. 'ஹ்ருதயாகாசம்' என்பதில், ஹ்ருதயத்தில் இருக்கிற பகவானைப் பார்; பார்; பார். நித்யானந்தமாகிய க்ருஷ்ணனைப் பார். கல்லைக் கடவுளென்று

பார்ப்பது பிராந்தி. மரண காலத்தில் சிவனால் ஏற்படும் கஷ்டம் கஷ்டமல்ல. துன்பமெல்லாம் உன்னுடைய மனதில் தோன்றும் பிராந்தி. உன்னுள் உள்நோக்கினால் அவனைப் பார்த்து ஆனந்தப்படு. மூளையிலேயே பார். மூளையிலேயே அவனைக் கொண்டாடு. நித்யானந்தனாகிய பரப்ரம்மத்தின் ரஹஸியத்தைப் பார்த்து தெரிந்துகொள். ஹ்ருதயத்தில் அவனைப் பார். உள் கண்ணினால் பார். ஸ்தூலக் கண்ணினால் பார்க்கக்கூடியதல்ல. சூக்ஷ்ம த்ருஷ்டியினால் பார். உள் பார்வையினால் ராஜ மார்க்கத்தில் பார். கீழே போகும் மார்க்கத்தைவிட்டு நடு வழியைப் பிடித்துச்சேர். அதோகதி என்பது (கடவுளின் ரஹஸியத்தை அறியாமல்) தங்கள் வெறும் சரீரங்களை அலங்கரித்துக் கொள்ளுகிறவர்கள் செல்லும் மார்க்கம்.

114. இந்த உலகத்தில் இருக்கிறவன் எவனும் பைத்தியக்காரனல்ல. (யாரும் வேண்டுமென்று முக்தி வழியைத் தள்ளிவிடவில்லை.)

115. உலக சுகத்தைவிட்டு, சூக்ஷ்ம ஆனந்தத்தை அனுபவிக்கப் பார். (சாதாரண) தூக்கத்தைவிட்டு, சூக்ஷ்ம நித்திரையைச் செய்; நீ எப்பொழுதும் இடைவிடாத ஆனந்த நித்திரையைச் செய். உள்பார்வையில் நின்று நித்திரை செய். மனதின் பிரமையைச் சுட்டுத் தொலைத்துவிடு.

116. 'உபநயனம்' செய்து கொண்டவனே 'பிராமணன்'. உலக சம்பந்தமான ஆசைகளை வேரறுத்துத் தள்ளி விடும் விஷயத்தில் உள்ள தைர்யம்(உபாதி)கொள். உன்னுடைய ஹ்ருதயத்தில் நிராசையாக இருந்து பார். உலக சம்பந்தம் வேண்டாம் என்கிற நிலையிலேயே

இருந்து பார். பேத புத்தியை விடு. நான்; நீ; என்கிற பேதங்களைச் சுட்டுத் தள்ளு.

117. முதலில் சிவன் சொன்ன மதம் ஒன்று. முதலில் ஸ்த்ரீ புருஷன் என்பது பிரகிருதி குணத்தில் (வெளிப் பார்வையில்)தான். சூக்ஷ்ம த்ருஷ்டி அல்லது சூக்ஷ்மப் பார்வையில் எல்லாம் ஒன்றுதான். உள்ளே இருக்கிற சூக்ஷ்ம ஆத்மாவுக்குக் குண தோஷங்கள் இல்லை. அந்த சூக்ஷ்ம ஆத்மாவுக்கு ஒரே லக்ஷணம் - இடைவிடாத ஆனந்தந்தான். பார்க்கிறது, கேட்கிறது, முதலான தெல்லாம் மனதின் பிரமை. உலகத்தில் அவை ஸ்திர மல்ல.

118. 'ஹரி' என்பது கடவுளல்ல. அது மாயை. 'சிவம்' என்பது கடவுள். 'ஹரி ஹரி' என்று சொல்வது மாய்கைதான். நிழலைப் பார்த்து மருள்வது வேண்டாம். 'மாயை' என்பது பாசத்திற்கு உட்படுத்தி மருட்டுவது. அது சூக்ஷ்மத்தையும் மறைவுபடுத்தும். ஸ்தூலத்தை யும் மறைவுபடுத்தும். "இது ஸ்தூலம், இது சூக்ஷ்மம்", என்று அறியாமையால் பிரமை கொள்வது பிரமையே. ஸ்தூல பிரமை ஒரு நாழிகைக்குப் பதினாறுவகை. நானு விதமான மருட்சிகள்; "அது வேறு; இது வேறு;" என் பதும் மருளே. எல்லாம் உன் மனதின் பிரமை. உன் ஹ்ருதயத்துக்குள் இருக்கிற நித்தியானந்தனுலான பிராந்தியைப் பார். ஹ்ருதயத்தினுள் நித்யாத்மாவைப் பார். உண்மையாகப் பார். அப்படிச் செய்த பிற்பாடு அனுபவித்ததைச் சொல். மற்ற இடங்களில் கேட்ட வார்த்தை அல்ல; உன்னுடைய அனுபவத்தில் தெரிந்த தையே சொல். கேட்ட வார்த்தைகள் சாஸ்வதமல்ல. கேட்ட வார்த்தைகள் ஆனந்தமும் அல்ல. பிடித்த பிடி

யாய் அனுபவித்துப் பார்த்துச் சாதித்ததில் ஏற்பட்ட கீர்த்தியே ஆனந்தமாகும்.

**119.** 'நீ யார்?' என்று பார். வேறு, வேறு என்று எண்ணிப் பார்ப்பதும் பிரமை. உன்னையும் பிறவற்றையும் சம பாவனையாகப் பார். உன்னிடத்திலுள்ள ரஹஸியத்தைப் பார். பேத புத்தியால் ஏற்பட்ட வாய்ப் பேச்சு அல்ல. வாய்ப் பேச்சினால் சமபாவனையுண்டாகுமா? சரீரத்தை 'நான்' என்று நினைக்கிற அபிமானத்தை விடு. பேத புத்தி என்பது மரண சமயத்தில் கஷ்டத்தைக் கொண்டு வந்துவிடும்.

**120.** 'சம திருஷ்டி' என்பது - உன் மரண காலத்தில் வருகிற மேல் மூச்சின்போது உள்ளது. அது துண்டு துண்டாக இல்லாதது; (சம திருஷ்டி) பரமானந்தமானது; சூக்ஷ்ம வஸ்துவைத் தெரிவிக்கிறது; சாஸ்வதமானது எனத் தெரிவிக்கிறது. அந்த மேல் மூச்சில் 'கா! கா!' என்கிற சப்தம் இல்லை. அப்போது, "சிவனே! சிவனே! உள்ளே போகிற மூச்சையும் சமமாகும்படிச் செய்" என்று சிவனைப் பிரார்த்திக்க வேண்டும். மூளையில் பரமாத்மாவைக் கொண்டாடு. அந்த நித்யானந்த சமுத்திரத்தில் நின்றுகொண்டு, இடை பிங்கலை சுஷும்னை நாடிகளில் நின்று கொண்டாடு. அது ஆனந்தமான குண்டலினி சக்தி. "ஓ குண்டலினி சக்தியே! எழு" (என்று அந்தர் முகமாய் எழுப்பு) பெட்டிக்குள் நெருப்புக் குச்சிக்குள் பிரகாசம் - அந்த குச்சியை உறைத்து அக்னியை உண்டாக்கு. அஞ்ஞானம் என்கிற இருள் நீங்கி, ஞானம் என்கிற பிரகாசம் ஆகும். 'குண்டலி' நித்யானந்தத்தைப் பயக்கும். குண்டலி-ஹ்ருதயாகாசத்தில் நித்யானந்தம். கோடி குண்டலி ப்ரகாசத்தையுடைய

குண்டலி, - 'குண்டலி' என்றழைக்கப்படுகிற - மகா தேஜஸ் - ப்ரம்ம தேஜஸே ஆகவுள்ளது. அது சூர்ய தேஜஸ். சூக்ஷ்மமான தேஜஸ். சூர்ய நாடி, சுழிமுனை நாடி.; சந்திர நாடி, பிங்கலை நாடி; இடா நாடி, நட்சத்ர நாடி; மூன்றுவது கண்ணினுடைய நாடியில் ஞானம் இருக்கிறது. அந்த நாடியில் ஞான நித்திரை; அந்த நாடியில் சுஷுப்தி அவஸ்தை. சுஷுப்தியாகிய நித்திரையில் ஜாக்ரதை (விழிப்பு) இல்லை. அந்த நித்திரையை நீ ஜாக்ரதையாகச் செய்து பார். ஸ்வாஸ அஸ்வாஸங்களில் கவனிப்புடன், சூக்ஷ்ம நித்ரை செய்து (ப்ராண அபானங்களைச் சமப்படுத்தி) அந்த நிஜானந்தத்தைப் பார். அனுபவி. பிராண அபானங்களை சமமாக்கின், அதன் ரஹஸ்யம் உண்மையாகிய ஆத்மாவில் இருப்பதாக விளங்கும். உள்ளே ஆகாச மண்டலம். இந்த மண்டலத்தில் நித்யானந்த கோபுரம். இந்த நித்யானந்த கோபுரத்தில் சாஸ்வதமான சாந்தி. தெருட்சியில்லாத நித்திரையில் தெளிவுள்ள நித்திரை செய். மிருகங்கள் தூங்குகிற தூக்கம் அல்ல. உத்தம புருஷரின் தூக்கம் கொள். புருஷார்த்தத்தை அளிக்கிற தூக்கம் கொள். உபநயனத்தினுல் பெற்ற தூக்கம் தூங்கு. பேசிக் கொண்டிருந்தாலும் உட்கார்ந்திருந்தாலும் வித்யாசமில்லாமல் இருக்கிறதும், நானு சங்கல்பங்களில்லாததும், விகல்பங்கள் எதுவுந் தோன்றுதிருக்கிறதுமான நித்திரை செய். லக்ஷியமொன்றுமில்லாமல் ஸ்வாஸங்களைப் பூர்ணமாய்விட்டுத் தூங்கு. பிராண அபானங்களின் பேரில் குறிப்பு வைத்து ஜபத்தைச் செய். மனதில் பக்தியுடன் செய்; செய். முக்தியை அனுபவி; அனுபவி. (விட்டு, விட்டு, அல்லாமல் தொடர்பாய்) இடைவிடாத பக்தியைச் செய்; செய். ஸ்வாசத்தை

ஆசா பாசங்களிலிருந்து இழு; இழு. கீழும் மேலும் இழு. மேலுக்கு (ப்ரம்ம ரந்திரத்தை நோக்கி) இழுக்கிற மூச்சு ரேசகம். நிறுத்தப்படுவது கும்பகம். நிற்கிற நிலை உன்னுடைய உண்மையான ஸ்தானம். கீழுக்கு (வயிற்றை நோக்கி) விடுவது பூரகம். உள்ளே இழுக்கப்படுகிற ஒரே ஸ்வாசத்தை, கிணற்றிலிருந்து நீர் இழுக்கிற மாதிரி ப்ரம்ம ரந்திரத்திற்கு இழு. (கொண்டு போய்ச் சேர்.) கீழ் மேல் ஸ்வாஸங்களினுல் அக்னியை ஜ்வலிக்கச் செய் (எழுப்பு). அப்படிச் செய்து எல்லா நாடிகளையும் சுத்தப்படுத்து. வாத பித்த கபங்களை அக்னியில் சுடு; சுடு; சுடு. விசாரம் என்பது அக்னி. யோகாக்னி. ஜடராக்னி (ஜடராக்னி-வயிற்றிலுள்ள அக்னி.) விசாரக்னி என்பது சூரியப் பிரகாசம். பரமாத்ம சைதன்யமயமாக ஜகத்து இருக்கிறது. மனதினுல் அநேக விகல்பங்களாக ஆக்கப்படுகிறது. மனோபாவனை என்பதுதான் சிருஷ்டி. சமஆத்ம பாவனையில் சிருஷ்டி (புதிதாய்த் தோன்றுதல் அல்லது பலவாருகத் தோன்றுதல்) இல்லை.

**121.** சூக்ஷ்ம அவஸ்தை, ப்ராணிகளுக்கும் ஸ்தாவரங்களுக்கும் ஒன்றே. காரணத்தில் மட்டும் பேதம். பேதம் என்பது பிராந்தி. சரீர அங்கங்களில் வித்தியாசம். அங்கங்கள் ஒரு ஸ்திர ரூபத்தையுடையவைகளல்ல. மாயா ப்ரகிருதி (மாயையாக இருக்கிறது). ஸ்தூலத்திற்குள் சூக்ஷ்மத்தைப் பார்ப்பது - இடையருத முக்திக்கு மார்க்கம். அகண்டமாய் இருக்கிற வஸ்துவில், இடையருமல் இருப்பதுவே முக்தி. ஹ்ருதய ஆகாசத்தில் முக்தி. ஹ்ருதயத்தில் இருப்பது சிவலிங்கம். சுயம்பு. முக்கிய ப்ராணன் என்பது சுயம்புவே; முக்கியமானது ஒன்று - ஊர்த்வ ஸ்வாஸம் (மேல் மூச்சு). முக்ய ப்ராண வாயு என்பது-ஸ்வாசமாகி (ஸ்வாசத்துக்குக்

காரணமாகி) நிற்கிற வஸ்து ஒன்றே. எல்லா ப்ராணி கோடிகளிலும் இருக்கிறது ஸ்வாஸம் ஒன்றுதான். காரணமாய் இருக்கிற வஸ்துவும் ஒன்றுதான். யோகம் செய்து பார்த்தவர்களுக்கு ஒன்றே என விளங்கும். செய்யாமலும் பார்க்காமலும் இருக்கிறவர்களுக்கு ஆசா பாசங்களில் பற்றுடன் காணப்படும். ஆகையினால் ஆசா பாசங்களில் சிக்கிக் கொள்ளாமல் நிராசை செய்யவும். ஜீவன்முக்தியை அனுபவிக்கவும். இதின் தத்துவத்தைப் (உண்மையைப்) பார். உன்னுடைய சித்தத்தைத்திருப்பி உண்மையைப் பார். தன்னுடைய சித்தத்தை எவ னொருவன் திருப்பிவிட்டானோ, அந்த புருஷன்தான் மனுஷ்யன். அவனுக்குள் எல்லா ஜகத்தையும் அவன் பார்க்கலாம். எல்லா ஜகத்துக்குள்ளும் அவன். ஜகத்துக்குள் (அலைகிற) மனது ஸ்திரமாக நிற் காது. ஹ்ருதயத்தில் சிவன் ஸ்திரமாக இருக்கிறான். சிவம் ஓங்காரம். ஓங்காரத்தினுடைய ஸ்வரூபம் ப்ரணவம். பிரணவம் என்றால் ஆகாரத்தில் (உருவத் தில்) எல்லாமொன்றாகக்கூடி இருத்தல். ஓங்காரமென் றால், சரீர பாவனையை விட்டு (சாக்ஷியாய்) இருத்தல்.

122. ஓங்காரம் எல்லாவற்றிற்கும் ப்ரமாணமாகி மேன்மைப் பட்டது. ஓங்காரமே சூர்யோதய ப்ரமாணம். (மேன்மையானது). (ஸர்வ ஸாக்ஷி நிலையே ப்ரமாணம்.) ஓங்காரம் ஸர்வ பயங்கரமான ஸ்வரூபத்தை யுடையது. ஓங்காரம் அக்னி ஸ்வரூபம். அக்னியைவிட ஸ்ரேஷ்ட மான வஸ்து ஜகத்தில் இல்லை. உள்ளிலும், வெளி யிலும் நிறைந்திருக்கிறது, அக்னி மயம். இடையில் தோன்றியிருப்பது பூமி. பூமி என்பது கீழே. வாயு என்பது அதற்கு மேலிருப்பது. ஜகத்துக்குள்ளே வாயு. வாயுவுக்குள் ஜகத்.

122. முதலாவது வாயு. இரண்டாவது அக்னி. முதலாவது உள்நோக்கம் எனும் விசாரம். இரண்டாவது சப்தம். நிசப்தமே (சப்தமில்லாமையே) வாயு ரூபம். நிசப்தமே நித்யானந்தம். சச்சிதானந்த பதவியும் நிசப்தத்தில் தானுகித் தன்மயமாய் இருத்தல்; தனக்குத் தோன்றுகிற எல்லாம் தன் மயமாகக் காணுதல். தன்மயம் என்பது சித்தும் சத்தும் கூடிய ஆனந்தம் - விவேகத்துடன் கூடிய ஆனந்தம். சைதன்யத்துடன் கூடிய ஆனந்தம்; ப்ரம்மானந்தம்; அதுவே பரமானந்தம்; அதுவே நித்யானந்தம்; அதுவே சச்சிதானந்த பதவி. அதுவேதான் மனுஷ்யன் என்பது. அதுவே தான் ப்ரம்ம ஞானம்; யோக ஞானம்; கால ஞானம். அது ஹ்ருதயத்துக்குள் மூன்று காலங்களையும் தெரிவித்துக் கொண்டிருக்கும். அதுவே ஹ்ருதயத்தில் முக்தி. அதுவே ஹ்ருதயத்தில் நித்தியானந்தமாய் (விளங்கும்) இடையறுத முக்தி.

123. 'பக்தி' என்பது இடையறுத ப்ரேமை. (அன்பு). கொடுப்பதும் தின்பதும் பக்தியல்ல. அவை மனதின் பிரமை. சரீரத்தின் பாவனே. (சூக்ஷ்மத்தில்) குடிப்பதும் தின்பதும் சூக்ஷ்ம விசாரம்; விசாரம் என்பது நீர் குடிப்பது - நீர் என்பது சாந்தி. சாந்தி என்கிற நீரின் மேல் உட்கார்ந்திருப்பது யோகானந்தம். "போகங்களை விட்டு யோகானந்தத்தைச் சேர். மனதே! சேர்." "படு; மனதே! படு." "ஸகி! மனமே! ஸகி" "தேக பாவனையை விட்டுவிடு. ஹ்ருதயத்தில் ஓடு. மனமே! ஓடு. ஹ்ருதயத்தில் வாசனை (ஏற்படும்) ஜீவன் முக்தி என்கிற சத்வாசனையில் (சாதனையினுல்) ஈடுபடு (அனுபவி). வாசம் செய். (அப்படி அதிக காலம்

இருந்து இருந்துப் பழகு), உபாதியைச் சேர். *உப நயனத்தைச் செய்; மனமே! செய். மூன்றும் கண்ணினுல் உபநயனம் (ஏக பாவனை) செய். மனமே! உப நயனம் செய். அன்னிய பாவனைகள் செய்ய வேண்டாம். சம பாவனையே செய்.

124. கையினுல் செய்கிற ஜபத்தைப்போல் அல்ல வாயினுல் முணங்குகிற ஜபத்தைப்போல்அல்ல. மனதினுல் சிவத்தை ஜபிக்கவே முடியாது. கையினுல் செய்கிற தொழில் அல்ல. காலினுல் செய்கிற காரியம் அல்ல. மனதில் எதுவும் வேண்டாமென்கிற நிலையில் நிற்பதே தொழிலாகச் செய். நிராசையைக் கடைப்பிடி. அப்படிப் பிடித்துப் பார். நிராசையாக இருந்து பார்.

125. நீசமான மனே விருத்திகள், புத்தி ஹீனத்தினுல் உண்டாகின்றன. அதாவது புத்தியால் ஆராயாமலிருப்பது. புத்திஹீனம் புலையனுடைய குணமேயாம். மற்றவர்களைப்பார்த்து புகழ்ச்சிசெய்வதும், துஷ்ட சேஷ்டைகள் செய்வதும், வாய் பேச்சில் ஒரு விதமும், மனதில் மற்றொரு விதமுமாக இருப்பதும் புலையன் சுபாவம். பொறாமை மதம் முதலிய துர்க்குணங்களும் புலையனுக்குள்ளவை. துணி கருப்பாயும், அவர்களுடைய உடம்பு கருப்பாயும் இருந்தாலும், அழுக்காயிருந்தாலும், அதனுல் அவன் புலையனல்ல. தலைக்கு முண்டாசு கட்டி, கையில் ஒரு "ரிஸ்ட் வாட்சு" கட்டி, 'காக்கி' உடைகள் தரித்து, தனக்கும் மற்றவர்களுக்கும் பேதமிருக்கிறதென்கிற எண்ணங்கொண்டவனே பறையன். அப்படி பேத புத்தி உள்ளவன்தான் பறையன். சாப்பாட்டுக்கு இல்லாதவன் புலையனல்ல. வேதாந்தமென்

* உபநயனம் – மூன்றும் கண்ணினுல் (உள் நோக்கில்) ஆராய்ந்து பார்த்தல்.

பதைப் படித்து அறிந்து நடக்காதவன் மனுஷ்யனல்ல. வேதாந்தமென்பது பழகிய குதிரையைப்போல் ஜீவன் முக்திக்கு வழி காட்டும்; மார்க்கம் காட்டும். வாய் பேச்சு வேதாந்தம் (மத)யானையைப்போல் மனதிற்கு சஞ்சலத்தை உண்டாக்கும்.

**126.** தன்னலப் பற்றுள்ள மனது ஸ்திரமல்ல. சூக்ஷ்ம விசாரணையே ஸ்திரம். ஸமாதான சாக்ஷி என்பது சிருஷ்டி (உண்டாக்குதல்); சூக்ஷ்ம விசாரம் என்பதும் சிருஷ்டி; புஷ்டி. சூக்ஷ்ம விசாரணை என்றால் 'இது சத்து', 'இது அசத்து' என்று தெரிந்து, சாரத்தை க்ரஹிக்கிற ஆராய்ச்சி. சூக்ஷ்ம விசாரணையினால் முக்தியும் ஆகும். சக்தியினால் யுக்தி ஆவதில்லை. சக்திக்குள் யுக்தி (மேல் பட்டதல்ல). யுக்தி என்பது மனதின் பிரமை. சக்தி யென்பது ஆத்ம பாவனையினால் ஆனது. சூக்ஷ்ம விசாரணையென்பதுதான் புத்தி. சக்தியும் சூக்ஷ்ம விசாரணையே.

**127.** சரீர அபிமானமுள்ள புத்தி வெளிக் கண்களுக்குத் தோன்றுகிறதும், வெளிக்குக் காணப்படுகிறதும் எல்லாம் ஹரி (ப்ரகிருதி ஸம்பந்தமான புத்தி) அல்ல. உள்ளே காணப்படுகிறவை சிவனல்ல. உள்ளே காணப் படுகிறவை ஜகத்தல்ல. சிவனுக்குள்ளேதான் ஹரி. ஹரிக்குள்ளே சிவனல்ல.

**128.** சூக்ஷ்ம புத்தியானது ஞான புத்தி. ஒரே இடத்தில் நிலை நிற்பது. உள் பார்வை. ஸ்தூல புத்தியானது லகாம் (குதிரையை இழுத்துக் கொள்கிற தோல் வார்கள்) இல்லாதிருப்பது. சொல்லிக்கொடுத்த புத்தி ஸ்திரமல்ல; ஹரி அல்ல; சிவனுமல்ல. குரு புத்தி சூக்ஷ்ம புத்தி; ஸ்தூல புத்தி அல்ல. ஸ்தூல புத்தி

என்பது மிருகத்துக்குள்ள புத்தி. வாங்கிக் கொண்டதைக் கொடுக்கமாட்டேன் என்கிறவன் மனுஷ்யன் அல்ல.

**129.** பலன் அறியாதவன் (உடலெடுத்ததன் பயன் அறியாதவன்) மிருகத்துக்குச் சமம். பயன் என்பது நிராசை. இதை அறியாதவன் மனுஷ்யனல்ல. நீரில் இருக்கிற தவளை ஒரு தடவை மேலுக்கு வந்து, ஒரு தடவை கீழுக்குப் போகின்றது. அப்படியே, உத்தமமான இந்த மனுஷ்ய ஜன்மத்தை மிருக ஜன்மத்தைப் போல் கீழுக்கு விடலாகாது. எப்பொழுதும் இந்த ஜன்மம் கிடைப்பதல்ல. கிடைத்தபோது பிரயோஜனப் படுத்திக்கொள்ள வேண்டும். பக்குவப்படுத்தி அனுபவித்துவிட வேண்டும். விசாரம் (ஆராய்ந்தறிதல்) என்பது அக்னி. புத்தி என்னும் பாத்திரத்தை வைத்து முக்தி என்னும் சாதனத்தைப் பெறவேண்டும்.

**130.** ஒரே ஒரு வாசஸ்தானம். அது சாஸ்வதமான முக்தி ஸ்தானம். அந்த ஸ்தானம் ஓங்காரம். அந்த இடத்திற்கு உருவம் இல்லை. மாறுபாடு இல்லை. அது அகண்டமாக உள்ளது. நேற்று என்பதல்ல. இன்றைக்கே, இப்பொழுதே, சுகத்தைப் பயக்கும் தினம். நாளை அல்ல. நாளை மறு நாள் அல்ல. ஒன்பது மணி நேரம் பத்து மணி நேரம் கடந்தல்ல. இப்பொழுதே காலம். விவேக விசாரத்தினால் ஏற்பட்ட அகண்டமான காலமே ஒரு காலம். ஸ்தானத்தை விட்டிருக்கிற காலம் இகழ்ச்சியான காலம்.

**131.** முக்தி ஸ்தானம் என்பது கோகுல நந்தனமென்றும், கோவர்த்தனமென்றும், கோகுலமென்றும் சொல்லப்படுவது. மூன்றாவது கண்தான் கோகுலம்; உள் பார்வை என்பதுதான் கோகுலம்; மதுரை பிருந்தாவனம்; கோகுலம்.

132. சர்வாந்தர்யாமியை (எல்லா பதார்த்தங் களுள்ளும் நிறைந்தவனை) தலைக்குள்ளே பார். உண்மை யாகப் பார். நித்யானந்தமாய் உன்னைச் செய்துகொள். ஹ்ருதயத்தில் இம்மாதிரி செய்திருக்கிறதைப் பார்.

133. ஓங்காரம் என்கிற ஸ்வரமே ஸ்ருஷ்டிலயமான இடம். மனதும் அங்கேயே லயமாகிறது. [ஓங் காரத்தை அனுபவிப்பது என்றால் இந்த உலகத்தினுடைய லயத்தை (இந்த உலகம் இல்லாமல் போவதை), மனதும் இல்லாமல் போவதை அனுபவித்தல்]. தற்பெருமையை (மானுபிமானத்தை) விட்டதே ஆனந்தம்; அதே சாஸ்வத மான ஆனந்தம்; உண்மையான ஆனந்தம். காணப்படுவ தெல்லாம் ஆனந்தமே.

134. காசியில்தான் சிவன் இருப்பது. ஹ்ருதய ஸ்தானம் காசி. மனது காசி. எல்லாம் காசிதான். சாஸ்வதமான ஆத்மாவும் காசிதான். காசி என்பது தலைக்குள் இருக்கிறது. (அதற்குள் கேட்கப்படுகிற) பத்து நாதங்களும் சாஸ்வதமானவை. அந்த சூக்ஷ்மமான காசி, சங்கல்பங்கள் (எல்லாவிதமான எண்ணங்கள்) அற்ற இடம். ஹரித்துவாரம் என்பது உடலுக்குள் உள்ள ஒன்பது வாசல்கள். அது ஹ்ருதயத்திற்கு மூல ஸ்தானம். சாஸ்வதமான சாந்திக்கு மூலஸ்தானம். யக்ஞம் என்பது ஞானம் என்கிற அமிர்தம்.

135. யுக்தி என்பது கால் நடையில் போவது. ஹ்ரு தயத்திற்குள் சேர்வது சக்தி. ரெயிலில், போவதைப் போல் இருப்பவன் சந்நியாசி. கால் நடையில் போவதைப் போல் இருப்பவன் சம்சாரி-(என்றால் மனது சஞ்சலமாய் தான் இருக்கும்.) ரெயில், என்பது சரீரம். ரெயிலுக் குள் போவது மனது. மனதில்லாது போனால் எஞ்ஜின்

நடக்கிறதில்லை. டிக்கெட் கொடுப்பதில்லை. ஜனங்கள் கூடுவதில்லை. முதல் வகுப்பு, இரண்டாவது வகுப்பு, மூன்றாவது வகுப்பு என்றில்லை. மனம் என்பது சாந்திக்குரிய வகுப்பு. சாரதி என்பது புத்தி. தலை என்பது 'எஞ்ஜின்'. 'எஞ்ஜினு'க்குள் உள்ள 'ஸ்க்ரூ'கள் தான் (திருகு ஆணிகள்) நாடிகளும் நரம்புகளும் - வாயு (பிராணன்). நாடிகளில் சஞ்சரிப்பது வாயு.

136. மரண சமயத்தில் உன்னைக் காப்பாற்றுகிறவன் சிவன். ஹரி அல்ல. சிவத்தில் சக்தி இருக்கிறது. ஹரியினிடத்தில் மாய்கையிருக்கிறது. தேகங்கள் (உடல்கள்) மண்ணினுலானவை. உடலுக்குள் இருக்கிற எல்லாம் (நடத்தப்படுகிற எல்லாம்) வெளிநோக்குடையன; சிவன் என்பது உள் நோக்கம்-ப்ரம்ம ரந்திரம் வரை. ஒருவரால் சொல்லிக் கொடுக்கப்பட்டது புத்தி அல்ல. நீ பார்த்து, தெரிந்து, அனுபவத்திற்கு வந்ததே உண்மை ஞானம்.

137. பரி பூர்ணமான சாந்தம் வந்த பிறகு வேறொரு பக்கம் போக வேண்டுமென்பதில்லை. வேறொரு பக்கம் போய் பார்த்து தெரிந்துகொள்ள வேண்டுமென்பதில்லை. காசிக்கும் இராமேஸ்வரத்திற்கும் கோகர்ணத்திற்கும் போகவேண்டியதில்லை. முக்யமாய்ப் பார்க்க வேண்டியதெல்லாம் உன் மனதிற்குள் இருக்கின்றன. 'போக வேண்டும்', 'வரவேண்டும்' என்று தோன்றுவதெல்லாம் உன் மனதின் பிரமை. மேன்மையான சாந்தம் வந்த பின் எல்லாம் சமமென்கிற பாவனை ஏற்படும். ஜீவன் முக்தி என்பது எல்லாவற்றையும் ஒன்றிலேயே பார்ப்பது. ஒன்றையே (ஆத்மாவையே) எல்லாவற்றிலும் பார்ப்பது இதுதான் எவ்விதமான ஆசையும் அற்ற இடம். நம்முடைய கையிலிருக்கிற பதார்த்தத்தை (நம்மிடத்தி

லுள்ளதை) நமதுகையினிடத்திலேயே (நம்மிடத்திலேயே) பார்க்கவேண்டும். வேறு இடங்களில் கிடைக்குமா? கிடைக்காது. அம்மாதிரி ஒவ்வொரு சங்கதியும் தன்னிடத்திலேயே ஆலோசனை செய்து ஆராய்ந்து அறிந்து செய்யவேண்டியது.

138. ஹ்ருதயாகாசத்தில் ஆத்ம சூர்யோதயத்தை மிக்க ப்ரகாசமான காட்சியாகக் காணலாம். மண் பாத்திரத்தில் ஜலம் நிறைத்து அதில் பார்த்தால், வெளி ப்ரகாசத்திலிருக்கும் எல்லா வஸ்துக்களின் ப்ரதி பிம்பங்களும் காணப்படுவது எப்படியோ, அப்படியே ப்ரம்மாண்டமெல்லாம், ப்ரபஞ்சமெல்லாம் தன்னிடத்திலேயே காணப்படுகிறது. ரெயில் வண்டியில் உட்கார்ந்து கொண்டு போகும்போது உலகமெல்லாம் ஓடுகிறதாகத் தோன்றுகிறது. அப்படியே இப்பிரபஞ்சம் தன்னிடத்திலேயே காணப்படுகிறது.

139. தனக்குப் பசியாகிறபோது தனக்குத்தான் தெரியும். அப்படி எல்லா சங்கதிகளும் தன் ஆத்ம பாவனையில் தெரியும். ஒரு 'ஸ்டேஷனி'லிருந்து வண்டி விடுகிறபோது மற்றொரு 'ஸ்டேஷனு'க்குத் தந்தி போகிறது, கிணற்றில் கல் எறிந்தால் சப்தம் கேட்கிறது. அம்மாதிரி நாடிகளுக்குள் வாயு சஞ்சாரம் நடக்கும்போது தசவித நாதங்களும் கேட்கும்.

140. ஒரு பாத்திரத்தில் ஜலம் விட்டு, சூடு ஏறின பின் மேலே வேறொரு பாத்திரத்தை மூடினால், அந்த ஜலத்தின் சக்தி வெளியில் போகாமல் உள்ளேயே நிறுத்தப்படுகிறது. ஒரு 'பம்பி'ல் (குழாயில்) நீர் வெளியே வரும்போது ஓங்கார சப்தம் ஆகிறது. அப்படித் தான் (நம்மிலும்) உள் மூச்சு வெளி மூச்சுகள் நடக்கும்

போது (சப்திக்கும்). ஆனால் காட்டுத் தடத்தில் போவதைவிட்டு ராஜ மார்க்கத்தில் அவைகளைக் கொண்டு போய்ச் சேர்க்கவேண்டும். கீழ் நோக்கம் அல்லது வெளி நோக்கத்தை விட்டு, உள் நோக்கத்தில் சேர்க்கவேண்டும். அப்படிச் செய்து, மனதின் உண்மையான ஸ்தானத்தை அறிந்து சேரவேண்டும்.

141. நீர் இல்லாத இடத்தில் படகு போவது இல்லை. வாயு சலனம் இல்லாவிடின் இரத்த ஓட்டம் இல்லை. இரத்த ஓட்டம் இல்லாவிடின் அக்னி இல்லை. இரத்த ஓட்டம் நின்று, அக்னி இல்லாவிட்டால் ஜீர்ணமாவதில்லை. அப்படித்தான், அக்னி இல்லாமலிருந்தால், ரெயில் வண்டி (ரெயில்-ப்ராணன்) போக்கு வரத்து செய்வதில்லை.

142. கயிறு இல்லாமல் கிணற்றிலிருந்து நீர் எடுப்பது முடியாது. கயிறு என்பது ஸ்வாசம். கிணற்றிலிருந்து நீர் எடுப்பதென்பது சுவாஸத்தை உள்ளுக்கும் வெளிக்கும் ஒரே மாதிரியாக [கணக்காக] இழுப்பதேயாம்.

143. பெரிய மரக்கட்டையைப் பலகைகள் ஆக்க வாளைக் [ரம்பம்] கொண்டு மேலும் கீழுமாக இழுத்து அறுக்கவேண்டியது. அம்மாதிரி, ஸ்வாஸத்துடன் புத்தியை உள்ளே நடத்தி, மேலுக்குப் போகிற மார்க்கத்தில் சேர்க்கவேண்டியது. ஒரு கல்லை மேட்டின்பேரில் ஏற்றி இழுத்துக்கொண்டு போவதற்கு அதிகமான ப்ரயத்தனம் வேண்டும். அதே வழியில் அதை கீழுக்குக் கொண்டுவருவது கஷ்டமில்லை. அந்தப்ரகாரம் ஒரு வழியில் ஏறிப்போவது கஷ்டம். இறங்கி வருவது

கஷ்டமில்லை. தண்ணீர் கூடியதுபோல் கூடிய ஸ்வாஸம் விட்டுப்பிரிவது கஷ்டம். அவ்வண்ணந்தான் ஒரு வஸ்துவை வேண்டி வாங்கிக்கொள்வது கஷ்டமல்ல. திருப்பிக்கொடுப்பதுதான் கஷ்டம். வாங்கியதைக் கொடாது வைத்திருக்கிறவர்கள் மனுஷ்யர்கள் அல்ல. அவர்கள் மிருகங்கள் தான். [உத்தமர்களுக்கு] கிடைக்கக் கூடிய மேன்மையான பதவி அவர்களுக்கு இல்லை.

**144.** மரண காலத்திலிருக்கும் கஷ்டத்தை விவரிப்பது முடியாது. புத்திக்குள் ஞானத்தை வருத்தி வழக்கப் படுத்த வேண்டும். அவ்விதமே ஸ்வாசத்தை தாரணை செய்யவேண்டும். சப்தத்தில் மனது லயப்படவேண்டும்.

**145.** அதே ப்ரகாரம் தலையின்மேல் ஒரு சுமையை வைத்துக்கொண்டால் அச்சுமையின் மேலேயே ஞாபகம். அது போலவே ஆட்டத்தில் வேஷக்காரருக்கு கிரீடத்தின் மேலேயே குறிப்பு. ஞானிகள் புத்தியின் மேலேயே குறிப்பு வைத்திருப்பார்கள்.

**146.** மனது புத்திக்குக் கீழ்ப்பட்டது புத்தி என்பது அரசன். மனது ப்ரதானி; அரசனுடைய வீட்டுக்கு மந்திரியைப்போல. அந்த க்ரமத்தில் சரீரத்திற்குள் மனது அரசன். (புத்திக்குக் கீழ்ப்படிந்த அரசன்.)

**147.** மத்யான காலத்தில் உள்ள சூர்யனுடைய ப்ரகாசத்தில், 'காஸ் லைட்', ப்ரகாசமில்லாதது ஆகும். இருள் இருந்தால் மாத்திரம் அல்ப ப்ரகாசத்தினுடைய ப்ரயோஜனம் தெரியும். வயிறு பசித்தபோது ஜாதி பேதம் பார்ப்பதில்லை. அவ்வண்ணம் நல்ல நித்திரையில் பசியை அறியமாட்டான். அப்பொழுது மனது இல்லை. சதா நித்திரையில், யோகத்தில் இருக்கவேண்டி இருக்கிறது. அவரே ஞானி.

148. பக்தி பத்து பேருக்கும் ஒரே மாதிரி இருப்பதில்லை. பத்து வழிப்போக்கர்கள் வழியில் போகும்போது ஒருவர் உட்கார்ந்துகொண்டால் மற்றொருவரும் அப்படியே. பதின்மரும் உட்கார்ந்துக்கொள்ளுகிறார்கள். அப்படியே ஒருவருக்குப் பக்திவர ஆரம்பித்தால் அதைப் பார்த்து மற்றவர்களுக்கும் பக்தி வருகிறது. பக்தியைப் பற்றிக் கேட்டும் பார்த்தும் பெறுகிறார்கள்.

149. கையிலுள்ள புஷ்பத்துக்கு வாசனை இல்லை. தூரத்தில் இருப்பதற்கே வாசனை. மூளை முதிர்ச்சியில்லாத சிறு குழவிகள் (உலகத்திலுள்ளவைகளில்) வித்யாஸங்களை அறிகிறதில்லை. மூளை முதிர்ந்த பிறகு வெஸ்துக்களில் உள்ள வித்யாஸத்தை அறிகிறார்கள். ஒரு குழந்தை ஆறு மாதம் ஆகிறவரை வித்யாசங்களை அறிகிறதில்லை. முதல் தரத்துக் குழந்தைகளைப்போல் (ஞானிகள்). ஒரு வயிரத்தை அதன் கையில் கொடுத்தால் அந்தக் குழந்தை அதைக் கீழே போட்டுவிடுகிறது. அச்சிசுக்களுக்கு வயிரமும் கல்லும் ஒரே மாதிரிதான். அப்படி ஞானிகளுக்கு மண்ணும் பணமும் ஒரே கணக்கு. எதன் பேரிலும் மனது செல்வதில்லை. சர்வாத்ம பாவனையே எல்லாம். எல்லாம் தன்மயமாகித் தோன்றும். அப்படியே சமாத்ம பாவனையும், உள் பார்வையும். உள் பார்வை என்பது சூக்ஷ்ம விசாரம். சூஷ்ம விசாரம் என்பது சிவமும் சக்தியும். சிவமும் சக்தியும் என்பது அகண்ட பரப்ரம்ம சக்தி. பரப்ரம்ம சக்தி என்பது ஆத்ம சொரூபம். ஆத்ம சொரூபம் என்பது உண்மையிலுள்ள சுயரூபம்.

150. மனுஷ்யனுடைய நிஜரூபம் என்பது ப்ராணன். எவனொருவன் ஆராய்ந்து பகுத்தறிகிறானோ அவன் மனுஷ்யன். பகுத்தறிதல் என்றால் 'இது ஆத்மா', 'இது ஆத்மா

அல்ல' என்று அறிந்துகொள்ளும் விவேகமுடையவன் பகுத்தறிகிறான். . புருஷார்த்தத்தை (ஒரு மனுஷ்யன் அடையவேண்டியதை) அடைகிறான். எதையும் சாதனை செய்தால் அடைகிறான். சாதனையினால் எதுவும் அறியப் படுகிறது. (எதுவும் அறியப்படுகிறது—எதனுடைய அவஸ்தையும் அறியப்படுகிறது.)

**151.** ஒரு விதையைப் பெட்டிக்குள் வைத்திருந்தால், அது அதிகமாய்விடாது. ஆனால் முறைப்படி செய்ய வேண்டிய தொழிலைச் செய்தால் (அதைப் பூமியில் விதைத்தால்) ஒரு விதைக்கு ஆயிரம் வித்துகள் ஆகின்றன. ஒரு விளக்கிலிருந்து ஆயிரம் தீபங்களை ஏற்றலாம். ஒரு மரம் அநேக ஆயிரம் புஷ்பங்களைத் தருகின்றது. புஷ்பங்கள் கீழ் நிலை (நோக்கைக் காட்டு கின்றன). மரம்மேல் நோக்கைக் காட்டுகின்றது.

**152.** ஒரு தங்கக் காசை மண்ணில் நாட்டினால் அது முளையாது. (பூமியில்-உலகப் பற்றுகளில் சிக்கினாலும், தங்கக் காசு - உத்தமான பதவியையடைந்த மனது.)

**153.** ஜீவனில்லாத வஸ்துவில் சப்தமில்லை. அது ஜடம். ஜீவகளை இருக்கிற வஸ்து - சப்த ப்ரம்மம். ஜகத்தெல்லாம் சைதன்ய மயமாக (அறிவு மயமாக) இருக் கிறது. ஒரு வீட்டைக் கட்டும்போது, முதலில் பஞ்சாங்கப் (அஸ்திபாரம்) போட்டு பின்னர் சுவர்களைக் கட்ட வேண்டும். அப்படியே காரணமில்லாத காரியமிருக்காது.

**154.** உடலிலுள்ள கண்கள் இல்லாதவன், உருவங்கள் இவையென்று அறியமாட்டான். அவனுக்கு விளக்கும் ப்ரயோஜனப்படாது. மனது இல்லாதவனுக்கு வாசனையில்லை. கனவுகளும் இல்லை.

155. மூக்கின் மூலமாய் ஸ்வாஸிக்காதிருக்கிறவர்கள் எவ்விதமான பற்றுகளும் அற்றவர்கள். கர்மங்களுமில்லாதவர்கள். ஸ்வாஸத்தை உள்ளிலிருந்து உள்ளுக்கே நடத்தி, இடா பிங்கலைகள் கூடியதை ப்ரம்ம ரந்திரத்திற்கு முட்டச் செய்து, தானாகி, தன் மயமாகி, ஜகத்தெல்லாம் சம த்ருஷ்டியை நிலைப்பித்த நிலையே சுயராஜ்யம். சுயராஜ்யம் என்பது ஜீவஸ்தானம். ஜீவகளை என்பதோ (களை-ப்ரகாசம்) ப்ராண வாயு. அப்படியே சுயராஜ்யம் என்பது தலை நகரம். ஜீவன்முக்தி அளித்த ப்ரபு சுயராஜ்யத்தின் தலைவர். சுயராஜ்யம் என்பதுதான் ஆத்ம சக்தி. அதைத் தன் ஸ்வாதீனத்தில் வைத்துக் கொள்ளுதலாம். சுயராஜ்யம் என்பது மண்மேட்டைப் போலல்ல. தங்கமல்ல. தன்னுடைய காம க்ரோதாதிகளை (அடக்கி, மனதைத்)தன் ஸ்வாதீனத்தில் வைத்திருக்கும் சக்தி கொண்டிருப்பது. ஒருவன் சொல்லுவதும் செய்வதும் ஒரே மாதிரி இருக்கவேண்டும்.

156. நீரைக் கண்டு பயப்பட்டால் படகினால் நதியைத் தாண்டுவது முடியாது. அப்படியே நெருப்புக்குப் பயப்பட்டால் நீர் சூடாவது இல்லை. நீருக்கும் நெருப்புக்கும் பயப்பட்டால் காரியங்கள் ஆவதில்லை. முக்யமாய் எந்தச் செய்கைகளுக்கும் தைரியம் வேண்டும். நாம் செய்யும் ஒவ்வொன்றுக்கும் மனம்தான் காரணம்-காரியத்துக்கு ஆதாரம்

157. ஒரு மாமரத்தில் பழங்கள் எல்லாம் ஒரே காலத்தில் ஒரே மாதிரி காய்த்துப் பழுத்துவிடுவதில்லை. முதலில் பழக்காயாகிறது. பின்பு, தின்பதற்கு யோக்கியமான பழமாகிறது. அப்படியே மாம்பழங்களைப்போல் ஆகவேண்டும். ஒவ்வொரு சங்கதியிலும் சாந்தம் வரவேண்டும்.

158. மாம்பழமென்பது தலை. அதில் தித்திப்பா யுள்ளது அமிர்தம். இந்த அமிர்தம், ஐந்து பொறி களுக்கும் இடையில் (சாரமாக) இருக்கிறது. இந்த அமிர்தம், மனிதனுக்குள் இருக்கிற மேன்மையான ஆத்ம சக்தியே. (அமிர்தம்-ஞானம்)

159. (இரவில்) விளக்கில்லாத வீட்டில் அலங்கார மில்லை. எந்த விஷயத்திலும் அந்த வீட்டைப்போல் தான். இந்த வீடும் ஸ்திரமானதல்ல. வீட்டிற்கு விளக்கு எப்படியோ அப்படியே ஞானம். அது குண்ட லினி சக்தியினுடைய ப்ரகாசம். சேற்றில் இட்ட வஸ்து உபயோகிக்கத்தகுந்தது அல்ல. அதில் விழுந்த வஸ்துவுக்கு விலை இல்லை. எல்லாரும் உபயோகப்படுத்துவதற்குத் தகுந்ததாக ஆனபோது எல்லாரும் உபயோகப்படுத்திக் கொள்ளுகிறார்கள். சேற்றில் ஒரு வயிரம் (விழுந்து, அது) கிடைத்தால் அதை மறுபடியும் வீசி எறிய மாட்டார்கள்.

160. ஒரு ப்ராணி ஒரு கிணற்றில் விழுந்து விட்டால், அதை எடுக்கவேண்டும். கெட்டுப் போனவர்கள் கெட்ட படியே இருப்பார்கள் என்று நினைக்கக்கூடாது. அவர்களை நல்ல பதவிக்குக் கொண்டுவரவேண்டும்.

161. கண்ணில் ஏதோ ஒரு பொடி விழுந்தால் நம் கருத்து (லட்சியம்) கண்ணின் மேலேயே இருக்கும். அப்படி வெளியில் சஞ்சரிக்கிற திருஷ்டியை உள்ளே செலுத்தினல் அது உள்பார்வை எனப்படும். அஞ்ஞான மென்பது பொடிக்கு டப்பியைப்போல். ஒரு டப்பிக்குள் என்ன இருக்கிறதென்பது வைத்தவனுக்குத்தான் தெரி யும். மற்றவர்களுக்கு அது தெரியாது. (உண்மை யான) தனம் என்பது ஜீவசக்தி. அது வைத்திருக்கும்

பெட்டி புத்தி. அந்தப் பெட்டிக்குள் தனம் வைத்துப் பூட்டப்பட்டிருக்கிறது. பூட்டுவது என்பது மன தினுடைய உண்மையான ஸ்தானத்தைச் சேர்வது. தான் பெற்றுக்கொண்ட பொருளைத் திருப்பிக் கொடுப்பது புருஷார்த்தம். மற்றவர்களிடத்திலிருந்து வாங்கிக் கொண்ட பொருள் பாவனை ரூபமாய் வந்தது. உனக்குள் உன்னைக் கொடுத்துவிடு. ஆத்ம ரூபமானுய். உன்னு டைய ரஹசியத்தை நீ பார்த்துக் கொள். உனக்குள் ஜகத்தெல்லாம். ஜகத்துக்குள் எல்லாம் நீ. உன்னுடன் கூடி ஆடுகிறவன் ஒருவன். அங்கும் இங்கும் இருக்கிற வன் ஒருவனே.

162. ஜகஜ்ஜோதி என்பது பரஞ்ஜோதி - (அதிக மேன்மையான ப்ரகாசம்). மனமே! அன்னிய பாவனை செய்யவேண்டாம். சமபாவனை செய்; மனமே!

163. நீ பிறந்தபோது ஒரு ஸ்வாஸத்தோடுதான் வந் தாய். போகிறபோதும் ஸ்வாஸத்தைத்தான் விட்டுப் போகிருய். இந்த மண்ணின் கூண்டு செய்யப்படுகிற தல்ல. போகிறதும் அல்ல. சிவன் கொடுத்தது ஆஸ்தி எல்லாம். எல்லா ப்ராணிகளுக்கும் ஒன்றே. எல்லா வித்துகளும் சமமானவைகளே. சூக்ஷ்ம சக்தி ஒன்றுதான். விருத்தியில்தான் பேதங்கள். மனதில் தோன்றுகிற பிரமைகள் ஸ்திரமல்ல. தோன்று கிறவைகளும் கேட்கப்படுகிறவைகளும் சாஸ்வதமல்ல; உண்மை அல்ல.

164. ஒருவனை பறையன் என்று சொல்வதும் மனதி னுடைய பிரமை. ஒரு வஸ்துவைப் பறையன் தொட்டு வாயில் இட்டாலும் (பறையனுக்கு மட்டும்) உள்ளே போகிறது. அவன் தொட்ட சுண்ணும்பும்கூட

மற்றெவனும் உபயோகிக்கிறதில்லை. ஒரே பாயின் மேலும் பறையனுடன் உட்காருவதும் இல்லை. ஒருவன் செய்வதைப் பார்த்தும் ஒருவன் சொல்வதைக் கேட்டும் யோசிக்காமல் ஒவ்வொருவரும் அப்படியே செய்து வருகிறார்கள்.

165. பறையன் என்று சொல்லுகிறவர்களே பறையர்கள். ஒரு வாழைக் குலையிலிருந்து அநேகவிதங்களான தின்பண்டங்கள் ஆகின்றன. வாழைப் பழம் ஆகிறது; எண்ணெயில் அரிந்துபோட்டு வேகவைத்து எடுத்தால் அதை வாழைக்காய் என்று சொல்வதில்லை. 'கறி' என்று சொல்கிறார்கள். இப்படி எத்தனையோ விதங்களாக தீனிகள் செய்யப்படுகின்றன. முதலில் ஒரே ஒரு குலையிலிருந்து நானுவிதங்கள் ஆயின. அப்படி முதல் முதல் ஆன சொரூபங்கள் ஒரே 'நமூனு'. எல்லா ப்ராணிகளிடத்திலும் ஸ்ரேஷ்டமான ஓங்கார சப்தம் ஒன்றேதான் உள்ளது.

166. நான்கு ரெயில் பாதைகள் சந்திக்கிற 'ஸ்டேஷன்' (ஜங்க்ஷன்) ஒன்று இருக்கிறதென்று வைத்துக்கொள்வோம். ஒரு ரெயில் பாதை கல்கத்தாவுக்குப் போகின்றது; மற்றொன்று பம்பாய்க்குப் போகின்றது; மூன்றாவது ஒன்று மதராஸுக்குச் செல்லுகின்றது. அவைகள் போவது ஒரு ஸ்டேஷனிலிருந்துதான். போய்ச் சேருவது ஒரு ஸ்டேஷனுக்கு. அப்படியே, தனக்குள்ளே உண்டான மாய்கை தனக்குள்ளேயே ஐக்யமாகவேண்டும். பாலில் இருக்கிற வெண்ணெயைப்போல், உண்டாவதும் பாலிலிருந்து, ஐக்யமாவதும் பாலிலேயே. விசேஷமாக ஒருவர் சொன்ன வார்த்தை அதிககாலம் நடைபெறுகிறது. கேட்பதற்கு ஜனங்கள் இல்லாமற் போனபோதிலும் அதே நடைபெறுகிறது.

167. ஒரு பெரிய வெளியில் (மைதானத்தில் ஒரு) 'பங்களா' "முசாபர்" களுக்காக (பிரயாணிகளுக்காக) கட்டப்பட்டது. இரண்டு தினத்திற்குள் ஒரு சபை கூட்டப்பட்டது. அந்த பங்களாவுக்கு சுண்ணும்பு உபயோகப்படுத்தி தரை காரை போடப்பட்டது; சுண்ணும்பு பூசப்பட்டது. அன்றே சபை கூடிற்று. ஒரு காவல் ஆளைப்போட்டு சபைக்கு வருகிற ஜனங்களுக்கு காலிலும் உடம்பிலும் சுண்ணும்பு படாமல் போகும்படி முன் ஜாக்ரதையாக ஜனங்களுக்குத் தெரிவிக்கும்படி கூலி ஆளை ஏற்பாடு செய்தார்கள். அப்போது வந்தவர்கள் எல்லாம் கூடினார்கள். சபை முடிந்தது. ஜனங்கள் எல்லாம் போய்விட்டார்கள். அந்தக்கூலி ஆள் அங்கேயே நின்றான். அந்த பங்களாவில், பின்னால் அநேக சபைகள் கூடின. கூலி ஆள் மாத்திரம் அங்கேயே நிற்கிறான். ஆனால் அந்தக் கூலிக்காரனை "மாசச் சம்பளம் பேசி உன்னை நிறுத்தியது; இதுவரைக்குப் சம்பளம் வாங்கிக்கொண்டு நீ போய்விடு; நாளையிலிருந்து உன் சேவை வேண்டாம்" என்று சொல்வதற்கும்கூட ஜனங்கள் இல்லை. ஆனாலும் அந்த ஆள் செய்யவேண்டியதைச் செய்துவந்தான். இப்படிப்போல், ஒரு ஞானி, சம்சாரிகளின் நடுவே இருப்பது. உலகத்தில் எத்தனை பேர்களோ இதே ப்ரகாரம் நடக்கிறார்கள். சூக்ஷமமான வழியை அறிந்து கொள்வதில்லை. கர்மங்களைச் செய்கிற கர்த்தா தானாகியும் இன்ன வேலைதான் செய்கிறான் என்று தெரியாமல் இருக்கிறார்கள். அந்த நிலையில் ஜகத்தை இதற்கு உதாரணமாகச் சொல்லவேண்டியதாயிற்று.

168. அதே ப்ரகாரம் ஒவ்வொரு விஷயமும். ஒருவன் வேலை செய்யாமல் நிற்கிறான்.. இன்னொருவன் வேலை செய்து கொண்டிருக்கிறான். ஒருவனைப் பார்த்து ஒருவன்

நடக்கிருன். நியாயாந்நியாயங்களை அறியாமல் இருக்கிருர்கள். அவர்கள் நியாய அந்நியாயங்களை அறிந்தால், அந்நியாயங்களைச் செய்யத்தலைப்படார்கள். அந்நியாமாய் நடக்கிறவனுக்கு நியாயமாய் நடப்பது கஷ்டம். நியாயமாய் நடக்கிறவனுக்கு அந்நியாயமாக நடத்தல் கஷ்டம்; அப்பேர்ப்பட்டவன் நாக்கை அறுத்தாலும் பொய் சொல்லமாட்டான். அந்நியாயம் செய்கிறவனுக்கு எல்லாம் வேண்டும். நியாயம் செய்கிறவனுக்கு ஒன்றும் வேண்டியதில்லை. அவன் யாருக்கும் பயப்படமாட்டான். உலகமெல்லாம் தன்னுள்ளே இருக்கிறது. அந்நியாயக்காரருக்கு மனது உலகத்தில் இருக்கிறது. இம்மாதிரி 'நியாயம் இன்னது', 'அநியாயம் இன்னது' என்று தெரிதல் வேண்டும்.

169. சிற்ருறுகளும் நதிகளும் சமுத்திரத்தைச் சேர்ந்து ஐக்யம் ஆகின்றன. அகண்டமான வஸ்துக்களில் கண்டமானவைகள் ஐக்யமாகின்றன. துவைத வஸ்துக்கள் அத்வைதத்தில் சேர்ந்து போகின்றன. அத்வைதம் அகண்டமானது. ஏகமாய் எங்கும் இடைவிடாது நிறைந்த பாவனையே ஸ்ரேஷ்டமானது.

170. அகண்டமான பாவனையை யடைந்தபின் ஜனனமில்லை. அந்த பாவனையில் ஸ்திரமாய் நிலைத்தவர்கள் வேண்டும்போது இஷ்டப்படி பிராணனை விடலாம். ஆசையைப் பூர்ணமாகவிட்டவன் இச்சா மரணி. அகண்ட விருத்தி என்பது சூக்ஷ்ம விருத்தி. அகண்ட திருஷ்டி என்பதும் சமதிருஷ்டி என்பதும் ஆத்ம பாவனை. சர்வ பூதங்களிலும் இருக்கிற வஸ்து ஒன்றே என்கிற பாவனையே சமதிருஷ்டி-அந்தர் முகம். சமதிருஷ்டி என்ருல் இகலோகமும் பரலோகமும் கூடி இருப்பது; ஜீவாத்

மாவும் பரமாத்மாவும் கூடியிருப்பது. ஜீவாத்மா மனோ விருத்திகளுடன் இருப்பான். பரமாத்மா நிசப்தமானது; எவ்வித குணங்களுமில்லாதது; நல்லது, தீயது, சீதம், உஷ்ணம், என்கிறவை இல்லாமல் இருப்பது. எதுவும் இல்லாமல் இருப்பது. எந்த குணங்களுமில்லை. எவ்வித உருவமுமில்லை.

171. உடம்பின் மேல் உடையைப் போட்டுக்கொண்டால் குளிர் அதிகம். சரீரத்தை அலங்காரம் செய்து கொள்கிறவர்களுக்கு அகங்காரம் அதிகம். சரீராபிமானம் விட்டதில்லை. சுவற்றிற்கு மேலே சுண்ணாம்பு பூசினால் பிரயோஜனம் இல்லை. உள்ளுக்கு இருக்க வேண்டும். வெளியில் பூசப்படுவது வேறொருவருக்குக் காட்டுவதற்காகவாம். உள்ளே செய்யப்படுவது தன்னிடத்தில்தானே பிரதி ப்ரயோஜனத்தை அடைவதற்காக.

172. எல்லாம் தானே-சர்வாந்தர்யாமி-சர்வ ப்ராணிகளிடத்திலும் வியாபிக்கிறவன் தானே. குணமில்லாதவன் தானே; ஓங்கார சொரூபன்; சாந்தி உருவமானவன். நம்பினவர்களுக்கு வரம்கொடுத்தவன்தானே. நிந்தனை செய்தவருக்கு பலத்தை அளித்தவன் தானே. பக்த ஜனங்களுக்குமரண காலத்தில் கஷ்டம் கொடுக்காதவன் தானே. அதோ கதியை விட்டு மத்திய கதியைக்கொடு. சிவனே! அதைக் கொடுத்தவனும் சிவன்.

173. ஜீவனில்லாத ப்ராணி நகர்வதில்லை; சப்தமும் இல்லை. ஜீவனிருக்கும் ப்ராணிக்கு சப்த ப்ரமை உண்டு-என்றால்-ஞானம் உண்டு; ஞானம் இருக்கிற ப்ராணிகளுக்கு வாசனை உண்டு; வியாபாரங்கள் எல்லாம் இருக்கின்றன. சப்தம் இருக்கிற ப்ராணிகளுக்கு சப்த ப்ரமை உண்டு. ப்ரம்ம தேஜஸ்ஸும் உண்டு. பிராணிகளில் இருக்கிற அம்சமே ஒரே தேஜஸ். மனுஷ்யருக்கு

நியாயாந்யாய விசாரம்உண்டு. பிராணிகளுக்குமாத்திரமே இல்லை. மானுஷ ப்ராணி என்பது எல்லா ப்ராணிகளை விட ஸ்ரேஷ்டமானது. மனுஷ்யனுக்கு சாத்யமில்லாதது ஜகத்தில் எதுவும் இல்லை. மனிதனுக்குள்தான் ஜகத்து. ஜகத்துக்குள் மனுஷ்யன்; எல்லா ப்ராணிகளிலும் ஸ்ரேஷ்டன். மனுஷ்ய ப்ராணிக்கோ மனது சஞ்சலம்; மனுஷ்யனுக்குள் இஹலோகம் பரலோகம் கூடியிருப்பது, சிவலோகம்; மூன்ருவது கண் சிவலோக நாடி; சிவலோகநாடி என்பது சுஷும்னை; ப்ரம்ம நாடி. சிவலோகநாதன் என்ருல் சிவசக்தி; சிவலோகநாதனிடத்தில் மாய்கை; மாய்கையினுள்ளே சிவலோகநாதன். சிருஷ்டி லயங்கள், தன்னுல் வந்த மாயை: தன்னிடத்திலேயே லயம்; மனதும் லயம்; ஆத்மாவும் லயம்; காரியங்கள் லயம்; ப்ரம்ம லயம்; ஜாக்ரதை லயம்; தாரகம் லயம்; சுஷுப்தி லயம்; அதிக மூடத்துவம் லயம்; பஹிஸ்ஸு (வெளி யுலக மெல்லாம்) லயம்.

174. உண்மையை ஆராய்ந்து அறிவதற்கு சூக்ஷ்ம விசாரம் - "உபாதி". ஸ்தூலத்தில் சூக்ஷ்மம் சேருவது, உபாதியின் இருப்பிடம் - ஹ்ருதயாகாசம் - என்பது உபாதி. தன் நிலை (இருப்பிடம்) - மூளையில். தன்னிலையில் (மூளையில்) இருக்கும்போது, ஒற்றை ஸ்வாஸமாக இருக்கும். அப்படி ஒற்றை ஸ்வாஸம் சன்னமாய் இருக்கும்போது தன்னிடத்தில் ஜகத்து தோன்றும். அப்போது தன்னில் எல்லாம் தன்மயம் ஆகும். எல்லா அவஸ்தைகளும் (ஸ்திதி பேதங்கள், நிலை வேறுபாடுகள்) தன்னிடத்திலேயே உள்ளன. சிருஷ்டியும், (புதிதாய் உண்டாகின்றவையும்), லயமும், (இருப்பவை மறைந்து போகின்றவையும்,) (ஆகிய இவை) ஓரிடத்திலேயே காணும். (தன்னிடத்திலேயே காணும்.) இரண்டென

பாவனைப்பட்டால் அதுதான் நரகத்துக்கு ஹேது. எல்லாம் ஒன்றெனக் காண்பது முக்தி. அகண்ட பக்தியே முக்தி. சம்பூர்ண சாந்தியே, இடைவிடாததும், மேன்மையானதும், கலக்கமுறாததுமான சாந்தி. இதுதான் புருஷார்த்தம்; யோகானந்தம்; பரமானந்தம். எல்லா நதிகளையும்விட சமுத்திரம் மஹா பெரியது. சமுத்திரம் எல்லை அற்றது. அதிலுள்ள ஜலத்தை அளந்து பார்ப்பது முடியாதது. ஸம்ஸாரத்தை விட்டுவிட்டால் பக்தியை வழக்கப்படுத்துவது ஸாத்யமில்லை. ஸம்சாரத்தில் இருந்துகொண்டே இப்படிச்செய்தும் அப்படிச் செய்தும் முக்தியை அடையவேண்டும். எவை கோரிக்கைகளோ அவையே - ஆசை - ஸம்ஸாரம். எது நிராசையோ, அது முக்தி. அப்போதுதான் நித்யானந்தமாகிய தன்மயத்தை அனுபவிக்கிறான். ஸச்சிதானந்தம் புருஷார்த்தமாகிய பரமானந்தம். சாஸ்வத ஞான நிலை. அகண்டமாகிய சாந்தி. எப்போதும் அகண்டமாகிய ஆனந்தத்தில் நிலையாக இருப்பதே முக்தி; பக்தி ஸச்சிதானந்த பதவியாம்.

175. அவ்வானந்தத்தில் கடவுளும், கடவுளில் ஆனந்தமும், இருக்கும் - ரஸம் - ஞானம்ருதம். அவ்வமிர்தத்தில் மஹா சந்தோஷம். அவ்வமிர்தத்தின் பக்கம் நெருங்கும்போதே ஆனந்தானுபவம் உண்டாகின்றது.

176. உபநயனம் செய்யும்போதே மனிதனுக்கு அது புருஷார்த்தம். ஹ்ருதயாகாசத்தில் நிலைத்திருப்பதே புருஷார்த்தம். 'குஹவாஸி' (ஹ்ருதயத்தில் நிலைத்திருப்பது) என்றால், சரீரத்திற்குள் இருப்பது - (என்றால் ஞானகாசத்திலேயே தங்கியிருப்பது).

177. ஜீவாத்மாவுக்குள் பரமாத்மாவை இடைவிடாமல் கொண்டாடிக் கொண்டிரு. ஆகாசமானது

உன்னிடத்தில் தலேக்குள் (மூளையில்) இருப்பது. அதில் கொண்டாடு.

178. காதுகளில்லாதவருக்கு (கர்ணேந்திரியத்தை உபயோகப்படுத்தாதவர்களுக்கு) சப்தம் கேட்பதில்லே. அவ்வாசையும் இல்லே. சூக்ஷ்ம விசாரம்தான் இருப்பது. எப்பொழுதும் யோக நித்திரையில் இருப்பவருக்கு ராத்திரி என்றும், பகலென்றும், சூரியனென்றும், சந்திரனென்றும் இல்லே. சூக்ஷ்ம திருஷ்டியில் எல்லாம் ஒன்றே. மனது இல்லாதவர்கள் - மனுஷ்யர் - (மனதை ஜயித்தவர்கள்) மேன்மையானவர்கள். ஐந்துக்கள் - அதோகதிக்குப் போகும் நிலேயிலுள்ளவர்கள் - ப்ராணிகள். அதோகதி என்பது - மிருகங்களேப்போல் இந்திரியத்துக்கு வசமானவர்கள் கீழ் நிலேக்கு வந்துவிடுவது. மத்யகதி என்பதும், மேல்நிலேக்குப் போவது என்பதும், புருஷார்த்த மென்பதும், மேலுக்குப் பாயும் ஸ்வாஸம். (மூளே உச்சிக்குப் போகும் ஸ்வாஸம்) ஊர்த்வ ஸ்வாஸம்; காயத்ரி மந்தரானுஷ்டானம் செய்வது. அங்கே நித்ய ஸித்தியாகும். இதுவே யோகானந்தம்.

179. ஜகத் (எல்லாருக்கும்) குரு யாரெனில் - மனதை முற்றிலும் இல்லாதவன் (துறந்தவன்). ஆசையை வேரறுத்தவர் யாவருக்கும் ஆசார்யராவர்.

180. ஆசையைச் சுட்டுச் சாம்பலாக்கினவனே உண்மையான ஸந்நியாசி. அவனே ஜகத் குரு. ஆசையைப் பரித்யாகம் செய்தவனிடமே இஜ்ஜகத்தானது உஜ்ஜீவிக்கிறது. வெட்ட வெளியின் நிலேயே (ஆகாசம்) ஸந்யாஸமாகும். அதுவே ஜோதி - அதுவே அறிவு. அதுவே ப்ரம்ம தேஜஸ் என்பது - அதுவே பரஞ்ஜோதி. உள்ளிருக்கும் அக்னியும் வெளியிலிருக்கும் அக்னியும் அதுவே. சூக்ஷ்ம விசாரம் செய்வது அக்னியே. அந்த அக்னியே

யோகாக்னி. விசார அக்னியே யோகாக்னி. அப்பகுத்தறிவினுள் ஜகத்தும் - ஜகத்தினுள் பகுத்தறிவும் - ஆக இருக்கிறது.

181. அக்னி என்பது தன்மயமாக்கும் வஸ்து. எல்லா வஸ்துக்களுக்கும் ஸ்ரேஷ்டமானது. அக்னி எல்லா ஸ்ருஷ்டிகளிலும் முதன்மைப்பட்டது. முதலில் (அந்த அக்னியை) தான் செய்து அனுபவித்து, பின்னுல் மற்றவர்களுக்குச் சொல்லுவது முக்யமான கடமை. தனக்கு எப்போது பசி ஆகின்றதோ, மற்றவர்க்கும் அவ்வாறு அப்பசி உண்டாகும் என்று தெரியவேண்டும். தனக்கு எப்போது எப்படி நோவெடுக்கின்றதோ, அப்படி, மற்றவர்க்கும் அவ்வாறே நோவெடுக்கும் என்று தெரிய வேண்டியது. தனக்கு எது வேண்டுமென உத்தேசமாக இருக்கிறதோ அப்படி மற்றவர்க்கும் உத்தேசமாக இருக்கும் என்று அறிதல் வேண்டும். ஒரு வைத்யருக்கு ஒரு மருந்து தெரிந்திருந்தால், மரண பரியந்தம் அதையே வெளியில் மற்றவர்க்குச் சொல்வதில்லை. அம்மருந்து அவருடனேயே யாருக்கும் சொல்லாமல் தொலையும். கடவுளை அடையும் சாதனங்களை இம்மாதிரி வைத்துக் கொண்டிருப்பவர்கள் மனுஷ்யரல்லர். எல்லா வித்தைகளிலும் ப்ரம்ம வித்தையே சிரேஷ்டமானது. பிரம்ம வித்தையை யாவருக்கும் தெரியச்சொல்லி, செய்யும்படி ஆக்கவேண்டும். பசியுள்ளவனுக்கு அன்னமிடவேண்டும். விவேகமில்லாதவன் கடவுளைப்பற்றிக் கேட்கப்போவதில்லை.

182. முதன்மையாக வேண்டியது ஸ்ரத்தை (விசுவாசம்). இரண்டாவதாக வேண்டியது பக்தி - என்னுடைய நிலை. ஸ்ரத்தை (விசுவாசம்) இல்லாதவர்க்கு பக்தி

இருக்காது. நியாயாதிபதிகள் பிரதிவாதிகள் சொல்வதைக் கேட்கிறார்கள். சிரத்தை என்பதிதுவே. புத்திக்கு ஞானம் எட்டிய பிறகு விவேகத்தின் சுகம் இன்னதென்று தெரிகிறது. அது பரமானந்தம் - ஸச்சிதானந்தம். தன் இருப்பே (நிலையே) ஞானமாகத் தெரிந்தால் ஆனந்தம் அனுபவமாக ஏற்படுகிறது. இதுதான் ப்ரம்மானந்தம் - கூடிக்கூடி (எய்தும்) ஆனந்தம் சிவானந்தம்.

183. உன்னுள்ளே சிவனும், சிவனுக்குள் நீயும் உனக்குள் மாயையும், அம்மாயையில் சமஸ்த சிருஷ்டியும் லயமுமாகும். மாயை உன்னிடம் அடங்கிப்போகும், முக்குணங்களுமில்லாதவர்க்கு மாயை என்பதே அற்றுப் போம். மூன்று சரீரங்களின் பற்றும் அற்றிருக்கும். அவனே ஸதானந்தன். (மானுபிமானம், கவுரவம், அகவுரவம் என்பதே இல்லாமல்,) தன்மயமாய்க் காண்கிறவனே உள்பற்றில்லாதவன்.

184. மானுபிமானம் விட்டுத்தானாய் நின்றவர்க்குப் புருஷார்த்தம் கிடைக்கும். அதுதான் சாந்தி நிலை.

185. அகண்டமான வஸ்துவில் மாறிமாறி மறைகிற மாயையான கண்ட துண்டமான வஸ்துவில்லை. காரணம் இல்லாதவர்க்குப் புருஷார்த்தம் கிடைப்பதில்லை. (காரணம் - உற்று நோக்கியறியும் விவேகம்.)

186. இந்த மாம்சக் கண்கள் (உண்மையான [ஆத்ம] ஸ்வரூபத்தைக் காணக்கூடியன அல்ல) - என்றாலோ - ஒரு குருடன் கையில் விளக்கு இருந்தாலும் அதன் ப்ரயோஜனம் அவனுக்கு இல்லை. ('ஆத்மா' என்பது விளக்கு) வயிறு நிறையச் சாப்பிட்டவர்களுக்கு அன்னம் வேண்டியதில்லை. சமையல் ஆய் இருக்கிறது. அன்னத்

தின் வாசனையினுல் உனக்கு திருப்தியுண்டாகுமா? ஆகாது. நீ சாப்பிட்டால் மாத்திரம் வயிறு நிறையும். (பசி தீரும்). ஒரு தங்கத்துண்டு கையில் இருந்தால் மட்டும் ப்ரயோஜனமில்லை. அதை அக்னியில் வைத்தால் ப்ரகாசிக்கும். அதிலிருக்கும் மாசு நீக்கினுல் அன்றோ ப்ரகாசம்? அப்படியே, காம க்ரோதாதிகள் என்னும் மாசை அறவே நீக்கவேண்டும்.

187. ஆத்மா இருப்பதற்கு- சரீரம் ஒரு கூண்டு போன்றது. சரீரமானது, வசிப்பதற்கான ஒரு வீடு போலாம். அந்த வீடு இந்த வீடு (வீடென்றல் தங்கும் இடம்) என்னும் சூக்ஷ்ம விசாரம் ஆகிய வீடு - விவேக த்ருஷ்டி, ஸ்தூல சரீரமானது பிச்சைக்காரக் கூண்டு. ப்ரம்மானந்தம் என்பதைப்பற்றி என்ன சொல்வது? (ஒருவனுக்கும் சொல்வதற்காகாது.) உண்மையில் உண்மை; - உனக்குள்ளே நித்யாத்மா; - இருப்பது ஒருவனே. ஹரி வல்லவனல்ல. சிவனே வல்லவன். ஹரி என்பது சுற்றி அலைகிறவன். "ஹரி ஹரி! அது வேண்டும்! இது வேண்டும்!" என்று சொல்லுவது - பாழ். தனக்குக் கொடு! தனக்கு ஹரி என்பவன் சுக ப்ராணியல்லன். ஹரனிடத்தில் ஹரியை விடு. ஹரனிடத்தில் ஹரியைச் சுட்டுவிடு. ஹரி! ஹரி! என்று சொல்வது மனதினுடைய பிராந்தி - மனதின் பிரமையை உன்னுள்ளே வைத்துக் கொண்டாடுவது. நித்யானந்தத்தை கொடுத்தவன் சிவன். சிவனே சாஸ்வதமான முக்தி; (சிவனே) சாஸ்வதமான பக்தியைக் கொடுத்தவன். ஹரி என்பது லோகத்தில் - மனது செல்லும்படி விட்டிருப்பது. சிவன் சொல்வது என்ன வென்றல், லோகத்தைத் தன்னிடத்தில் அடக்கிக் கொள்வது. ஹரி என்று சொல்வது கீழ் நிலைக்குப்

போகும். சிவனென்று சொல்வது மத்யகதி (மேலுக்குப் போவது) - ஊர்த்வ கதி - முக்தி. ஹரி என்று சொல்வது லகாம் இல்லாத குதிரையின் நிலையேயாம்.

188. (2000) இரண்டாயிரம் ஜனங்களின் மத்தியில் அபாயம் இல்லாமல் குதிரையை விட்டுக்கொண்டு போக வேண்டுமாயின், ஓட்டிக்கொண்டு போகிறவன் சாமர்த்ய சாலியாயிருக்கவேண்டும். மேல் இருப்பது புத்தி. கீழ் இருப்பது மனது. புத்தி அரசன், மனது ப்ரதானி. புத்தி சொற்படி மனது கேட்க வேண்டுவது. முதலில் ஒலி (சப்தம்). இரண்டாவது விசாரம் (உள் நோக்கம்) வருவது. கார்ய குரு மனது; சொல்லித் தருவது காரண குரு; செய்வது காரண குரு; சொல்லிக் கொடுப்பது காரண குரு; சாத்யமாகும்படி செய்துகொடுப்பது கார்ய குரு; விசாரம் (வேண்டுமென்கிற உள் நோக்கம்) இல்லாவிடில், கார்ய குரு இல்லை. ஒரு வஸ்து வேண்டுமெனும் விசாரம் (உள் நினைப்பு) எப்போதும் இருக்கும் பக்ஷத்தில், காரண குரு வேண்டியது. காரண குரு ஒரு குளத்தைக் காட்டிக் கொடுப்பது. கார்ய குரு அக்குளத்தில் (நீரைக்) குடிப்பது. இருட்டை வெளிச்சமாக்கித் தருவது ஆகும். இருள் என்பது அஞ்ஞானம்; வெளிச்சம் ஞானம். இந்தத் தோல் கண் பார்வையை (வெளிப் பார்வையை) நிறுத்தி, உள் பார்வை பார்க்கும் வழியைக் கற்பித்துக் கொடுக்கிறவனே குரு. எல்லா வஸ்துக்களிலும் இருக்கிற ஒரு பெரிய ஜகத் குரு. ஒருவன் மற்றொருவனுக்குக் குருவாவதில்லை. ஒருவர்க்கொருவர் காரண குருவாக மட்டும் ஆகிறார்கள். "குரு" என்றால் ஜகத்துக்கெல்லாம் குரு. ஓங்காரம், ப்ரம்மா, விஷ்ணு, மஹேஸ்வரன் ஆம். பரப்ரம்மம் மூலவர். விஷ்ணு என்றால் மனோவ்ருத்தி. மஹேஸ்வரன் என்றால் "நசீஸ்

வரன்". "நசீஸ்வரன்" என்றால் சரீர அலங்காரம். ப்ரம்மேஸ்வரன் என்றால் சரீர பாவனை விட்டு இருத்தல் தேங்காய் முதிர்ந்து காய்ந்தது சிப்பியை விட்டு வேறு பட்டிருக்கிறதைப்போல் இருப்பவர்.

189. எல்லா வஸ்துக்களும் ஓங்கார ஸ்வரூபம் தைவாம்சம் என்பது ஓங்கார ஸ்வரூபமே. ஓங்கார ஸ்வரூபம் என்பது 'சூக்ஷ்ம பிந்து' - சூக்ஷ்ம வாயு ரூபமாக உள்ளவைகளுக்கு உள்ளும் புறம்பும் வியாபித்து நிற்பது. சிவ சக்தியை வர்ணிப்பது அசாத்யம். அதின் விஷயத்தில் ஸ்வானுபவம் உள்ளவர்களுக்கு வர்ணிக்கச் சாத்தியப்படலாம். அவ்வனுபவமில்லாதவர்களுக்கு வர்ணிப்பதற்கு சாத்தியப்படாது. புஸ்தக ஞானிகட்கு அசாத்தியம்; ஆனால் மஸ்தக (தலை, மூளை) ஞானமுள்ளவர்க்கு (ஆத்மானுபவமுள்ளவர்க்கு) வர்ணித்தல் சாத்தியம்.

190. ஹ்ருதயாகாசத்தில் சூர்யோதயத்தைக் கண்டவன் வர்ணிக்கலாகும். தன்னில் தான் அனுபவத்தைப் பெற்றுப் பார்க்கவேண்டும். புத்திக்குள் தன் ஞானத்தை நிறுத்தி நிலைக்கச் செய்து ஒன்றுபடுத்திப் பார்த்துத் தெரிந்துகொண்டு வர்ணிக்கலாம். புத்தியொரு பக்கம் ஞானம் மற்றொரு பக்கமாக வைக்கிறவர்கள் கண்டு வர்ணித்தல் அசாத்தியம். புத்தி ஞானங்களை ஒரே நிலையில் (இடத்தில்) நிறுத்துகிறபோதுதான் சூக்ஷ்ம விசாரம், (விவேக விசாரம் - நுண்மையை அறியும் அறிவு.) சிதறாமல் நின்று அறியும். (அலையுள்ள) நீரில் சூர்யனைப் பார்த்தால் பிம்பம் ஆடிக்கொண்டு இருக்கும். அப்படி சலித்துக்கொண்டு இருக்கிற மனது, மாயா பாசத்தினால் (உண்மையாக இருக்கும் ப்ரகாசத்தைக் கண்டறியாமல்) திகைத்துக்கொண்டிருக்கும் மாயையின்

இந்த மருள் (1) ஸ்தூல சம்பந்தமானது. சூக்ஷ்மமான மருள் என்பது சூக்ஷ்மமான அல்லது நுட்பமான விஷயங்களை ஆராய்தல் சூக்ஷ்மமான மாயை. ஸ்தூல மருள் என்பது ஸ்தூல விசாரம். எத்தனை வகை ருசி பேதமுள்ள பதார்த்தங்களைத் தின்றாலும், வயிற்றுக்குள் போகும் வழி ஒன்றே. (வயிற்றுக்கு அனைத்தும் ஒன்றே தான்). 'போஸ்டாபீஸ்' பெட்டிக்கு எந்த வகையான வர்த்தமானங்களை யெழுதிய கடிதங்கள் போட்ட போதிலும் தபால் பெட்டி ஒன்றேயாகும். நாக்குக்கு மட்டும் காரம், உப்பு வேறு. (அப்படி) மனதுக்கு வேறாக இல்லை. ஒரு பக்ஷியைக் கூண்டில் அடைத்து கால் கட்டிப் போட்டு ஒரு பாஷையை அப்பக்ஷிக்குக் கற்றுக் கொடுப்பதைப்போல் புத்தியை மனதிற்குள் நிறுத்தி, ஆத்மாவில் ஐக்யமாகும்படிச் செய்வதாம்.

191. முக்திக்கு அதிபதி என்பது சிவேஸ்வரன். சிவேஸ்வரன் என்பது தலைக்குள் இருக்கிற சிவலிங்கம். சிவலிங்கேஸ்வரன் என்பது ஓங்கார ஸ்வரூபம். தெளிந்த தெளிவில், அறிந்த அறிவே முக்யமானது. நாடிகள் இல்லாத பக்ஷத்தில் சப்தமும் இல்லை. பக்தி என்பதை விளக்கிலுள்ள எண்ணெய்க்கு ஒப்பிடலாம். நாடிகள் என்பது (திரி அல்லது) வத்திக்கு ஒப்பிடலாம். சூக்ஷ்ம ஆராய்ச்சி என்பது தீபம். அக்னி விளக்கு எனலாம். (ப்ரகாசம் எரிந்து சிகைகளாக விளங்குவதாம்). நாடிகள் அந்தப் பிரகாசத்திற்கு (பீங்கான் அல்லது கண்ணாடி) 'சிம்னி'களைப் போலாம். மேல் மேல் இருக்கப்பட்ட 'லாந்தரின்' ரந்திரங்கள் ப்ரம்ம ரந்த்ரங்களாம். அவ்வாராய்ச்சிக்குப் புத்தி என்பதே ரூபம்.

(1) உண்மையை மறைத்து இல்லாததை இருப்பதுபோல் காட்டுகிற இருள், 'மருள்' எனப்படும்.

192. மூக்கையும் வாயையும் மூடிய பக்ஷத்தில் பேசுவதற்கு சாத்யமில்லை. அப்படி ஸ்வாஸம் இல்லாமல் நிறுத்தினால், சப்தமும் இல்லை. ஒரு ஜலாசயத்தில் நீர் சுண்டி (ஆவியாய்ப் போகும்போது) காற்றும் அதனுடன் போகிறது. நீர் ஆட்டத்தினால் காற்று ஆட்டம் காணும். ஐந்து நாள் ஆனாலும் ஆகாரமும் 'காபி'யும் இல்லாமல் இருப்பதற்கும் சாத்யமாய் இருக்கலாம். வாயு இல்லாமல் இருந்தால் ஐந்து நிமிஷமும் ஜீவித்திருக்க முடியாது.

193. மாயை என்பது எவ்வித சக்திகளைப் பார்க்கிலும் அதிக சக்தியை உடையது. ஒரு பிணம் அல்லது கல் பேசமுடியாது. எப்படி வாயு ஆடிக்கொண்டிராவிட்டால், அக்னியும் எரியாது. ஸ்வாஸம் க்ரமமாய்ப் போக்குவரவு இல்லாமல் இருந்தால் ஜீர்ணாக்னி கெட்டு, கபம் உண்டாகி, கட்டியாகிறது. ஸ்தூலமும் புஷ்டியாகிறது. சாப்பிட்ட ஆகாரம் ஜீர்ணமாகாமல் வயிற்றில் தங்கிவிடும். தண்ணீர் குழாய்களில் எங்கேயாகிலும் தடையேற்பட்டால் நீரோட்டம் தடைப்பட்டு நின்றுவிடுகிறது. அப்படிப்போல் ஸ்வாசப் போக்குவரவு கஷ்டமானால் ஜ்வரமும் கபம் நிறைதலும் உண்டாகின்றன. இதனால் எல்லா வியாதிகளும் வருகின்றன.

194. எல்லாம் உள்ளிருந்தே வருகின்றன. வெளியிலிருந்தல்ல. ஒருவன் தன்னாலேயே தான் கெட்டுப் போகிறான்; தான் நல்லவனுமாகிறான். ஆகையினால், உள்ளிருந்து உள்ளுக்கு ஓங்கார ஸ்வாஸம் ஸ்வாசிக்க வேண்டும், அப்பொழுதுதான் பரிசுத்தி ஏற்படுகிறது. நன்றாயிருக்கிறதில் கெட்டது சேர்ந்தால், கெட்டது நல்லதாகிறது. உன் ஸ்வாதீனத்தில் இருக்கிற வஸ்துவுக்கு வாசனையில்லை. விலையும் இல்லை. மற்றவரிடத்திலிருந்து வாங்கிக்கொள்ளுகிற வஸ்துவுக்கு விலையு

முண்டு; வாசனேயும் உண்டு. 'ஒரு ராஜயோகி - மகாத்மா; நித்யானந்தன்; ஓங்கார ஸ்வரூபன் - வியாபித்திருக்கிறன். சர்வ வ்யாபியாகிய ப்ரணவமாகிறன். யாரொருவன் குருவாகிறனே அவன் நித்தியானந்தன். முதலில், பூர்ண சாந்தி வருவதற்கு முந்தி, மாயையினுடைய சக்தி அதிகமாய்க் காட்டும். எங்கெங்கே பார்த்தாலும் ஸர்ப்பங்களாகத் தோன்றுவது. ஆரம்பத்தில் அப்யாசம் செய்ய உட்கார்ந்தாலும் பர்வதத்தைப்போல் தோன்றுகிறது. நிலேயை விட்டு விட்டதாகத் தோன்றுகிறது சமுத்திரத்தில் உட்கார்ந்தபடி தோன்றுகிறது. ஒரு தடவை வெந்நீர் விழுந்ததுபோல் தோன்றுகிறது. மற்றொரு தட்வை பெரிய மாளிகையில் உட்கார்ந்தபடி தோன்றுகிறது. மற்றொரு தடவை ஊசியைப்போல் ஆகிறது. மற்றொரு தடவை ஒரு இலேயைப்போல் தோன்றுகிறது. மற்றொரு தடவை நடந்து கொண்டிருப்பதுபோலும், உட்கார்ந்திருப்பது போலும், வாயினுல் பேசுகிறது, ஆனுல் பாவனே மாத்திரம் இல்லாமல் நிற்பது (போலும் தோன்றுகிறது). ஒரு தடவை கல்ப விருக்ஷத்தைப்போல் நின்றுபோகிறது. மற்றொரு தடவை பனிதர்கள் நாடக வேஷங்களேப் போட்டதுபோல் தோன்றுகிறது. மற்றொரு தடவை கருப்பு முகமும் தோன்றுகிறது. பூர்ண சாந்தி; அகண்டமாய் வெண்மையாகத் தோன்றுகிறது. இருட்டில் விளக்கைப் போலும், விளக்குக்குள் இருளேப் போலும், இருட்டுக்குள் ஜகமேயிருப்பதுபோலும், ஜகத்துக்குள் ப்ரகாசம் இருப்பது போலும், ஒரு தடவை பார்க்கும்போது இது "பயாஸ்கோப்"பைப் போலும் காணப்படுகிறது. ஒரு தடவை ஸச்சிதானந்தத்தைப் போலும் (தோன்றுகிறது); ஒரு தடவை பார்க்கும்போது, 'மனுஷ்யர்கள் ஏன் வந்தார்கள்?

எங்கே போவது? தான் செய்யவேண்டிய கர்த்தவ்யம் எது? என்று தோன்றுமல் இருப்பது. கீழுக்கு வருவதும் ஸ்திரமில்லை. மேலே மேலே போவதும் ஸ்திரம். படிக்கட்டுகள் ஏறி, மாளிகையின்மேல் உட்கார்ந்துகொண்டு பார்த்தவருக்கு அகண்டமான வலைகள் காணப்படுகிறது. கேட்பதும், பார்ப்பதும், செய்வதும், - ஓங்கார ஸ்வரூபமயமே - ப்ரணவ ஸ்வரூபமாய்க் காணப்படுகிறது. பக்ஷிகள் விமானத்தைப் போலும், மிருகங்கள் மனுஷ்யரைப் போலும், மனுஷ்யர் மிருகங்களைப் போலும், நாய்களைப் பார்த்தால் ஞானிகளைப்போலும் தோன்றுகிறது. நாய்க்கு அன்னமிட்டால், ப்ராணுந்தம் வரை - அந்த நினைப்பு விடுவதில்லை. ஒரு தடவை அன்னமிட்ட எஜமானனுடைய ப்ரேமையை விட்டு விடுவதில்லை. சூக்ஷ்ம விசாரமில்லை. எங்கிருந்து வந்தது? எங்கே போவது? என்கிற விசாரமில்லை. வீட்டுக்கு வந்தமேல் மனுஷ்யன் நாயைப்போல் இருக்கவேண்டும்.

195. ஒரு அரசனைக் கண்டு அவரெதிரில் யாரும் (அவருடைய குறைகளைப்பற்றிப்) பேசுவதில்லை. பின்னுல் பேசிக் கொள்ளுகிறுர்கள். அம்மாதிரியாக ஞானிகளின் எதிரில் நேராக யார்க்கும் தூஷிப்பதற்கு தைர்யமில்லை. அதிகமான வெயிலையே பார்த்துவிட்டு இருட்டுக்குள் வந்தால் கொஞ்சநேரம் ஒன்றுமே தோன்றுவதில்லை. அவ்வண்ணமே, இருளிலேயே இருந்துவிட்டு வெயிலுக்கு வந்தால் (சற்றுமுன் இருளில் இருந்ததை மறந்து) எங்கிருந்து வந்ததென்று தெரிகிறதில்லை.

196. பயத்தினுல் திடீரென்று நல்ல நித்திரையை விட்டு எழுந்து உட்கார்ந்தவனுக்கு (தன் விழிப்பிற்கு காரணம்) ஏதென்று தோன்றுவதில்லை. அப்படி ஞானிகளும் எப்பொழுதும் (யோக) நித்திரையில் இருக்கும்

பொழுது, ஒன்றும் நினைப்பில்லை. (மழையில்) குடை பிடித்திருந்தால் தலை நனையாது. எப்போதும் சாப்பிட்டு வருகிறவர்களுக்குப் பசியிருக்கும். பூரா முழுகின வனுக்குக் குளிர் இல்லை. பூர்ண ஸ்திதி அடைந்த வனுக்கு மனக்கலக்கம் இல்லை. நெருப்பில் சுட்ட விதை முளையாது. புடம்போட்ட தங்கத்தைப்போல் சுத்தமாக இருக்கவேண்டும் (மனது).

197. ஒரு உத்தமமான நாக சர்ப்பத்திற்கு உள்ளுக் குள்ளே ப்ராணயாமம் உண்டு. சர்ப்பம் நாக சுரத்தை (வாத்யத்தைக்) கேட்பதற்குச் செவி சாய்க்கிறது. ஞானி எல்லாவற்றையும், தன் கன்றை நேசிக்கிற பசுவைப் போல் சம த்ருஷ்டியால் நேசிக்கிறான். இதுதான் சம த்ருஷ்டி என்பது. அதே ப்ரகாரம் வாசலில்லாத வீடில்லை. பாத்திரம் இல்லாமல் சமையல் இல்லை. தங்கப் பாத்திரத்தில் சமையல் செய்தாலும், மண் பாத்திரத்தில் செய்தாலும் நாயும் தின்கிறது. பட்சிகளுக்கு இப் போதைக்கு வேண்டிய ஆலோசனை மாத்திரம் இருக்கிறது. நாளை விசாரம் இல்லை. பெட்டியில் போட்டு வைத்திருக் கிற விதை தளிர்கிறதில்லை. பலன் தருவதும் இல்லை. அதை மண்ணிலிட்டிருந்தால் பலன் கிடைக்கும் ஆகை யினால், எப்படி எதைச் செய்யவேண்டுமோ அதைச் செய்து அனுபவிக்கவேண்டும். (ஒருவன்) தன்னால்தானே தனக்கு சுகதுக்கங்களை வருவித்துக் கொள்ளுகிறான்.

198. ஒரு தீபத்தை யார் வைத்திருந்தாலும் வைத்தி ருக்கலாம். சூர்யன் ப்ரகாசிப்பது எல்லா ஜனங்களுக்கும் ஒரே ப்ரகாசம்தான். சூர்யன் எல்லாருக்கும் ஒரே மாதிரியாகக் காணப்படுகிறான். அக்னியும் எல்லா ருக்கும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. ஸ்தூல

த்ருஷ்டி, விசாரம், இல்லாதவர்க்கு ஸ்ரேஷ்டமான புத்தியும் ஞானமும் ஒரு நிலைதான்.

199. சூக்ஷ்ம புத்தி இல்லாதவர்கள் மனுஷ்யர்களல்ல. மனித ப்ராணியும் அல்ல. ஸ்தூல மென்பது சரீர பாவனை. சூக்ஷ்மமென்பது ஆத்ம பாவனை. ஜீவாத்மா ஸ்தூலம் எனலாம். சூக்ஷ்மம் என்பது பரமாத்மா. ஆனால் ஸ்தூலமில்லாமல் சூக்ஷ்மத்தைப் பார்ப்பதற்கில்லை. பஞ்சாங்கம் அல்லது ஐந்து முக்யமான சாதனங்கள் இல்லாமல் வீடு கட்டுவதற்காவதில்லை. ஆலோசனை சக்தி அல்லது உட்பார்வை (உள்ளுக்குள்ளேயே ஆராயும் சக்தி) என்பது சிவசக்தி. சிவசக்தி என்றால் ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் கூடியிருக்கும்படிச் செய்வது. சிவசக்தி அதிகமானல் உத்தம புருஷனாகிறான். உத்தம புருஷனென்றால் மேன்மையான பாக்யத்தை அடைந்தவன். ப்ராம்மணன்; ப்ரம்ம ஞானி. வேதாந்தம் என்பது யாவற்றிற்கும் உள்நடவடிக்கை அல்லது ஆசாரத்தைக் காட்டுகிறது.

200. ஆசையைச் சுத்தமாய் விட்டவனே ஆசார்யன்; ஆசையை விட்டவனே சந்நியாசி. உலகத்தில் ஆசைப் பற்று சுத்தமாய் இல்லாதவனே அவதூதன். அவதூதன் [நிலை] மேலான வகுப்பு அல்லது முதல் வகுப்பு என்னலாம். எல்லாரிலும் மிக்கவன் அவதூதன். அவதூதன் என்பவனுடைய பதவிக்குமேலே பதவியில்லை. யாவருக்கும் மேல் சென்று உட்கார்ந்தவனே அவதூதன். எவனுக்கு இவ்வுலகமும் விண்ணுலகமும் ஒன்றோ, அவனே அவதூதன். சிதம்பரம் என்றால் [ஞான ஆகாசம்]. நிஜாம்பரம் [என்றால் உண்மையான ஆகாசம்]. ஜீவன் முக்தி சுயராஜ்ய ஆனந்தம். ப்ரம்மானந்தனே, நிஜானந்

தனே, யோகானந்தனே, எல்லா பாவங்களையும் பரிகாரம் செய்து ஜன்மம் எடுத்ததின் பயனை அடைந்தவன்; ஜீவன் முக்தி அடைந்தவன்; போதகர்களில் ஸ்ரேஷ்டன்.

201. உண்மையை விசாரித்து அறிந்து சொல்லுகிற வனுல்தான், அல்லது ஆசைகளைச் சுத்தமாய் விட்டவனுல் தான், உலகம் உத்தாரம் ஆவது. தத்துவ சிந்தனை செய்கிறவனே முனி. அவன்தான் சிவன்; சிவனே அவன். காணப்படும் வஸ்துக்களெல்லாம் சிவனே.

202. தத்துவமாகிய உண்மையை அறியாதவன் பிச்சைக்காரன் அல்லது ஏழை. ப்ரமைக்கு அல்லது அதோ கதிக்கு இழுக்கும் மனப்பான்மையை மாற்றுதவன்தான் பிச்சைக்காரன்.

203. மானுபிமானம் விட்டவர்களுக்கே நிஜானந்தம். ப்ரமானந்தம் அது தன்மயமாகும். அவ்வாறு, ஐந்து நிமிஷம் புத்தியும் ஞானமும் ஒன்றுபடச் சேர்த்து ஒரு லக்ஷியத்தில் வைத்தால் தன்மயமாகின்றது. காரணம் (உள்நோக்கத்தில் உணர்ச்சி) இல்லாதவர்க்கு புருஷார்த்தம் (ஜீவன் முக்தி) இல்லை. காரணம் இல்லாத வர்கள் மாய்கையில் அகப்பட்டு உழன்று கீழே போய் விடுவார்கள். தீபத்தில் விழுகின்ற பதங்கத்தைப் போல் (நசித்துப்போவார்கள்). பதங்கங்கள் தூரத்தில் தீபத்தைப் பார்த்து ஆனந்தத்தினுல் கூடி ஆடி அதிலே போய் விழுந்து இறந்துபோகின்றன.

204. ஸ்வாஸத்தை க்ரமப்படுத்தாதவர்களுக்கு யோக சித்தி இல்லை. ஒரு கிணற்றிலிருந்து நீர் எடுக்க வேண்டுமானுல் மேலுக்கு இழுப்பதற்கு சரியான கயிறு ஒன்று இருக்கவேண்டும்; இல்லாவிட்டால், அது முடியாது. பந்தத்திலிருந்து விடுபடாதவர்களுக்கு சாந்தி இல்லை,

நீர் இல்லாமல் ஒருவர் ஜீவித்திருக்கமுடியாது. மனதை நாசப்படுத்தினவர்களுக்கு வாசனை இல்லை. சிறு குழந்தைகள் (சிசுக்கள்) ஆறு மாதம் வரையில் ராஜ யோகிகள். மூளை முதிர்ந்த பிற்பாடு, ஹடயோகிகள்; அப்படிப்பட்ட குழந்தைகளுக்கு மனது சஞ்சலம்; ஏனென்றால் உள்ளுக்கு ஆராய்ச்சி செய்யும் சக்தி இல்லாததினால்தான் மண்ணைச் 'சர்க்கரை'யென்றும், சர்க்கரையை 'மண் என்றும் எண்ணிக்கொள்கிறார்கள். ஒரு மரத்தில் பழங்கள் மேலே உண்டாகின்றன. மனுஷ்யனுக்கும் பலிதம் மேலே ஆகிறது. ஒரு முதிர்ந்த தேங்காய் (நெற்று) பூமியில் விதைத்தால் மேலுக்கு அன்றோ அதன் பலன்? இப்படி ப்ரதி வஸ்து விஷயத்திலும் பலிதம் மேலிருந்தே ஆகிறது.

205. குடை மனுஷ்யனைப் பிடித்துக் கொண்டிருக்கிறதில்லை. (மனிதன்தான் குடையைப் பிடித்துக் கொள்கிறான்.) மனதுதான் எல்லாவற்றையும் பிடித்துக் கொள்வது. மனதில்லாவிட்டால் (பற்றுக்களுக்கு ஆதாரமாயுள்ள விஷயத்தில்) பேதங்களில்லை. அவனுக்கு ஆசையும் இல்லை. அது அற்றபின் அவனே சந்யாசி அவனே யோகி. மனது இருக்கிற மனிதனுக்கு எல்லாம் வேண்டியவை. மனதில்லாதவர்க்கு எல்லாம் தன்னிடத்திலேயே உண்டு. ஒரு "ஸ்டீமரு"க்குள் எல்லா சாமான்களும் இருக்கின்றதைப்போல், மனதில்லாதவன் இந்த லோகமே தன்னிடத்தில் இருப்பதாகப் பார்ப்பான்.

206. ஒரு தோணி வேகமாய் போகும்போது எல்லாம் திரும்பித் திரும்பிச் சுழல்கிற மாதிரி காணும். அப்படியே மனது வெளியே போகும்போது, எல்லாமும் (மனதினுடைய விகாரங்கள்) சுழலும். சுஷுப்தியில் (தூக்கத்தில்) வந்தது ஜாக்ரத்தில் (விழிப்பில்) வரு

வதில்லை. விழிப்பில் வந்தது தூக்கத்தில் வருவது இல்லை. (நெருப்பின் பேரில் இருக்கிற) ஒரு பாத்திரத்தில் நீர் இல்லாவிடில் நெருப்பினால் சப்தம் உண்டாவதில்லை; நீர் வேண்டும். அப்படி உள் ஆராயும் உணர்வு இல்லாதவர்களுக்கு ப்ரயோஜனம் ஒன்றும் இல்லை. நித்திரையில் சர்ப்பம் கடித்தால் ஒருவனும் சாவதில்லை. அப்பொழுது மனதில்லை. மனது இருந்தால்தான் எல்லாம் உண்டு. சிருஷ்டி என்பதுகூட மனோபாவனைதான் உள்நோக்கத்தில் சிருஷ்டி இல்லை.

207. யோக ஆரம்பத்தில் நித்திரையைக் குறைக்க வேண்டும். மிதமான ஆகாரத்தை உட்கொள்ள வேண்டும். குளிர்ந்த ஜலம் ஸ்நானம் ஆரம்பத்தில் செய்யவேண்டாம். நான்கு அல்லது ஐந்து மணி நேரத்துக்கு குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்தால் இரத்த ஓட்டத்துக்கு பாதகம் உண்டாகும். முதலில் நாடகம் போடுகிறவர்கள் வேஷத்தை உள்ளே ஆடிப் (பார்த்து) பின் வெளியில் ஆடுவது. முதலில் ரஹசியத்தில் செய்து, பார்த்து, பிறகு வெளியில் கொண்டு வரவேண்டும். நிரம்பிய பாத்திரத்தில் நீர்விட்டால் வெளியே வழிந்துவரும். அவ்வண்ணம், சாந்தியும் கடைசி நிலைமைக்கு வந்தபின் யாவர்க்கும் தெரிகின்றது. அப்படி ஆனவனுக்கு ஒன்றிலும் இஷ்டம் இருக்காது. இதுதான் முதல்தரமான சாந்தி. பூர்ண சாந்தி ஐக்யம். (கடவுளுடன் ஐக்யப்பட்டது சாந்தி.)

208. கடவுள் பரம சாந்தன் என்று சொல்லப்படுகிறது. ஓம்-என்பதும் சாந்தாகாரம்-என்பதும் ஒன்றுதான். ஆகாரம் (உருவம்) இல்லை; விகாரம் (சலனம்) இல்லை; விசாரம் (எந்தவிதமான பார்வையும்) இல்லை;

சந்தோஷம் ஒன்றே இருக்கின்றது. சின்ன குழந்தைகளைத் தொட்டிலில் இட்டுத் தூங்கச் செய்கிறமாதிரி, நாமும் மனதென்னும் தலையணையின்பேரில் உள்ளுக்குள் சயனிக்கவேண்டும். நாம் (யோகத்தில்) முயல்கின்ற ஒவ்வொரு ப்ரயத்தனத்திலும் தேர்ச்சியடையவேண்டும். இல்லாவிட்டால் பதவி கிடைக்காது. இங்கிலீஷ் பேசுவதற்குத் தெரியும்; எழுதுவதற்குத் தெரியாதென்றால், அது தேர்ச்சி அடைந்ததாக இல்லை.

209. கண்டஸ்தானம் (கழுத்து) என்பது மூலாதார குண்டலி எனலாம். கண்டஸ்தானத்திற்கு ஹ்ருதயாகாச ஸ்தானம் புருவமத்யமம்; ஸ்வாதிஷ்டானம் என்பது சிரசுக்குள். ராஜயோகம் என்பது கழுத்திற்கு மேலே. ஆக்ஞா என்பது முக்கோண வடிவுள்ளது. த்ரிகோணம் மனிதனுக்கு முக்தி ஸ்தலம் ஆகிறது. 'இஹ' என்று சொன்னால் ஜீவாத்மா என்றும், 'பர' என்று சொன்னால் பரமாத்மா என்றும், இவ்விரண்டும் கூடி இருப்பதே 'சிதம்பரம்' என்றும் சொல்லலாம். 'சித்' என்றால் ஞானத்தில் சென்ற மனோவ்ருத்தி. 'சத்' என்றால் அகண்ட பரமாத்மா.

210. ரேசகம் என்றால் ஸ்வாசத்தை மேலே இழுத்துக் கொள்வது. கும்பகம் என்றால் உள்ளே நிறுத்துவது. பூரகம் என்றால் கீழே விடுவது. உள்ளுக்குள்ளே கீழுக்கு விடுவது. ஒரு அரிசியிலிருந்து அநேக பட்சணங்கள் ஆகின்றன. அதே ப்ரகாரம் ஒரே ஸ்வாசத்திலிருந்து எல்லாம் செய்யப்படுவது. சப்தம் மட்டும் வேறு. ஆந்தர ப்ராணயாமம் என்றால் உள்ளுக்குள்ளே நடத்தப் படுவது. தன்னிடத்தில் உள்ளுக்குள்ளே இருக்கிற சிவ சக்தியை உள்ளுக்கே நடத்தி ப்ரம்ம ரந்திரத்திற்கு ஏற்றி ஐக்யப்படுத்துவது.

211. சிவசக்தி என்பது அகண்டமானது. சிவசக்தி என்பது சத்கதி-(ஜீவன் முக்தி). சிவசக்தி - ஊர்த்வ ஸ்வாஸம். அதே ப்ராண வாயு. அதுவே ஓங்காரம்-என்றால் ப்ரணவம்; ப்ரணவத்திலிருந்து சிருஷ்டி; பிரணவம் என்றால் சரீரத்தில் நின்ற உணர்ச்சி. ஓங்காரம் என்பது ஆத்ம உணர்ச்சி. ஓங்காரம் என்பது முதிர்ந்த தேங்காயினுள் இருக்கும் பருப்பு. சிறுசிறு வஸ்துக்கள் பெரிய வஸ்துவில் சேர்ந்தால் ஒன்றாகின்றது. ஒரு நதி சமுத்திரத்தைச் சேர்ந்த தொக்கும். நதியென்றால் மனோவ்ருத்தி; சமுத்திரம் என்பது அகண்ட சக்தி. நெருப்பில் ஒரு காகிதத்தை இட்டால் சுடப்பட்டு லயமாய்விடுகிறதுபோல், மனதும் ஆத்மாவில் அப்படியேயாகும். ஐந்தாறு பாதைகள் ஒரு மத்ய ஸ்தானத்தில் சேர்கிறது. அதற்குக் கால் நடையாகவும் "ரெயிலி"னாலும் போய்ச் சேரலாம். ரெயில் என்றால் சரீரம். போவதும் வருவதும் ஆம்.

212. ஆசனம் என்பது ஒரு 'ஸ்டேஷன்'. (ஆசனம் என்பது சரீரம் ஆடாமல் ஸ்திரமாக இருப்பதற்கு உள்ள விதமாக கை கால்கள் ஊன்றியோ, ஓர் வகையாக வைக்கப்பட்டோ, சலனமற்று இருப்பதற்குத்தகுதியுள்ளவாறு சரீர அவயவங்களை நிறுத்துதல்). சுகாசனம் என்பது ராஜயோகத்திற்கு இசைந்தது; சுருங்கச் சொன்னால், ஆசனம் என்பது ஓர் இடத்தில் நிலைத்திருத்தல்.

213. சமாதி என்பது தன்னுள் இருக்கும் சக்தியை (ஆராய்தல், அறிதல், நிலைத்தல், உணர்தல் முதலியவை) தன் ஸ்வாதீனத்திற்குக் கொண்டுவருதல். சமாதி என்றால் ஊர்த்வ ஸ்வாஸம்;-என்றால் 'தாரக ப்ரம்மம்'. ஊர்த்வ ஸ்வாஸம் நன்றாய் வழக்கத்திற்கு வந்த பிற்பாடு, உலகமெல்லாம் உன்னிடத்தில் இருக்கும். இந்த ஊர்த்வ

ஸ்வாஸம் எல்லா ப்ராணிகளுக்கும் ஒன்றுதான். ராஜ யோகி என்றால் அகண்டமான ஒன்றை தான் கண்டறிந்த னுபவித்தவன். (அவன்) ஊர்த்வ ஸ்வாஸ வ்ருத்தியை (மேலுக்கு முட்ட வைக்கப்பட்ட ஸ்வாஸத்தை) உட் கார்ந்திருக்கும் போதும், நடக்கும்போதும், பேசும் போதும் செய்துகொண்டே (அவ்வொன்றுடன் ஒன்றி) யிருப்பன். மேல் மாடி மீதிருந்து (சுற்றிலுமுள்ள யாவையும்) கீழே பார்ப்பதுபோல், ராஜயோகம். ராஜ யோகமானது யோகங்களிலெல்லாம் முக்யமானது. புத்தி யையும் ஞானத்தையும் ஒரே நிலையில் நிறுத்தி இருப்பது ராஜயோகம். அது எப்பொழுதும் சாந்தியாக இருக்கும். அதற்கு வேறே மாதிரி இல்லை-குணமும் (முக்குணமும்) இல்லை. அச்சந்தோஷத்திற்கு எந்த குணமும் இல்லை. (இவ்விதமென்று சொல்வதற்கில்லை). எந்த குணமும் இல்லாதிருப்பது ஜீவன் முக்தி.

214. ப்ரகிருதியி (இயல்பி)லிருந்து சிருஷ்டிக்கப்படு வதும் லயப்படுவதும். ப்ரகிருதியிலிருந்து வேறுபட்டு வெளியே வருவது சிருஷ்டி. ப்ரகிருதியிலேயே போய் அடங்கிவிடுவது லயம். தன்னைவிட்டு தான் அல்லாத மற்ற வஸ்துவினுடைய கலப்பு இல்லாமலிருத்தல் சிருஷ்டி. ராஜ யோகத்திற்கு கர்மம் என்பது இல்லை. சிவபூஜையும் இல்லை. ஸ்தானமுமில்லை. இவையெல்லாம் அந்த ராஜயோகிகளுக்கு ஊர்த்வ தண்டத்தில் (நிலை யிலேயே)யே ஆகின்றன. ஊர்த்வ ஸ்வாஸத்திலேயே நமஸ்காரம் செய்வது. தன் ஹ்ருதயத்தில் நமஸ்காரம் செய்தால், எல்லா இடங்களிலும் செய்தபடி ஆகிறது.

215. ப்ரம்மாவஸ்தை (ப்ரம்மத்வம் அடைந்த நிலை) என்பது தன்னில்தான் இன்னதென்று அறிந்து ஒன்றாகி யிருத்தல். 'பிண்டாண்டம்' என்பது புத்திக்கு

வெளியே தோன்றுவது. உள்ளே தோன்றுவது ப்ரம்மாண்டம். ப்ரம்மாண்டத்திற்கு சிருஷ்டியில்லை. மனோ பாவனைக்கு சிருஷ்டி. ஆத்மாவுக்கு சிருஷ்டி இல்லை. மனோ பாவனைக்கு எல்லாவிதமான பயங்களும் உண்டு. எல்லா சிருஷ்டியும் சரீர பாவனைக்கு (வெளியில் தோன்றும்) உலகத்தைத் தனக்குள் இருத்திக்கொண்டால் பயமே இல்லை. உடல்மேல் ஆபரணம் இருந்தால் (திருடர்) பயம் உண்டு. அது இல்லாதவர்களுக்குத் துக்கமில்லை. அவர்களுக்கு சமதிருஷ்டி. ஊன் கண்ணினால் பார்க்கிறவர்களுக்கு ஆசைப்பற்றுண்டு. அவர்களுக்குத்தான் இந்த வித்யாசங்களெல்லாம் காணப்படும். ஆசையிருந்தால்தான் கர்மங்களைச் செய்யும்படி தூண்டுகிறது, நிராசை என்பதே முக்தி. செயலின் பயனை வேண்டாப் பான்மையே ஜீவன் முக்திக்கு வழி. இதுதான் அவதூதனுடைய பான்மை. இந்த நிலை சூக்ஷ்மமான உள்நோக்கம். ஞானிகளுக்கு நோக்கமே உள் நோக்கம்தான். அவர்கள் மனதை இல்லாமல் செய்தவர்கள். அவர்கள் தம் ஆத்மாவையே எங்கும் பரந்து நிறைந்ததாகப் பார்க்கிறவர்கள். இந்த வித்யாசங்கள் தோன்றுகிற நிலை அவர்களுக்கு இல்லை. நீக்கமற்று நிறைந்த ஒன்றை (உய்த்து) உணர்ந்து நிற்கிறார்கள். ஸ்தூல நிலையில்தான் வித்யாஸங்கள் இருப்பது. உள்ளுக்குள்ளே நடக்கிற ஸ்வாஸம் கண்டமாக (நிற்கிறதே) அல்ல. இடைவிடாமல் நடப்பதேயாம்.

216. ஸ்தூல கற்பனை என்றால் (உலக விஷயங்களில் ஈடுபடுதல், மனதின் மயக்கம்தான்; ஆகையினால்) ஸ்தூல தத்துவம் (ஆகிய) மனோபாவனையில் ஏற்பட்டது. சூக்ஷ்ம விசாரம் என்றால் உள் ஆராய்ந்து ஆத்மாவை உணரும் விவேகம்; அது ஆத்மபாவனை. ஞானிகள் எப்பொழுதும்

யோக நித்திரையில் இருப்பார்கள். நடக்கும்போதும் உட்கார்ந்திருக்கும்போதும் நித்திரை. (யோக நித்திரை-ஆத்மநிலையை விடாமல் பிடித்து நிற்பது). ஆமையைப் போல் இருக்கிறவர்கள் ஞானிகள். அவைகள் (ஆமைகள்) அவசியம் இருக்கும்போது கால்களை வெளியில் நீட்டி, மற்ற சமயங்களில் உள்ளுக்கு இழுத்துக் கொள்வது போல்.

217. "மெயில் ட்ரெயினி"லும் "லோகல் ட்ரெயினி"லும் ஓடும் சக்தி ஒன்றேதான்; காலத்தில்தான் வித்தியாசம். அவ்வண்ணமே, சந்நியாசியை 'மெயில்' வண்டிக்கு ஒப்பிடலாம். தனனிடத்தில் உலகத்தை எல்லாம் காண்கிறவன் சந்யாசி. இவ்வெளி யுலகத்தில் தன்னுடைய (உட்பார்வையாகிய சக்தியை மறந்து) வெளிப் பார்வையால் பார்க்கிறவர்களை 'லோகல் ட்ரெயினு'க்கு ஒப்பிடலாம். முதலில் 'ரெயில்' வண்டிக்குள் ஏறி உட்கார்வதில் தான் கஷ்டம். உட்கார்ந்தபின் கஷ்டமில்லை. பிறகு சாமான்கள் விசாரமில்லை. ரெயிலில் உட்கார்ந்துக் கொண்டு யாதொரு சாமானையும் வாங்கும்போது ஞாபகம் 'ரெயிலி'ன்மேல் இருந்தே இருக்கும். அதே ப்ரகாரம் உள்பார்வையின்மேல் ஞாபகம் முதலாவதாகும். பிறகு இரண்டாவது சப்தம். எந்த வேலையைச் செய்யும்போது மனது தலையில் (மூளையில்) இடவேண்டும். பார்ப்பது கேட்பது, பேசுவது, வேலைகள் அல்ல. மூக்கினில் ஸ்வாஸத்தை விடுவதுதான் வேலை. சுபகர்மம் (நல்ல வேலை) என்பது கீழுக்கு இழுத்துக்கொண்டு போகும் தன்மை உடையது.

218. மௌனம் என்பது மனதிற்கே யன்றி நாக்கிற்கல்ல. புத்தியையும் ஞானத்தையும் ஓரிடத்தில் இட்டு அப்போது செய்யும் வேலை வேலை அல்ல. மௌனம் என்

பது மனதிற்கு உள்ள தன்னிலே. நாக்கிற்கல்ல. மௌனத்தினுல் சாதனம் செய்யலாம். ஞானத்தையும் புத்தியையும் ஒன்ருக வைத்தால் (அவனே) யோகி, புத்திக்குள் மனது; மனதின்மேல் புத்தி வைத்திருந்தாலும் (அவன்) யோகி. மௌன ஆஸ்ரமம் என்ருல் சுழிமுனே நாடி. இடையும் பிங்கலேயும் கூடியிருப்பது சுழிமுனே. நாடிகளில் முக்யமானவை மூன்று; இடை, பிங்கல், சுழிமுனே. இவை ஸ்ரேஷ்டமானவை. சுழிமுனே என்பது குண்டலினி சக்தி இருக்கும் இடம்.

219. தத்துவங்களிலெல்லாம் மூலகாரணமான தத்துவம்ப்ரம்ம தத்துவம். ப்ரம்ம தத்துவம் என்ருல் ஜீவன் முக்தி. ஒரு நதியை ஆரம்பமான இடத்தில் பார்க்க வேண்டும். அது சமுத்திரத்தில் கலந்த பின் அல்ல. ஒரு மரத்தின் தாய் வேரை முதலில் பார்க்க வேண்டும். எல்லா மரங்களுக்கும் தாய் வேர் ஒன்றே. அப்படியே எல்லாருக்கும் கடவுள் ஒருவரே. எல்லா பதார்த்தங்களேயும் ஒன்றென்று சமதிருஷ்டியால் கண்டு அறிந்தபின், இவ்வறிவின் காட்சியே முக்தி.

220. ஒரு பெரிய நாடகத்தை முதலில் திரைக்குள் அபிநயம் செய்து பார்த்து, மற்ற ஜனங்களுக்கு ஆடிக் காட்டுவது (வழக்கம்). அப்படியே யோக வித்தையை முதலில் ரஹசியமாக சாதனே செய்து கடைசியில் பழக்கம் அதிகம் ஆனுல், அதுதானுகவே வெளிக்குத் தோன்றி விடும். ஒரு வித்தையைக் கற்கத் துவக்கும்போது, எடுத்த எடுப்பிலேயே அனுபவம் ஆவதில்லே. செய்யச் செய்யத்தான் அனுபவம் அதிகமாகும்.

221. சமையலான சாப்பாட்டின் வாசனேயினுல் ஒருவன் வயிற்றுப்பசி அடங்குவதில்லே. தான் சாப்பிட-

வேண்டும். அவ்வண்ணம் ஸ்வானுபவம் ஆனுல்தான் சித்தி. ஸ்வானுபவத்திற்குத் தடை செய்பவர் யாருமில்லே; கையிலிருக்கிற சர்க்கரையை வாயிலிட்டுப் பார்த்தால் தான் தித்திப்பு தெரியும். இதுதான் அனுபவம். புஸ்தக ஞானத்திற்கு மற்றவர்கள் தர்க்கிக்க இடமுண்டு. மஸ்தக ஞானத்துக்குப் பிரதி வாதியில்லே. ஜனங்களுக்கு அரசன் கட்டளேயிட்டால் எப்படியோ, அப்படி தன் அனுபவமானது முதன்மையாக நிற்கும். புஸ்தக ஞானம் ஜனங்களுடைய சாதரண வார்த்தைகளேப் போலும். தன் அனுபவம் அரசன் கட்டளேயைப்போலும். ஜீவன் முக்தி சுயராஜ்யம் என்ருல் யோகானுபவத்தினுல் அரசு செய்வதை யொக்கும். யோகானுபவத்தினுல் அரசு செய்வதென்பது ஜீவன் முக்தி. ஆத்மா இருக்கும் குகையில் நிலேப்பதே புருஷார்த்தம். 'குகை' என்பது சரீரத்திலுள்ள புத்தி. ஆத்மாவின் இருப்பிடமாகிய அதுவே (பரிசுத்தமானதும் தெய்வீகமானதுமான) மூன்ருவது கண்ணின் ஸ்தானம். ஹ்ருதயாகாசம் என்பது குகை. உள்பார்வையாகிய விவேகத்தில் ஸ்த்ரீ, புருஷன் ஆய் விடுகிருள். புருஷனும் ஸ்த்ரீயாக மாறிவிடுகிருள். வெளி க்ருத்தியங்களுக்கு மட்டும் இந்த பேதம் காணப் படுகிறது. உள்ளுக்கு ஆராயும் விவேகம் (உணர்ச்சி) ஒன்றேதான். சரீர அவயவங்களிலும் செய்தொழில் களிலும் மாத்திரம் பேதம் காணப்படுகிறது. சூக்ஷ்மமான ஸ்திர விவேகம் இல்லாமற்போனுல் புருஷன் ஸ்த்ரீயாகி விடுகிருன், புத்தியும் ஞானமும் ஒரே கடையில் நிலேத்துப் போனுல் ஸ்த்ரீயும் புருஷனுகி விடுகிருள். ஒரு "பம்பி"ல் வருகிற ஜலம் ஸ்த்ரீகள் தொட்டாலும் புருஷர்கள் தொட்டாலும் நீர் வந்துகொண்டே இருக்கிறது. பக்தியும் நீரைப்போல் ஸ்த்ரீ புருஷ பேதமில்லாமல் பாய்கிறது. ஸ்த்ரீ புருஷர் என்ருல் அவஸ்தைகள் மாத்திரம்

உண்டு. (ஜீவனுடைய நிலை-பேதம்) ஞானிகளுக்கு இந்த பேதமில்லை. ஸ்த்ரீகளிலும் புருஷர்களிலும் சிவ சக்தி (தீவிர சூக்ஷ்ம விவேக ஞானம்) ஒன்றே.

222. உலக விஷயங்களில் ஆசை (இச்சை) சுத்த மாய் விட்டுப்போனவர்களுக்கு எவ்வித பயமும் இல்லை. விஷயப்பற்று இல்லாதவர்களுக்கு எப்பொழுதும் எப்படி யும் சுகமே. உள்ளுக்குள் ஆராய்ந்து அறியும் விவேகம் யார் அதிகமாய்ப் பெற்றிருக்கிறார்களோ அவர்களே பெரி யார். வீடுகள் பணம் முதலியவை அதிகமாய் வைத்துக் கொண்டிருக்கிறவர் பெரியார் அல்லர். ஸ்வல்ப பணக் குவியல்களைப் (தனமும்) படைத்தவரும் பெரியார் அல்லர். ஒரு புலையனுயினும் சூக்ஷ்ம விவேகம் பெரியதா யிருப்பின் அவனே பெரியவன். சூக்ஷ்ம விவேகம் அதிக மாய் உடையவன் ப்ராம்மணன். பெரிய வீடு, அதிக சம்பத்து, வஜ்ஜிர வைடூரியக் கற்கள், நல்ல தங்க மாலை கள், காதில் வயிரக் கடுக்கன், கையில் மோதிரம் இருந் தாலும் பெரியவனுவதில்லை. சூக்ஷ்ம விஞ்ஞான விவேகம் உடையவனே பெரியவன். வெளியே தோன்றுகிற உருவத்திலும் ஆடை ஆபரணங்களிலும் அதிகம் உடைய வன் பெரியவனல்ல. எவ்வளவு தங்கம்தான் அதிக மிருந்தாலும் அதனுல் பெருமையுடையவனுவதில்லை.

223. ப்ரம்ம வித்தையே அதிஸ்ரேஷ்டமான வித்தை, (அதுவே) எல்லாவற்றிலும் மேன்மையைக் கொடுக்கும். இந்த மர்மத்தை அறியாமல் செய்தால், செய்த வினையின் பந்தம் நம்மைவிட்டு நீங்காது.

224. பிச்சைக்காரப் பயலே! மனதின் ப்ரமையை யோகம் செய்து செய்து எழுப்பிய அக்னியில் சுட்டுத்தள். ப்ரம்மத்தை அறியாதவன் நிஜஸ்திதியை (உண்மையான நிலையை) அறிவதில்லை. உண்மையான ஆனந்தமும்

அவனுக்கு இருக்காது. (சரீராதி) அபிமானங்கள் விட்டுப் போவதில்லை. ஆனந்தக் கற்றையை இறுக்கிப் பிடி. ஆசா பாசங்களை மனதினுள்ளேயே கட்டிவை. ஆசை பயனை அளிக்காது. உள்ளுக்குள்ளேயே தோன்று கிற ஆசைகளை அறுத்துத் தள்ளிவிடு.

225. ஜீவாபிமானியே, உன்னிடம் (அறிவாய்) விளங் கும் சிவசக்தியை (சுவாச இயக்கத்தினால்) உள்ளுக்குள்ளே (ஜ்ஞப்தியை) நடத்தி ப்ரம்மரந்திரத்தில் தாக்கச்செய்து, ஒன்றுபடுத்தி, தானதுவாகித் தன்மயமாகி நின்ற நிலையே அகண்ட முக்தி. அகண்ட (இடைவிடாத) முக்தியில் தான் ப்ரம்மானந்தம். இடைவிடாமல் சிவசக்தியி (ப்ரம்மத்தி)லேயே நிலைத்திரு. முதலில் இருந்து வந்தது சிவம். முதலில் சிவசக்தி ஒன்று மாத்திரம் இருந்து வந்தது. அவ்விடையறாத ஆனந்தமே யாவரையும் ரக்ஷிக் கிறது. நிராசையே நிலையான சதானந்தம். கொஞ்சங் கூட ஆசையில்லாதவனே-நிர்க்குணனே-(சற்குணன்). உனக்குள் நீ ராஜன். நீ (அப்போதுதான்) முக்தியைப் பெற்ற அரசன். உன்னுள்ளேயே நீ பார். உன் நிஜ ரூபம் என்பது மனுஷ்ய ரூபம்; மனுஷ்யன் எல்லா வற்றிலும் ஸ்ரேஷ்டன். மனுஷ்யனுக்கு மேல், ஜகத் தினில் யாரும் இல்லை. தேசங்களை யுண்டாக்கினவன் மனுஷ்யனே.

226. உண்மையாக நிஜ ப்ரம்மானந்தம் அனுபவித்த வனே ப்ராம்மணன். (உன்னைப் பாதிக்கின்ற) மாயை ஸ்திரமானதல்ல. அடா! ஹரியே! (மாயையினால் பாதிக்கப்படுகிறவனை 'ஹரி' என்கிறார்) சரீரபிமான (உடம்பு நான் என்கிற அபிமான)த்தைச் சுடு. மனதை (அடக்கி) இல்லாமல் செய்தவர்களுக்கு மாயை இல்லை. மாயை என்பது அஞ்ஞானம். ஹரி (மாயை) யஜ

மானல்ல. சிவன் யஜமானன். உலகில், பாலில் வெண்ணெய் உண்டென்று யாவரும் அறிவார்கள். பாலைக் காய்ச்சி வெண்ணெயை எடுக்கவேண்டும். அப்படி எடுக்கிறவர்கள் மிகக்குறைவு. பால் என்பது பக்தி. 'நெருப்பில் வைத்துக் காய்ச்சி' என்பது உட்பார்வையைக் கொண்டு ஆராய்ந்துணர்தலே. காய்ச்சுவதற்குப் பாத்திரம் புத்தி. விசாரம், உட்பார்வை; விசாராக்னி, யோகாக்னி; இந்த விவேகம் (விசாரம்) நுட்பமாய் ஆராய்ந்து அறியும் விவேகம். இதனால் (இந்த விவேகாக்னியால்) காம, க்ரோத, லோப, மோஹ, மத, மத்ஸராதிகள் கலந்த தயிரைச் சிலுப்பிச் சிலுப்பி, வெண்ணெயை (ஆத்மாவை) எடுத்துவிடுவது.

227. எண்ணெயில்லாவிட்டால் விளக்கு எரியாது. ஸ்வாஸம் இல்லாவிட்டால் சரீர யாத்திரை நடவாது. 'சுக்கான்' இல்லாவிட்டால் ஒரு தோணியை உத்தேசித்த பக்கம் நடத்துதல் முடியாது. ஒரு "ஸ்டீமர்" நீராவிச் சக்தியாலும், கப்பல் அதிகாரியின் யுக்தியாலும் நடத்தப்படுகிறது. தோணி 'ஸ்டீமரை'ப் போல் போகாது. அதைப்போல், ஒரு சன்னியாசியின் வேகம், 'ஸ்டீமரை'ப் போல் உள்ளது. இப்பிரபஞ்சமே தன்னிடம் கண்டுவைத்தவர், 'ஸ்டீமரை'ப்போல். உலகத்திலுள்ளவர் (சாமான்யமானவர்) தோணியைப்போல். 'ஸ்டீமரு'க்கு மேலிருக்கிறது விளக்கு. அப்படி, ப்ரம்மரந்த்ரம் சிரஸில் உள்ளது சன்னியாசிக்கு. சன்னியாசியின் மனது ஹ்ருதயாகாசத்தில் (மூளையில் ஏற்பட்டிருக்கிற நிலையில்) நின்று ஒன்றுபட்டிருக்கிறது. சன்னியாசி, தீபமே ஆய்விடுகிறான். குதிரை ஓடுவதைப்போல் மாடு ஓடுவதற்கு முடியாது. அப்படி தன்னில் லயித்திருக்கிற மனதுள்ளவன் குதிரைக்கு ஒப்பு. உலகத்தில் (விஷயங்களில்) லயித்திருக்கிற மனதுள்ளவன் மாட்டுக்கு ஒப்பு. ஒரே

காலத்தில் எல்லோரும் அரசராகிவிடல் முடியாது. எல்லாரும் வியாபாரம் செய்துவிடலும் முடியாது. வாங்குபவர்களும் அப்படி ஏககாலத்தில் கிடைக்க வேண்டுமே.

228. இருட்டில் நடக்கும்போது மிரளுதல் உண்டு. வெளிச்சத்தில் அப்படி இல்லை. இருள் என்பது அஞ்ஞானம். ஞானம் என்பது தீபம். குரு என்பது தீபம். தீபமே குரு.

229. நல்ல நித்திரையில் எதுவும் தெரிகிறதில்லை. 10 மைல் தூரம் நடந்து வந்து நல்ல நித்திரை போனால் 'இவ்வுலகத்திலிருக்கிருய்' என்பதையே மறந்து விடுகிருய். (எப்படி இது உன் அனுபவத்தினுல் அறிகிருயோ) அப்படி உன் வயிற்றில் பசியாகிறபோது நீயே சாப்பிட்டு அப்பசியைத் தீர்க்கவேண்டும். (சமாதி நிலையை நீயே ஸ்வானுபவத்தில் சாதித்தறிய வேண்டியது).

230. நீர் ஓடும்போது, ஓட்டத்துக்கு வழி கொடுத்திருப்பதுபோல் தன்னுடைய ஊர்த்வ ஸ்வாஸத்துக்கு (மேல் ஸ்வாஸத்துக்கு) வழி சரியாக்கி வைக்கவேண்டும். ஒரு கல்லை மேலுக்குக் கொண்டுபோக வேண்டுமானுல், மிக ப்ரயத்தனப்பட்டு எடுத்துப் போகவேண்டும். கீழுக்கு அது வரவேண்டுமானுல், தள்ளினுல் சடுதியில் சுலபமாய் வருகிறது. அப்படித்தான் யோக தாரணையும். ஜன்மம் எடுப்பது சுலபம். இவ்வுடலை விட்டுப் பிரிந்து போவது கஷ்டம். ஒரு நதியின் மூலஸ்தானத்தைக் கண்டு பிடிக்க வேண்டும். அது சமுத்திரத்தில் விழுவதற்கு முன் காண வேண்டும். சமுத்திரத்தில் சங்கமமானபின் (கலந்தபின்) கண்டால் பிரயோஜனமில்லை. ஒரு மரத்துக்குத் தாய் வேர் தான் ஸ்ரேஷ்டம். மற்ற வேர்களின் பயன் வேறு.

நாம் ஒரு நாற்காலியை மேலே தூக்கினுல் நம்முடைய ஸ்வாஸம் மேலே போகிறது. அதுதான் ப்ராணன் நிற்கும் நிலை. நாம் சமையல் செய்யும்போது நெருப்புச்சுடரும் அதன் புகையும் மேலே கிளம்புகிறது. விளக்கு எரிகிற 'சிம்னியில்' காற்ருேட்டமும் புகைப்போக்கும் மேலுக்கு. அப்படி ஹ்ருதயாகாசத்தில் வாயுவின் சலனம் மேலுக்கு. வாயுவின் சலனத்தினுல்தான் சந்தோஷம் உண்டாகிறது. இந்த வாயு சலனமில்லாவிடில் இரத்த ஓட்டம் இல்லை. நீர் போக்குக்கு அணைக்கட்டு இட்டால் நீர் போக்கும் தடைப்படும். அம்மாதிரி இரத்தப் போக்குத் தடைகள்– வாத-பித்த-கபம் என்கிற மூன்றும்.

231. தலைக்குள் தான், கஸ்தூரி, சந்தணத்தூள், பச்சைக் கர்ப்பூரம், கர்ப்பூரம் இவைகளின் வாசனைகள் அறியப்படுகின்றன. சர்க்கரை இருந்தால் எறும்பு வரும். ஓங்கார சப்தம் அனுபவிக்கப்படுமிடத்தில் அஞ்ஞானமில்லை. உள் கண்ணினுல் (உள்ளே) பார்க்கப்படுவதே ஹ்ருதயம். (மாம்ஸக் கண்ணினுல் பார்க்கப்படுவதும்) உள் கண்ணினுல் பார்க்கப்படாததும் ஹ்ருதயமல்ல. உடம்பில் ஸ்ரேஷ்டமான பாகம் தலை. ஸ்வாஸமந்திரம் (மூச்சுக்கு உடைய வீடு) நிஜானந்தத்தில்தான். நிஜானந்தம் (ஹ்ருதயாகாச) குஹையில் உள்ளது. (ஹ்ருதயாகாசம் எனப்படுகிறது சிரஸில் ஓர் ப்ரதேசம்.) மூச்சிருக்கும் நிலையில் (சிதாகாசத்தில்) குண்டலினி சக்தி இருக்கிறது. இதுதான் சிவத்தின் வீடு. இது புருஷார்த்தம் (சாந்தி) அளிக்கும் வீடு. சுகுணங்கள் நிலைக்கும் வீடு. குணங்களுக்கு (சத்வ குணத்திற்கு) வீடு. இது மானுபிமானம் விட்ட இடம். எல்லாவற்றையும் வர்ஜிஜித்தவன் இருக்குமிடம். சூக்ஷ்ம விசாரம் என்கிற உட்பார்வை நடத்தும் வீடு. குண்டலினீ சக்தி

எப்போதும் வசிக்குமிடம். ஹ்ருதயத்தில் (ஹ்ருதயா காசத்தில், மூளையில் ஓர் ப்ரதேசத்தில்) உள்ளது நிவாஸம்.

232. எவன் ஸ்வாஸப் போக்குவரவின் மேல் தன் குறியை வைக்கவில்லையோ அவனுக்கு யோகத்தில் எவ்வித சம்பந்தமும், புத்தியும், செய்த காரியமும் (அனுபவமும்) இல்லை. ஆகையினால் ஸ்வாஸத்தின்மேல் குறிப்பிடு. உள் பார்வையைக் கொண்டு பார். உள்ளே போகும் ஸ்வாஸத்தின் மேலும், வெளியில்வரும் ஸ்வாஸத்தின் மேலும், குறிப்பிடு. க்ரமமாக ஸ்வாஸத்தை இழு; விடு. உள்ளுக்கு இழுக்கும்போது உண்டாகும் சப்தத்தைக் குறிப்பிடு. அதிகமாய் இழுக்க இழுக்க அச்சப்தத்தையே உற்றுக்கேட்டு குறிப்புவை. உள்ளே ஆகிற சப்தத்தின் பேரில் மதிப்பும் நம்பிக்கையும் வைத்து இழு. உள்ளுக்கு இழு. இழுக்கிற சப்தத்தை உற்றுக்கேட்டுக் குறிப்பு விடாமல் இழு. ஞாபகம் அதின்பேரிலேயே வைத்து (இழு); வேறெதையும் நினைக்கவேண்டாம். தின்பது, குடிப்பது, வந்தது, நின்றது, உண்பது முதலிய எதையும் நினைக்காமல் இழு. அகண்டமான (பரமாத்மா) வஸ்து வால் (கிடைப்பது) சத்கதியே. செய்வது செய். (வேறு எதுவும் சத்கதியை அளிக்காது). மற்றவர்கள் செய்த அன்னம் வேண்டாம். நீயே செய்ததைச் சாப்பிடு. எது செய்தபோதிலும் ஸ்ரத்தையுடன் செய். மனமே நீ செய்வதை ஸ்ரத்தையுடன் செய்.

233. இலைகளில்லாத மரத்தைச் சுற்றிச் சுற்றிக் காற்றடித்தபோதிலும் அதற்கொன்றுமில்லை. செத்த பிணத்திலும் காற்றில்லை. (ப்ராணன் இல்லை); சப்தமும் இல்லை. உலகில் காற்றில்லாமல் ஒரு ப்ராணியும் ஜீவித் திருக்காது.

234. ப்ராண வாயு (என்னும் நீராவி) இல்லாமல் சரிரம் என்கிற 'என்ஜின்' நடக்காது. தென்னை மரத்தில் கொய்யாப் பழம் காய்க்காது. அவ்வாறு, ஸ்வானுபவம் இல்லாதான் வார்த்தை உபயோகமற்றது. நீதிபதியும், "மாஜிஸ்ட்ரேட்"டும், வாதி, பிரதிவாதிகள் சொல்வதைக் கேட்டு 'கேஸ்' ஏற்படுத்திக் கொள்ளுகிறார்கள். நிஜம் இதுவென்றறியார்கள். கையில் சர்க்கரை வைத்துக் கொண்டால் ப்ரயோஜனம் இல்லை. வாயிலிட்டு ருசி பார்த்தால்தான் தித்திப்புத் தெரியும். பூமிக்கு அடியில் நீர் இருந்தாலும் அந்த நீர் கிணறு தோண்டினால்தான் கிடைக்கும். முக்யமானது-உள்ளில் சாதனை செய்து ப்ரம்ம ரந்திரத்தில் ப்ராணனைச் சேர்ப்பித்து ஒன்றுபடச் செய்து-(சிரஸில் மூளை மத்யத்தில் நிலைத்து பரப்ரம்ம தரிசனம்) நேருக்கு நேராகத்தானே பார்த்து நிற்பது முக்யமானது. இதுதான் ஒருவன் யோகத்தினால் அடைய வேண்டிய புருஷார்த்தம். இதுதான் அழியாத சாந்தியைத் தரும்.

235. ப்ரம்ம வித்தையைக் கற்கிறவனுக்கு இன்னது தான் ஆஹாரம் என்று நியமம் இல்லை. சாந்தி என்பதே ஆஹாரம். ப்ரம்ம வித்தையே ஸ்ரேஷ்டமான வித்தை இதை க்ரயத்திற்கு வாங்கிக்கொள்ள முடியாது. வெளிக் கீர்த்தியினாலும் கிடைப்பதல்ல. மானுபிமானத்தினால் கிடைப்பதுமல்ல. ஒரே பக்தியினால்தான் கிடைப்பது. பக்தி இல்லாவிட்டால் முக்தி இல்லை. மனிதன் சூக்ஷ்ம பக்தியினால் பந்தத்திலிருந்து விடுபடுகிறான். ப்ரம்மானந்தம் என்பது ஸ்வானுபவத்தினால் அனுபவித்ததேயாம். (வெறும் வார்த்தைகளினால் கிடைத்ததல்ல). இதுதான் சச்சிதானந்தம். (இது) இடைவிடாத சாதனையினால் சம்

பாதிக்கப்படுகிறது. இதைச்சாதித்துப் பெற்றவனுக்கு எல்லாம் ப்ரம்மானந்தமே.

236. ஓ மனதே! பேத புத்தியை விடு. சூக்ஷ்ம புத்தியைப் பிடி. பேத புத்தியை விடுத்து (பற்பலவாக இருக்கிறதென்ற நினைப்பைவிட்டு) தோன்றுகிற எல்லா வஸ்துக்களையும் மாசற்ற சிவமயம் என்று நினை. போலி என்பதில்லை. வேஷங்களில்லை. உள்ளும் புறம்புர் ஒன்றாக நினை. (எல்லாமும் உனக்குள் இருப்பதாய் வை). ஸ்வாஸ பந்தனம் செய். ஓ மனமே! ஸ்வாஸத்தை உன்வசமாக்கிக் கட்டுப்படுத்து. இந்த நம்பிக்கை சாஸ்வதமானது. உள்ளுக்குள்ளேயே நோக்கத்தைத் திருப்பு. உள்ளுக்குள்ளேயே விவகாரம் செய். சூக்ஷ்ம புத்தியினால் உண்மையைக் கண்டு செய். அது கெடாதது. சூக்ஷ்ம புத்தியுடன் எது கூடியிருக்கிறதோ, அது நித்யமானது. ஒவ்வொரு ஜீவனுக்குள்ளும் இருக்கிற நிச்சய ஸ்வரூபம் நித்யானந்தம்தான். அந்த நித்யானந்தத்தை நீ சம்பாதித்துக்கொள். நித்யானந்த பதவியென்பது நித்யமான முக்தி. (முக்தி-பந்தத்திலிருந்துவிடுபடுதல்) மனதுக்கு ஆசனம் (இருக்க ஆதாரம்) சிங்காதனம். அல்லது அரசர்கள் உட்கார்ந்து மகிழும் ஆஸனம். நித்யசானங்களும் (நித்ய ஆதாரம்) இதுவே. இதுவே பரமானந்தம். சத்தும் சித்தும்கூடிய ஆஸனம் (நிலை) பரமானந்த ஆஸனம் (பரமானந்த நிலை). சத்தும் சித்தும் கூடிய ஆஸனம் சைதன்னியாஸனம். (ஆசனம் -ஆதாரம்).

237. சிருஷ்டி எல்லாம் மனோபாவனை. யுக்தி எல்லாம் சரீர பாவனை. சக்தி என்பது ஆத்ம பாவனை. பெரும் கோயில் கோபுரம் தலைக்குள் உள்ளது. இதில் (ஆத்மாவுக்கு) விசாலமான இருப்பிடம். ஹ்ருதயாகாசம் என்

கிற ஞானகாசத்திற்கு இடம். இது ஆதாரங்களுக்குள் ஸ்ரேஷ்டமானது. ஆக்ஞை என்பது (சரீரத்தில் ஆருவது கமலம்) குண்டலினி சக்திக்கு பெரிய ஆதாரம். குண்டலினீ சக்திகது ஆதாரம் ஹ்ருதயாகாசம், "ரெயிலில்" உட்கார்ந்து போவது ஆத்ம பாவனை. (ஆத்மாவின்மேல் வைத்த குறி). "மெயில்" வண்டி ஹடயோகி. 'லோகல்' வண்டி ராஜயோகி. சாந்தியை அடைதல்தான் முக்தி சுகம். காலதாமத பேதமே இதில் வித்யாஸம். வேகய் இரண்டிலும் ஒன்று. ஆயினும் காலம் மாத்திரம் வித்யாசம். இந்த வித்யாசமும் மனதின் ப்ரமை.

238. ஒரு மனிதன் தாய் தந்தை கர்ப்பத்தில் புத்ரனுகி ஜனித்தவன். தாய் தந்தையார் கர்ப்ப சிருஷ்டி செய்யும் காலத்தில் அவர்களுக்கிருந்த எண்ணங்கள் சமய பேதங்கள் இவையெல்லாம் சேருகின்றன. விதையை விதைக்கும்போது (கர்ப்பதாரணம் செய்யும்போது) தாய் தந்தையர்க்கு எந்த ஆலோசனைகள் இருந்தனவோ, அதாவது பக்தி, கெடுதி, க்ரோதம். கர்மம், ஆசை முதலியவை,- அதே மாதிரி குணங்களுடன் குழந்தைகளும் அவர்களுக்குப் பிறக்கின்றன. அதாவது, முதலில் (கர்ப்பத்தில்) வாய்வினுடைய சேர்க்கையால் சிருஷ்டிக்கப்படும். அப்போது இந்த லோகத்தினுடைய இச்சையாவது, பரலோகத்தின் இச்சையாவது தாய் தந்தையர்க்கு இருந்தால் அதே ப்ரகாரம் குழந்தைகளுக்கும் ஆலோசனைகள் உண்டாகின்றன. அப்படி நல்ல இச்சைகள் இருந்தால் உடனுக்குடனே, குழந்தைகளுக்கும் தோன்றுகின்றன. அவை அபிவிருத்தி செய்யப்படலாம். அதன்மேல் முதன்மையாக வருவது ஜன்மாந்திர வைராக்யம். இரண்டாவது பீஜாந்தர வைராக்யம். விதை விதைக்கும் சமயத்தில் (கர்ப்பதாரண சமயத்தில்) ஏற்பட்டது பீஜாந்தர

வைராக்கியம். கஷ்டம் ஏற்பட்ட பின்பு மனது என்கிற சாணைக்கல்லில் புத்தியை உறைத்து அந்த ப்ரகாசத்தினால் உண்மையை பபர்க்கவேண்டும். (ஜனன மரண சம்பந்தமாகிய வித்து வைராக்யத்தினால் அறுபட்டுப்போம்). அபான வாயுவென்பது ஜீவசிருஷ்டியை நசிக்கச்செய்யும். அபான வாயுவும் ப்ராண வாயுவும் உள்ளே (ஆத்மாவில்) லயிக்கும். அவ்விரண்டும் கூடியபின் எந்த ஸ்திதியும் (அவஸ்தைகளும்) இல்லை. ப்ராண வாயு போவதற்கு முந்தியே ஜீவன் முக்தியை சந்தித்துக் கொள்ளவேண்டும் (அடைய வேண்டும்). தானே விட்டபின் அது அகண்டத்தில் இரண்டறக் கலந்து அகண்டமாய் விடுகிறது.

239. "உபநயனம்:-" - ஓர் மனிதன் அடையவேண்டிய முக்யமான புருஷார்த்தம் ஒன்று. "உப" என்றால் சமீபத்தில் வாசம். ஜீவாத்மா பரமாத்மாவில் சேருவது ஐக்யம். உபநயனம் என்பது உள்ளே ஐக்யமாயிருப்பது. உபநயனம் என்பது சூக்ஷ்ம ஐக்கியம். "உபாதி" என்பது மூன்றும் கண். கடவுளுக்குச் சமீபத்தில் வாஸம் செய்யும் நிலை ஓர் மனிதன் அடையவேண்டிய முக்யமான தொன்று. உபநயனம் என்கிற சமீபவாஸம், சரீரபாவனை அல்ல; ஆத்ம பாவனை. இந்த உலகில் எவன் "உபாதி" என்கிற மூன்றுங் கண்ணைக்கொண்டு (எதையும் அறிந்து) செய்வானோ அவன் ப்ராம்மணன். உபாதி என்பது சுஷும்னா நாடி (ப்ரம்ம நாடி). தேவர்களும் தேவதைகளும் கூடிவசிக்கிற நாடி. ப்ரம்ம நாடி.



# ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகள்.



இருக்கிறே னிங்கென் றிதயத்தா னுன்னை
அழைக்கிரு னுங்கே யடை.

[யோகசித்தி]

# உள்ளத்துண்மை உணர்ந்தால் முக்தி.

## ஸ்ரீ நித்யானந்த சுவாமிகள்.

"நிலையற்ற வாழ்வுக் கூத்தின் பின்னேயிருந்து அதையியக்கும் ஒரு பொருள் உள்ளது. ஆட்டக்காரன் இல்லாது போனால் பாவை ஆடுமா? பற்றற்ற சாட்சியாயிருந்து, தனது சக்தியால் பரம்பொருள் உலகை இயக்கி, நாடோறும் ஆன்மாவைப் பக்குவப்படுத்தித் தன்பால் இழுக்கிறது. அப்பரம்பொருள் ஒவ்வொருவர் உள்ளத்தும் உளது. இறைவனை "உள்ளமே"! என்றனர் ஆன்றோர். 'நான் இந்த உடலல்லன்; உலகல்லன்; நான் யார்? இவ்வுடல் வீழினும் நான் வாழுகிறேன். நான் இவ்வுடலின் இன்ப துன்பக் கவலைகளற்ற "சுத்தான்மா" என்று நன்கு நான் விசாரம் செய்து, (ஓர்ந்து), உள்ளத்தில் உள்ள அந்த ஆன்மவடிவைத் தியானிக்க வேண்டும். தலையாக, புலன்களையும், மனத்தையும் வேறுவழிச் செல்லவிடாது, தாரணை செய்து, ஒருமனப்பட்டு, உள்ளப் பொருளான ஆத்மாவையே தியானித்தல் வேண்டும். எனில், அவனுக்குப் பிறவித் துன்பின் பிணைப்பே வேண்டா. அவன் ஜீவன் முக்தி பெறுவான்."

"ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு"

[யோகசித்தி]



# இரண்டாவது பாகம்

---

240. சப்தம் (ஒலி) ஆகாசத்தில் உண்டாயிற்று. ஆகாசத்தில் வெட்ட வெளியில் உண்டானது ஜீவசக்தி. ஆகாசம் என்பது ஸிரஸில் உள்ளது. ஆகாசம் என்பது ஹ்ருதயாகாசம். ஜீவ சக்தி என்பது ஒன்றே. ஒரு நதிக்கும் சமுத்ரத்துக்கும் வித்யாஸம் எப்படி இருக்கிறதோ அப்படி ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் - அப்படி வித்தியாஸம். (இந்த வித்யாஸம் மொத்த பாகத்திலேயே தவிர ரகத்தில் அல்ல). இடையில் அண்டம் என்னுமோர் பதம்தான் இருக்கிறது. 'தான்' 'தனது' எனும் அஹம்பாவங்களைத் தன் மூளையில் வைத்துக் கொள்ளக்கூடாது. இது மற்றொரு ஜன்மத்துக்குக் காரணம். 'தான்' 'தனது' என்று நினைத்துக் கொண்டு இருக்கிறவன் அல்ப புத்தியுள்ளவன். கீழ்ப்பட்ட ஜன்மம் எடுப்பதற்குக் காரணம் ஆகிறது. சூர்யனுக்குள்ள பிரகாசம் 'லைட்டுக்கு' உண்டாகிறதா? ராத்திரி பகல் என்கிற வித்யாஸம் இல்லாதவர்களுக்கு 'லைட்' பெரியதோ சூர்யன் பெரியதோ என்கிற சந்தேஹம் இல்லை.

அவரவருடைய நம்பிக்கையே பெரியது. நம்பிக்கைக்குமேல் வேறே பெரிய தேவதை இல்லை. விஸ்

# உள்ளத்துண்மை உணர்ந்தால் முக்தி.

## ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகள்.

"நிலையற்ற வாழ்வுக் கூத்தின் பின்னேயிருந்து அதையியக்கும் ஒரு பொருள் உள்ளது. ஆட்டக்காரன் இல்லாது போனால் பாவை ஆடுமா? பற்றற்ற சாட்சியாயிருந்து, தனது சக்தியால் பரம்பொருள் உலகை இயக்கி, நாடோறும் ஆன்மாவைப் பக்குவப்படுத்தித் தன்பால் இழுக்கிறது. அப்பரம்பொருள் ஒவ்வொருவர் உள்ளத்தும் உள்ளது. இறைவனை "உள்ளமே" என்றனர் ஆன்றோர். 'நான் இந்த உடலல்லன்; உலகல்லன்; நான் யார்? இவ்வுடல் வீழினும் நான் வாழுகிறேன். நான் இவ்வுடலின் இன்ப துன்பக் கவலையற்ற "சுத்தான்மா"' என்று நன்கு ஞான விசாரம் செய்து, (ஓர்ந்து), உள்ளத்தில் உள்ள அந்த ஆன்மவடிவைத் தியானிக்க வேண்டும். அவ்வாறாக, புலன்களையும், மனத்தையும் வேறுவழிச் செல்லவிடாது தாரணை செய்து, ஒருமனப்பட்டு, உள்ளப் பொருளான ஆத்மாவையே தியானித்தல் வேண்டும். எனில், அவனுக்குப் பிறவித் துயரின் [illegible] வேண்டா. அவன் ஜீவன் முக்தி பெறுவான்."

"ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு"

[யோகசித்தி]



# இரண்டாவது பாகம்

---

240. சப்தம் (ஒலி) ஆகாசத்தில் உண்டாயிற்று. ஆகாசத்தில் வெட்ட வெளியில் உண்டானது ஜீவசக்தி. ஆகாசம் என்பது ஸிரஸில் உள்ளது. ஆகாசம் என்பது ஹ்ருதயாகாசம். ஜீவ சக்தி என்பது ஒன்றே. ஒரு நதிக்கும் சமுத்ரத்துக்கும் வித்யாஸம் எப்படி இருக்கிறதோ அப்படி ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் - அப்படி வித்தியாஸம். (இந்த வித்யாஸம் மொத்த பாகத்திலேயே தவிர ரகத்தில் அல்ல). இடையில் அண்டம் என்னுமோர் பதம்தான் இருக்கிறது. 'தான்' 'தனது' எனும் அஹம்பாவங்களைத் தன் மூளையில் வைத்துக் கொள்ளக்கூடாது. இது மற்றொரு ஜன்மத்துக்குக் காரணம். 'தான்' 'தனது' என்று நினைத்துக் கொண்டு இருக்கிறவன் அல்ப புத்தியுள்ளவன். கீழ்ப்பட்ட ஜன்மம் எடுப்பதற்குக் காரணம் ஆகிறது. சூர்யனுக்குள்ள பிரகாசம் 'லேட்டுக்கு' உண்டாகிறதா? ராத்திரி பகல் என்கிற வித்யாஸம் இல்லாதவர்களுக்கு 'லேட்' பெரியதோ சூர்யன் பெரியதோ என்கிற சந்தேஹம் இல்லை.

அவரவருடைய நம்பிக்கையே பெரியது. நம்பிக்கைக்குமேல் வேறே பெரிய தேவதை இல்லை. விஸ்

வாஸத்தைவிடப் பூலோகத்தில் எதுவும் பெரியதல்ல. விஸ்வாஸமில்லாதவர்கள் யாதொரு குயுக்தி வாதத்திற்கும் உள்ளாவதில்லை. எங்கெந்த விஷயங்களில் சுகப்படுவது (நலமென்று) தான் விஸ்வாஸ (நிச்சய)மிட்டதோ, அதேதான் பெரியது. அந்தர் விஸ்வாஸம் என்பது (உள்நோக்கத்தில் இட்ட நம்பிக்கை)யை ஸ்வாஸ கதியில் வைக்கவேண்டும். விஸ்வாஸம் இல்லாதவர்களுக்கு எதுவும் மனதுக்கு வருவதில்லை. விஸ்வாஸம் இல்லாதவர்களுக்கு சாதுக்களிடத்திலும் சன்னியாசிகளிடத்திலும்கூட நம்பிக்கை இல்லை. ஆயிரக் கணக்கான ஸாதுக்கள் அவர்களிடத்திலேயே இருக்கிறார்கள்-(என்கிற அகங்கார சம்பந்தமான எண்ணம் அவர்களுக்குண்டு).

241. கண்ணில்லாத குருடனுக்கு இரவென்றும் பகலென்றும் வெவ்வேருக இல்லை. வெளியில் உள்ள "லைட்" அவர்களுக்கு அவசியமில்லை. கண்ணில்லாத குருடனுக்கு ஞானேந்திரியம் பலமுள்ளது. கண்ணில்லாதவனுக்கு உடம்பின் உருவம் உபயோக(மற்றது)ப் படுவதில்லை. இந்த மாமிசக் கண்களின் பார்வை இல்லையாகையால் உள் நோக்கத்தின் பார்வை அதிகமாக இருக்கிறது. கண் குருடானவர்கள் ஒரு வண்டியைத் தொட்டுப் பார்த்து, வண்டியின் உருவம் இப்படி யிருக்கிறதென்றும் சொல்வதற்கில்லை.

242. உலகத்திலிருந்து சப்தமானதோ? சப்தத்திலிருந்து உலகமானதோ? காரணத்திலிருந்து காரியமா? காரியத்திலிருந்து காரணமா? சப்தத்திலிருந்து உலகம் உண்டானது. சப்தத்திலிருந்து ரூபம் உண்டாயிற்று. காரணத்தினுல் கார்யம் உண்டாகிறது. காரணம் எதிலிருந்து காரணமும் கார்யமும் தன்னிடத்திலிருந்து உண்டாகிறது. காரண கார்யங்களுக்குத்தானே ஆளாகச்

செய்துக் கொள்ளுதல். தன்னிடத்திலிருந்தே காரண கார்யங்கள் உண்டாயின. அவை தன்னிடத்திலேயே ஐக்யமாகின்றன. தன்னிடத்திலிருந்து வந்த மாயை தன்னிடத்திலேயே லயமாகின்றது. பொய்யைச் சொன்னுல் பொய்யே. பொய்யை நம்பினுல் பொய்யையே சொல்ல வேண்டும். உண்மையை நம்பினுல் உண்மையையே சொல்லு. பொய் சொல்லுகிறவர்களுக்கு ஸத்யமென்பது இல்லை. பொய்யென்பதும் ப்ரத்யேகமாக இல்லை. அவர்களுடன் அது ஐக்யமாக கலந்து கொண்டுதான் இருக்கிறது. பொய் என்பதை என்ன காரணத்தினுல் சொல்லுகிருர்கள்? அவர் மனத்திற்கு அந்தப் பொய்யே அப்யாசமாகி (வழக்கப்பட்டு) பொய் என்பது அவர்களுக்குத் தோன்றுவதில்லை. அவர்களுக்கு பொய் என்பது வேருகக் காணப்படுவதில்லை. கெட்டதை, கெட்டதெனத் தெரிந்தால், அவர்கள் அந்த வேலைக்கு இஷ்டப்படமாட்டார்கள். ஆகவே ஸத்யமென்பது வேருக உண்டென்று, அவர்களுக்கும் தோன்றும். அது முதல் அவர்களுக்கு ஸத்கதி ஆகின்றது. ஸன்மார்க்கத்தில் சேருவார்கள்.

243. எல்லா நதிகளும் சமுத்திரத்திற்குப்போய்ச் சேருவதுபோல், கெட்டதும் நல்லதும் ஆத்மாவினிடத்தில் சேரும். எல்லாம் ஆத்மாவுக்கு அர்ப்பணம் ஆகின்றன. நல்லதும் கெட்டதும் ஆத்மாவிடத்தில் உண்டாயின. வந்ததும் ஆத்மாவிலிருத்து; சேருவதும் ஆத்மாவிலேயே; அது, கெட்டது செய்வதற்கும், நல்லது செய்வதற்கும், மனதே காரணம். மனது ஆத்மாவின் பலத்தில் (ஆடுகிறது). அந்த சக்தியை, அதிகப்படுத்தலாவது, குறைவு படுத்தலாவது, யாராலும் ஆவதில்லை. எது ஆகக்கூடியதோ அதுவே ஆகும். அது ஒரே மாதிரியாக ஆகும்.

244. முதலில் மரத்திலிருந்து விதைகளாயின என்று அல்ல. விதைகள் தான் முன்பு. மரத்திலிருந்து விதைகள் விழுந்து பூமியில் முளைகளாகி அவையே மரங்களாய் விளைகின்றன. மறுபடியும் மறுபடியும் அம்மரங்களே விதைகளைச் சொரிந்து மரங்களாகின்றன. அப்படியே சிருஷ்டி. விதையில் தான் எல்லாம் முதலில் வைத்தது; அதற்கு முடிவு இல்லை. எங்கே பார்த்தாலும், அந்த விதைகளே இருக்கின்றன.

245. ஸம்சயம் இல்லாதவர்களுக்கு-ஸம்சயம் இல்லாமையே, சித்தம். ஒரு முகப்படுவதற்கு வழியாகும். சந்தேகம் உள்ளவனுக்குப் புத்திமட்டு. அவனுக்கு எங்கே பார்த்தாலும் சந்தேகமே காணப்படும். அவனவனுக்கு இயல்பாய் உள்ள குணமே முன்னால் நிற்கும். அவனவனுக்கு இல்லாத குணம் அவனிடம் காண்பதற்கு ஞாயம் இல்லை. ஆடிக்கொண்டிருக்கிற ஜலத்தில் மனிதன் தன்னுருவைக் காண்பதற்கில்லை. ஆடாமலிருக்கிற ஜலத்தில் தன் உருவம் சரியாக காணப்படுகிறது. ஸ்திரசித்தம் இல்லாதவர்களுக்குத்தம் (துர்க்குணம்) அவகுணம் தெரிந்து கொள்ளுவதற்கில்லை. ஸ்திர சித்தம் உள்ளவர்களுக்கு எங்கே பார்த்தாலும் ஸ்திரமாய்த்தன்மயமாய்க் காணும். மற்றவர்களிடமும் தன்னைப் போலவே மற்றவர்களுமிருக்கக் காண்கிறான். சிவப்பு வர்ணமுள்ள கண்ணாடியை வைத்துக்கொண்டால் எல்லாம் சிவப்பாகவே காணும். பச்சை வர்ணமாகக் காணாது. எவன் எப்படி நினைக்கிறானோ அந்த விசாரமே காண்கிறான்.

246. குடையைப் பிடிப்பதேன்? மழை நம்மேல் விழாமல் தடுக்கவேண்டி. மழை என்பது மாயை. உண்மையென்பது குடை. (ஸ்திர)சித்தம் என்பது (குடையின்)

பிடி. ஒவ்வொன்றிலும் சத்தியம் இருக்கிறது. ஆனல் ஒவ்வொன்றிலும் அந்தச் சத்தியத்தைக் கண்டறிந்து அதனுடன் கூடியிருப்பவர் அரிது. ஆத்மாவிலிருந்து மாயை. மாயை ஆத்மாவல்ல. அப்படியே மந்திரி அரசனுக்குக் கீழே. மந்திரி அரசனுகமாட்டான். அப்படி மனது ஆத்மாவல்ல. மனது ஆத்மாவின் சாயை. மனது ஆத்மாவுக்கு இரண்டுபடி கீழ். மனதுக்கு லயம் அல்லது நாசம் உண்டு. ஆத்மாவுக்கு லயம் அல்லது நாசம் இல்லை. மனது நானுவிதமான ப்ரமைகளுக்கு உள்படுகிறது. எவ்வித குண தோஷங்களும் ஆத்மாவுக்கு இல்லை. எல்லா குணதோஷங்களும் மனதிற்கே உள்ளன. மனது ஆத்மாவுடைய சாயை என்பது. நதியின் நீரைப் போல்தான். ஆத்மா என்பது சமுத்திரத்தின் நீரைப்போல். சமுத்திரத்தின் நீருக்கு அளவும் இல்லை. முடிவும் இல்லை. அப்படியே ஆத்மாவுக்கு. இவ்வளவு என்று சொல்வதற்கில்லை. முடிவும் இல்லை. ஆத்மா எங்கேயிருந்து ஆனது? எதிலிருந்து வந்தது? என்ருல், எவ்விடத்தில் பார்த்தாலும் அதுவேயிருப்பது ஆம். அது அல்லாமல் வேருென்றை காண்பதற்கில்லை. (தான் என்கிற தனக்கு முன்னும் பின்னும் சிருஷ்டிகள் உண்டு. தான் ஆனது முதலும் சிருஷ்டிகள் உண்டு. தனக்கு மாத்திரம் தெரிகிறதில்லை).

247. ஜீவசக்தி வெளியில் சலனமாகும்போது விஷயங்களில், வாசனை (இச்சை)யுண்டாகின்றது. அப்படி பிறந்தது, மனது என்று ஆகி, இரண்டாகப் பிரிந்து, மூன்ருகி, ஆருகி (ஷட்குணங்களாருகி), சிருஷ்டியாகி, விஸ்தாரமாகி, உலகமென்பது ஆயிற்று. அதிலிருந்து மற்ற எல்லா குணங்களும் (நல்லவும் தீயவும்) உண்டாயின. அப்படி உண்டான ஞானேந்த்ரியங்கள். மனுஷ்யனுக்கு முக்யமாய் வேண்டியிருந்து, கர்மேந்திரி

யங்கள் பூமி விஷய(சம்பந்த)மாக வந்தன. ஞானேந்திரியங்கள் ஜட ஆகாச சம்பந்தமாய் வந்தன-என்று சொல்லலாம். அவையே சித்குணமென்று சொல்லப்படுகின்றன. கர்மேந்திரியங்கள் ஸத்குணமென்று சொல்லப்படுகின்றன. விஷயங்களை ஜயிக்கிறவன் மனுஷ்யன். அவன் தன்னாலேயே புருஷார்த்தத்தை அடைகிறான். (விஷயங்களுக்கு இந்திரியங்களை உள்படுத்துகிறவன் அடிமை - புருஷார்த்தத்தை அடையமாட்டான்)

248. தன்னில் சிந்தனை செய். தனக்குள்ளே சிந்தித்துப் பார். மனது நானாவிதமாக தோன்றினும் அது ஒன்றே. மற்ற எல்லாருடைய மனங்களும் ஒன்றே. ஒரு முகமாக்கப்பட்ட மனது நித்யமானதும் ஆன ஒன்றே. யாவர்க்கும் (தனக்கும் மற்றவர்க்கும்) இந்த் மனது ஒன்றே. யாவரிலும், இந்த நித்யமான ஒரு மனதே பரமானந்தமாகக் காணும். இந்த நித்ய (சாஸ்வதமான) மனதே, அதாவது சுத்தமான மனதே அறிவு மயமான சிதாகாஸம் எனப்படுவது. சுத்தாகாஸம். [இதில் சகல இச்சைகளும் கோரிக்கைகளும் இல்லாமல் அற்றுப்போனது]. இந்த சுத்தாகாசத்தில் புருஷார்த்த சித்தி. இந்த சுத்தாகாசமே யோகம். இதிலேயே ஹ்ருதயம் இருக்கிறது. இந்த சுத்தாகாசத்தில் உன் பார்வையை (நோக்கம்) உள்ளுக்குச் செலுத்தி, நடையாடச் செய்தால், புருஷார்த்தி ஸித்தி. இந்த சுத்த ஆகாசத்தால் உள் பார்வையால் நடையாடினால் தான் "நான்" "நீ" எனும் பேதம் விட்டுப்போம். இந்த சுத்தாகாசத்திலேயே ஜீவ வ்யக்தி, பக்தி, சக்தி, ஜீவன் முக்தி, இவைகளுக்கு அனுஸரணையான வழி. சுத்தாகாசமென்பது, புத்திக்குள் இருக்கிறது. அந்த சுத்தாகாசத்தில் ஜீவன் இடைவிடாமல், நிலைத்து வசிக்கும்போது, விஷய வாசனைகள் எரிபட்டுப்

போகின்றன. சுத்தாகாசமென்பது ப்ரம்ம ரந்திரம் இராஜயோகமென்பது கழுத்துக்குமேல். வர்ண ரந்திரம் என்பதும் கழுத்துக்குமேல்.

249. மந்திரம் என்பது ப்ரம்ம ரந்திரம். மந்திரம் என்பது ப்ராணனுடன் (எப்போதும் பிரியாமல்) மந்திரியைப் போல் (தெளிவுபடுத்திக் கொண்டு) இருப்பது. இதுவே ப்ராணனுடைய மந்திரி; என்ருல், ஆத்ம பிந்து (ஆத்மாவின் லக்ஷணமுடையது). இடம் காலம் காரணம் (என்னும் எல்லைகளுக்கு மீறியது). இந்த சாஸ்வதமான மந்திரத்தில், அதன் மத்தியில், சிதாகாசம் இருக்கிறது. சிதாகாசமென்பது ஞான மயமானது (அறிவாக உள்ளது). சிதாகாசமானது பரம சுகத்தைத் தருவது. சிதாகாசம் உத்தமமான ஔஷதம். பரமௌஷதமே பரம குரு. (தத்வமஸி) அதுதான் நீ.

250. மனுஷ்யனெனப் பேர்வந்ததற்குக் காரணம் என்ன? மனனம் செய்வதினுல் மனுஷ்யனுவன். (பரப்ரம்மத்தைச் சேரும்) ஸ்தானம் (-வழி) அறியாமற் போனுல் மறுபடியும் ஜன்மங்களை எடுக்கவேண்டியதாகும். சாந்தியான த்ருப்தி கிடைக்காது. இந்த த்ருப்தியுள்ளவனுயிருந்தால், கர்ம பலத்தில் இச்சையில்லாமல் செய்ய இயலும். கர்மபலத்தில் ஆசை இல்லாமல் கர்மங்களைச் செய்தலே முக்தி-நிஷ்காமம். அதுவே பரம சுகம். ஆசையே நரகத்தில் தள்ளும். நிராசை என்பதே பரகதி. பரகதி என்பது சிவசக்தி. சிவசக்தியை அறிந்து அடைந்தவன் இவ்வுலகனைத்தையும் மேலுலகனைத்தையும் பார்க்கிருன்.

251. இந்திரியங்களால் ஆத்மாவை அறியலாகாது. இந்திரியங்களால் அறியப்படும் எல்லைக்கு எட்டாமல்

ஆத்மா இருக்கிறது. ஆத்மா ஞானத்தினுல் அறியப் படும். தேஹ பாவனையை விட்டு ப்ரத்தியேகமாய் (வேருய்) இருக்கிறது. இந்திரியங்கள் செய்யும் செய்கைகள், அவைகளின் போக்கு சுபாவம் முதலியவை களை அறிந்து, அதற்குத் தக்கபடி நடக்கிறவர்களே யோகிகளெனப்படுவர். அவர்கள் மஹாத்மாக்கள் எனப் படுவர். (ஸத் புருஷர்). அவர்கள் சொல்லும் வாக் யங்கள் வேத வாக்யங்கள். அவர்கள் புளியம் பழத்தில் விதைகளைப்போல் இருப்பவர்கள். பழம் கைக்கு ஒட்டு கின்றன. விதைகள் (ஒட்டாமல்) சுத்தமாய் இருக் கின்றன. சத்புருஷருடைய ஹ்ருதயமும் அப்படியே இருக்கும். அவர்கள் (ஸத்புருஷர்) எப்போதும் இளம் வயதுள்ளவர்களாகத் தென்படுவார். ஞானிகளுக்கு வய தென்பதில்லை.

252. ஒரு விளக்குக்கு எண்ணெய் விட்டுத் திரியை எரிய வைத்தால், விளக்கு எரிந்து, எண்ணெய் குறைந்து போனுல், வத்தியின் ஒளியும் குறைந்துவிடுகிறது. மறு படியும் எண்ணெய் விட்டு, வத்தியை மேலுக்கு எடுத்து (தூண்டி) விட்டால், விளக்கு ஒளி அதிகப்பட்டு ப்ர காசிக்கிறது. இப்படி ஞானியின் ஆந்தர்யம் (உள் நிலை). அவர்களுடைய உள்ளத்தின் நிலை. நீரில் வெண்ணெய் (ஒட்டாமலும், முழுகாமலும்) தேங்கி மிதக்கிறபடி இருக்கும். தேஹம், தேஹி என்பவை நீரும் வெண் ணெயும் போலவாம். (நீருக்குள் முழுகாமல் மிதக்கிற வெண்ணெயைப்போல், சரீரத்தில் அவர்களுடைய உள்ளம் எதிலும் ஒட்டாமல் தனியாகப் பார்த்துக் கொண்டு வேறுபட்டு நிற்கும்). உள் (இலக்ஷியம் (புத்தி) தலைக்குள் வைக்கவேண்டும். (தலைக்குள் மனது) சுஷும்னையில் புத்தியைப் புகுத்தி, மேல் நிலையில்

நிறுத்தவேண்டும். மனத்தையும் புத்தியையும் ஒன்றுபடுத்தி, புத்தியினுல் ஆராய்ந்து, ஜீவபாவத்தையும் [ஜீவனென்பதையும் பரமாத்மாவையும்] ஐக்யப்படுத்தி விட வேண்டும்.

253. ஒரு தேங்கா யிருந்தால், அதில் அநேகம் தேங்காய்கள் ஆகின்றன. தென்னை மரத்தின் அடியைக் கத்தரித்துவிட்டால், காய்களாவதில்லை. பற்று ரூபமாகிய வாசனை என்கிற அடியைப் புத்தியினுல் [விவேகத்தினுல்] கத்தரித்தால் சாந்தி என்பது வருகிறது. சாது குணம், சத்வ குணம், சாந்தி குணம் இவை எல்லாம் பற்றற்றுப் போனுல் வருகிறது. புத்தி சலனம் இல்லாமல் நின்ருல் ஸத்வ குணம் [விவேகம்] வருகிறது. ஸத்தின் பேச்சு கல்லில் கொத்திய அக்ஷரங்களுக் கொப்பாம். மற்றவர் [பாமரர்]களின் பேச்சு கற்பலகையின் பேரில் சுண்ணும்பினுல் எழுதிய எழுத்துக்கு ஒப்பாகும்.

254. ஒரே தடவையாக கிணற்றின் நீரையெல்லாம் இரைத்துவிட்டு, அதிலுள்ள சேற்றை எல்லாம் எடுத்து விட்டு, சுத்தப்படுத்த வேண்டும். அதன்பின் தேர்ந்த ஜலம் சுத்தமானது. சுத்த ஜலம் என்பது ஞானம். ஒரு தடவை, "தான்" "தனது", என்பதைச் சுட்டு தின்ன வேண்டும். அப்பொழுது, எல்லா விஷயங்களிலும் ஞானம் உண்டாகிறது.

255. ஒரு தடவை ஒருவன் காகிதத்தினமேல் எழுதக் கற்றுக்கொண்டபின், தரையில் போட்ட மணலில் எழுதுவது வேண்டாம். நிற்குண [ப்ரம்ம]த்தில் சென்றவன், மறுபடி சகுனத்தில் வருவதில்லை. தயிராக மாறிய பால், மறுபடி பாலாக மாறுமா? ஆகாது.

256. பாலுக்கு வந்தவர்கள் பசுவின் விலையைக் கேட்பதேன்? ஆத்ம விசாரத்தில் இறங்கியவர், தேஹ விசா

ரத்தைப் பற்றிக் கேட்பதேன்? ஆத்ம விசாரத்தில் இறங்கி நின்றவருடைய தேஹ ஸ்திதி உலர்ந்த கொப்பரையைப்போல் இருக்கிறது. ஒரு தடவைச் சுட்ட கயிறு மறுபடி கட்டுவதற்கு ஆவதில்லை. ஒருவரால் மற்றொருவருக்குக் கெட்டது[கெடுதி] செய்வதற்காவதில்லை. அவரவர் எண்ணங்களினுலேயே தங்கள் தங்கள் நன்மை தீமைகளை விளைவித்துக் கொள்ளுகிறார்கள். மற்றொருவர் காரணம் என்று சொல்வது லேசாய்ச் சொல்வதாம். படகு [அல்லது தெப்பம்] நகர்வதற்குக் கையினுல் தள்ளி நகர்த்துவதுபோல் [ஆரம்பத்துக்கு] காரண குரு வேண்டும். அந்தக் கரையடைந்த பின், படகுக்காரன் சஹாயம் வேண்டியதில்லை. படகு எப்படி நீரில் மிதந்து [வேறுபட்டு] இருப்பதோ, அப்படிப்போல் தேஹத்துக்குள் "தேஹி" இருக்கிறது. காலில் சேறுபட்டால், ஜலமிருக்குமிடம் போய் ஜலத்தைத் தொட்டுக் கழுவ வேண்டும். நீர் தொடுவதற்கே பயப்பட்டால் சேறு போவதில்லை.

ஒரு கையினுல் சப்தம் ஆவதில்லை. இரண்டும் கூடினுல் சப்தம் தெரிகிறது. கையின் விரல்கள் சமமாக இராவிட்டாலும், சாப்பிடும்போது சமமாகி உபயோகப் படுகின்றன. அப்படியே அனுபவமதிகமாக ஆக, ஒரே ப்ரகாரமாக ஆகிவிடுகிறது. குருபக்தி என்பது நரிகளின் ஊளையைப்போல். சாது ஸத் புருஷர்களின் ஹ்ருதயங்கள் ஒரு தன்மையவாயிருக்கும். ஒரு கிணற்றின் ஜலம் ஒரு மாதிரியாக இருக்கும். இரண்டுவகையாக இராது. ஜீவசக்தி சராசரங்களில் ஒரு வண்ணமாக இருக்கிறது. ஆகவே ஜீவ சக்தி, சந்த்ர சூர்யர்களிலும், இருக்கிறது. ஆகாசத்தில் ஆத்மாவும், ஆத்மாவில் ஆகாசமும் ஒன்றுகியிருக்கிறது. ஒன்றேயென்று

கண்டவர்கள் ஆனந்தமாகப் பாடுவார்கள். ஆனந்த குண்டலியைத் தெரிந்து கொண்டவர்கள் குண்டலி சக்தியைச் சோதிப்பார்கள், (ப்ராணாயாமத்தினால்) ஊதி ஊதிச் சேர்ப்பார்கள். அடிக்கடி [ப்ராணாயாமம் செய்து] ஊதி ஊதி பக்தியினால் முக்தியை அடைய வேண்டும். ஜனன மரணங்களை ஜயித்து உலகத்தை மறந்து நிற்கவேண்டும். மரணத்தையும், அதைச் சேர்ந்த யாவற்றையும் ஜயித்துவிட வேண்டும். மாயையின் லக்ஷணத்தை நன்றாய் அறிய வேண்டும். நித்யானந்தம் எது என்று கண்டறிய வேண்டும். மனமே! இந்த நித்யானந்தனுடன் நீ ஒன்றுபட வேண்டும். நித்யானந்தனுடன் கலந்த மனதோடு நின்றனுபவி. தாரக ப்ரமத்தின் ஆனந்தத்தை [அவ்வமிர்தத்தைக்] குடி; மனமே. தாரகத்தில் உலகம் கரைந்து தன்மயமாக இருக்கவேண்டும். தாரகத்தில் [ப்ரம்மத்தில்] இரண்டறக் கலந்தவன், தான் பிறந்த ஜன்மத்தின் பலனைப் பெற்றான். ப்ரம்மத்திலேயே மனத்தை எப்போதும் நிலையாக நிறுத்தவேண்டும். தாரக ப்ரம்மத்தில் தன் மயமாய்ச் சேரவேண்டும். தூக்கம் விழிப்பு கனவு ஆகிய அவஸ்தை மூன்றும் வெவ்வேறாக இல்லாமல், தன்னிலேயே ஐக்யப்பட்டு ஒரே அவஸ்தையாக (துரியாவஸ்தையாய்) இருக்கவேண்டும். பூட்டின் திறவுகோல் என்பது புத்தி. இது உன் வசமாய் இருக்கவேண்டும். பூட்டின் திறவுகோல் எவ்வளவு ஜாக்ரதையுடன் பத்திரப்படுத்தப்படுகிறதோ, அப்படி அவ்வளவு ஜாக்ரதையுடன் புத்தியைத் தலைக்குள் பத்திரப்படுத்த (நிலைக்கச் செய்ய) வேண்டியது. வெந்நீர் அடுப்பின்மேல் இருக்கும் போது தான் சூடாயிருக்கும். இறக்கி வைத்தால் ஆறிப்போகிறது. புத்தியை அடுப்பின்மேல் இருத்திய நீருக்கு ஒப்பாக வைத்திருக்க வேண்டியது. அப்படியே சிரத்தையை

குறையாமல் ஒரே மாதிரியாய் இருக்கும்படி செய்யவேண்டியது. ஒரு மூலையில் கட்டி வைத்திருக்கிற கன்றுக் குட்டியைப் போல் ஜீவன் இருக்கிறன். மூலையை விட்டு வெளியே போக ஆத்திரப்படுகிறது. கன்று. அமிருதம் என்கிற ஞானத்தைப் பெறுவது எப்போது? — என்று ஜீவனும் ஆத்திரப்படுகிறது.

257. தாரணை என்பது புத்தியின் உள் நோக்கும் அறிவை அதிகப்படுத்துவதற்கு வழி. தாரணை என்பது முக்திக்குக் கொண்டு போகும் வழி. மேலே ப்ரம்ம ரந்திரத்திற்கு முட்ட வைப்பதற்கு வழி. ப்ராணன் ஸ்திரமாக க்ரமப் பட்டு நடப்பதற்கு வழி. ப்ராணன் க்ரமப்பட்டு ஸ்திர மானுல், மனதும் ஸ்திரப்பட்டது. ப்ராணத்தின் நடை மேலுக்குச் சென்றதே யானுல், அங்கே ஞானமும் ஒவ் வொரு நரம்பிலும், வ்யாபித்து சாந்தி நிறைய உண்டா கிறது. அப்போது ஸ்வாபாவீகமான (சரீரத்தின்) தன்மை வேருகவும், உள்ளே உணர்ந்து அறியும் தன்மை வேருக வும் நிற்கின்றன. அப்போதே அவ்விடமே, யோகத்தினுல் (யோகரூடியினுல்) வருகிற சாந்தமும், க்ஷமை, சமாதான மும் புத்திக்கே தெரிகின்றன. யார் தாரணையை எப் போதும் வழக்கம் செய்து ரூடிப்படுத்துகிருர்களோ, அவர்களுக்கு வெளியுலக மெல்லாம் தன்னிடமே யிருப்ப தாகக் காண்பார்கள். அவர்கள் ஸ்திர சித்தர்களாகி நித்யானந்த முக்தியை அடைந்தவர்களாவார்கள். ஆத்மா எல்லா க்ரியைகளுக்கும் நியமங்களுக்கும் மேல்பட்டு வேருகி யிருப்பதை அறிவார்கள். கர்மங்களின் பயனின் மேல் அபேக்ஷை யில்லாமல் செய்கிற கர்மங்களுடன் நடத்தப்படுகிற மார்க்கம் கர்ம மார்க்கம் எனப்படும். செய்து, செய்து செய்ததே ஞாபகமில்லாதபடி செய்தால்

பாபத்துக்கு ஆளாக வேண்டியதில்லை. கர்மமென்பது உள்ளிருந்து உள்ளிலே அறிந்து நடப்பித்தலாம்.

258. ஆத்மா என்பவன் ஸ்தூல த்ருஷ்டிக்கு (பாவனைக்கு)த் தெரிவதல்ல. புத்தியாகி உள்ளுணர்வுக்குத் தெரிவது. ஆகாரம் (ரூபம்) குணம் முதலியவைகளால் தெரியப்படுகிறதல்ல. சாந்தியும், தேஹத்துக்குள் (உடலுக்குள்) லக்ஷ்யமும் (நோக்கம், பார்வை, உணர்வு) உள்ளவர்களுக்கே சாந்தியைப் பெறுவது கஷ்டம். ஆத்மாவின் பெருமை தெரிந்து கொள்வது மிக மிக ப்ரயாசை. (வெளியில்) கண்டு கண்டுள்ள வஸ்துக்களின் பேரில் செலுத்துகிற நோக்கத்தைக் குறைக்க வேண்டும். உள்ளுணர்வினால் கண்டறியவேண்டிய வஸ்து (ஆத்மா)வின் மேல் பக்தி (அன்பு) அதிகமாக வேண்டும். பார்த்துப் பார்த்திருக்கிற (உலக) வஸ்துக்களின் பேரில் ஞாபகம் (நோக்கம்) செல்லச் செல்ல, சுகம் துக்கம் ஆகிய இரண்டாகவே இருப்பதைக் காண்போம். பார்த்திராத வஸ்து (ஆத்மா)வின்மேல், உள் பார்வை வைக்க வைக்க சுக துக்க ரூபமாகிய இருமைகளை (வித்யாசங்களை)ப் பார்க்கமாட்டோம். (எல்லாம் ஒன்றாய் இருப்பதையே காண்போம்).



## ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகள்.



என்னதுயான் என்னல் அற்ருேர் எங்கிருந்து பார்க்கினும் நின் சன்னிதியாம் நீபெரிய சாமி பராபரமே.

[ தாயுமானர் ]



## மூன்றாவது பாகம்

---

259. 'ஓம்' என்னும் எழுத்து, ஆகாசத்தில் இருக்கும் பெருங்காற்றைப் போன்று இருக்கிறது. 'ஓம்' எனும் அக்ஷரம், அது முன்பு பின்பு என்றில்லை. ஓங்காரம் (நாடகத்தில்) சூத்ரதாரனைப் போல் (முன்னது). மற்ற பாத்ரங்களைப் போலுள்ள எல்லா சரீரங்களும், ஓங்காரமயமாயிருக்கும். உள்ளும் புறமும் எல்லாப் பக்கங்களிலும் அது இருப்பது. ஓங்காரத்திலிருந்து ஸர்வமும் உண்டாயின. ஓங்காரம் என்னும் சப்தத்தை எப்போதும் நமது நினைவிக்குக் கொண்டுவர வேண்டிய அவசியமில்லை. அந்த சப்தம் ஒவ்வொன்றிலும் இருக்கிறது. அந்த சப்தம் எவ்விடமும் வேறாகச் சொல்லிக் கூப்பிட வேண்டியதில்லை. ஓங்காரம் [illegible] சக்தியும் துண்டு துண்டாக இல்லை. அகண்டமானது ஒவ்வொரு ஜந்துவிலும் உள்ளது. ப்ராணிகள் போடுகிற சப்தமே ஓங்காரம். "ப்ரணவ"மென்பதும் ஓம்-காரம் மாம். ஜீவஸ்வபாவத்தில் கூடியிருக்கிறபோது, அதில் ப்ராணனுடன் கூடி வேலை செய்யும்போது, அதற்கு ப்ராண வாயு என்று பெயர். ஜீவ ஸ்வபாவம் வேறாகவும் ஆத்மன் வேறாகவும் ஆனபோது, அதுவே ப்ரணவம் ஓங்காரம் எனப்படும். அது அப்போது ஓங்கார மயமாகி இருக்கும்.

ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகள்.

# எங்கும் நீ! யாவும் நீ!!

"நெரித்த திரைக்கடலில் நின்முகம் கண்டேன்
நீல விசும்பினிடை நின்முகம் கண்டேன்
திரித்த நுரையினிடை நின்முகம் கண்டேன்
சின்னக் குமிழிகளில் நின்முகம் கண்டேன்
பிரித்துப் பிரித்துநிதம் மேகம் அளந்தே
பெற்றதுன் முகமன்றிப் பிறிதொன்றில்லை
சிரித்த ஒலியினிலுன் கை விலக்கியே
திருமித் தழுவியதில் நின்முகம் கண்டேன்"

என்னதுயான் என்னல் அற்றோர் எங்கிருந்து பார்க்கினும் நின்
[illegible]

[ தாயுமானுர் ]



# மூன்ருவது பாகம்

---

259. 'ஓம்' எனும் எழுத்து, ஆகாசத்தில் இருக்கும் பெருங்காற்றைப் போன்று இருக்கிறது. "ஓம்" எனும் அக்ஷரம், அது முன்பு பின்பு என்றில்லை. ஓங்காரம் (நாடகத்தில்) சூத்ரதாரனைப் போல் (உள்ளது). சூத்ரங்களைப் போலுள்ள எல்லா சரீரங்களும், ஓங்கார மயமாயிருக்கும். உள்ளும் புறமும் எல்லாப் பக்கங்களிலும் அது இருப்பது. ஓங்காரத்திலிருந்து ஸர்வமும் உண்டாயின. ஓங்காரம் என்னும் சப்தத்தை எப்போதும் நமது நினைவுக்குக் கொண்டுவரவேண்டிய அவசியமில்லை. அந்த சப்தம் ஒவ்வொன்றிலும் இருக்கிறது. அந்த சப்தம் எவ்விடமும் வேருகச் சொல்லிக்கூப்பிட வேண்டியதில்லை. ஓங்காரமாக இருக்கிற சக்தியும் துண்டு துண்டாக இல்லை. அகண்டமானது ஒவ்வொரு ஜந்துவிலும் உள்ளது. ப்ராணிகள் போடுகிற சப்தமே ஓங்காரம். "ப்ரணவ"மென்பதும் ஓம்-காரம் மாம். ஜீவஸ்வபாவத்தில் கூடியிருக்கிறபோது, அதில் ப்ராணனுடன் கூடி வேலை செய்யும்போது, அதற்கு ப்ராண வாயு என்று பெயர். ஜீவ ஸ்வபாவம் வேருகவும் ஆத்மன் வேருகவும் ஆனபோது, அதுவே ப்ரணவம் ஓங்காரம் எனப்படும். அது அப்போது ஓங்கார மயமாகி இருக்கும்.

ஜீவனும் ஆத்மாவும் இவ்விரண்டும் ஒன்றே எனும் பாவனை ஆகிறபோது, ஐக்ய பாவம் எனப்படுவது; அதுவே ஓங்காரமாம். அந்த சமயத்தில் எல்லா பக்கங்களிலும் ஒன்றே காணப்படும். எல்லாவற்றிலும் ஒன்றேயானதால் எந்த எந்த வஸ்துவை ஸ்ரத்தையுடன் சிந்திக்கிறாயோ அதுவே எல்லாம் ஆய் நிற்கும். (காணும்).

260. ஓங்காரமாயிருக்கிற சக்தியும் எல்லாவற்றிலும் வ்யாபித்தும் உருவம் இல்லாததாய் இருக்கிறது. இவ்வோங்கார சக்தி எல்லாவற்றிலும் ப்ரகாசமாய் வியாபித்து (ஒளிக்கும் ஒளியாய்) விளங்குகிறது. தெரிதலும் தெரியாமையும் இரண்டும் அற்றது. சுகமும் துக்கமும் தொடாத நிலை.

261. மனது என்பதிருந்தால் எல்லாமும் வேண்டி இருக்கிறது. மனதென்பதில்லாவிட்டால், எதிலும் வேட்கை (விருப்பம்) இல்லை. (எதுவும் வேண்டாம்). மனது இருந்தால் கடவுள் (உன்னைவிட) ப்ரத்யேகமான (வேறான)வராகக் காணப்படுகிறார். மனதைப் புத்தியில் ஐக்யப்படுத்தினவர்களுக்கு கடவுள் என்று ப்ரத்யேக வஸ்துவாக இல்லை. எல்லா வஸ்துக்களிலும் கடவுளாகிய ஒன்றே காணப்படுகிறது. ஆசை அல்லது பற்று இருந்தால் அதை நிறைவேற்ற உனக்கு ப்ரத்யேகமான கடவுள் இருக்க வேண்டியதாகிறது. உனது ஆசை பூர்த்தி செய்வதற்கு கடவுளுடைய ஸஹாயம் அவசியமாகிறது. அப்போதே மனது பலவிதமான விஷயங்களில் சென்று உழன்று பலவித விஷயங்களில் சந்தேஹங்கள் (குழப்பங்கள்) நேரிடும். அப்போதே ப்ரதிமை அல்லது ரூபம் பெற்ற ஒன்றைக் கடவுள் என்று ஒட்ட வேண்டியதாயிற்று. காரணமும் கார்யமும் இரண்டுமாயிற்று. ப்ரதிமை என்பது மாயா சம்பந்தமானதாக ஆயிற்று.

262. ஆகாசம் என்பது மேலுக்குச் செல்வது. உள் பார்வை, உள் உணர்வு, சூக்ஷ்ம புத்தி என்பது ஆணின் லக்ஷணம். உலகத்தை பார்க்கிற வெளிப்பார்வை பெண்ணின் லக்ஷணம் (ஸ்வாபாவிகப் பார்வை பெண்ணின் லக்ஷணம்).

263. ஆசை என்பதில்லாதவர்களுக்குப் பிரத்தியேகமான கடவுள் என்று வேருக வைத்துக்கொள்ள வேண்டியதில்லை. அவர்களுக்கு எந்த சாதனையும் வேண்டியதில்லை. மனது விஷயங்களின் சம்பந்தமாய் அவைகளின் பின் ஓடுகையில் அதை இழுத்து ஒரு முகமாய் (ஏகாக்ரமாய்) நிறுத்த சாதனை என்பது வேண்டும். ஒருவனில் நாடி எத்தனை தடவை துடிக்கிறதோ, அத்தனை தடவை மனதைப் புத்தியில் சென்று நிலைக்கும்படி செய்ய வேண்டியது. மனதின் உள்நிலை இந்திரியங்களுடன் கூடியிருத்தலாகாது. நீ என்ன செய்துக் கொண்டிருந்தாலும் மனது உள்ளுக்குள் புத்தியில் நிலைத்திருக்க வேண்டும். உள்நிலை வேறுபட்டு நிற்கச் செய்ய வேண்டும். நீருக்குள் இருக்கிறவன் நீரில் மூழ்கிப் போகாமல் இருக்க, நீரில் நீந்தத் தெரிந்துகொள்ள வேண்டும். மாயையை(1), பரிசுத்தமான (மேன்மையான) மாயையினுல் ஜயிக்க வேண்டும். மாயை என்பதென்னவென்ருல் அவரவர்களின் மனது (பற்பல விஷயங்

(1) மாயை இரண்டு வகை. சாதாரணமாய் உலகத்தில் உள்ள வஸ்துக்களின் பேரில் பற்றும் ஆசையும், அவ்வஸ்துக்களுக்காக மனது விஷயங்களில் சிக்கிக்கொள்வது சாமான்ய மாயை. இது இவ்வுலகத்தில் சுகதுக்கங்களாக உள்ளது. மேன்மையான மாயை - என்பது, நல்ல விவேகம் தோன்றி, பற்றுக்களையும் ஆசைகளையும் அறுத்துத்தள்ளி – அதில் சிக்கிக் கொள்ளாமல், உள் ஆராய்ச்சியால் ஞானத்தைக் கடைப்பிடியாக பிடித்து, ஆத்மாவின் நிலையை அறியும் முயற்சியும், அறிதலும், மேன்மையான (சுத்தமாயா) மாயை.

களில்) சென்று உழுலும்போது பற்பல விதமான பற்று கள் உண்டாகின்றன. (அப்பற்றுக்களை மனது தாவித் தழுவுகின்றது - பற்றுக்கள் மனதைப் பிடித்துக்கொள் வதில்லை). தென்னை மரத்தின் மேலேறுகிறவன் மரத் தைப் பிடித்துக் கொள்ளுகிருனேயன்றி, மரம் அவனைப் பிடித்துக்கொள்வதில்லை. அப்படி உன்னைப் பிடித்துக் கொள்ள மாயைக்குக் கை கால்கள் உண்டோ? இல்லை.

**264.** கல்ப சூன்யம் (நிர் விகல்ப-உத்தேசமில்லாமை) என்பது சூக்ஷ்ம மார்க்கமாகப் போகின்றது. விசாரம் (ஆராய்தல்) புத்தியின் மார்க்கமாய்த் தன்மயமாகின்றது. சமதிருஷ்டி என்பது ஸமாதி (ஒன்றையே எப்போதும் எங்கும் பார்ப்பது). சாதனை செய்து (தினமும் தப்பா மல் செய்து) ஆத்மாவின் வைரிகளாகிய காமம் (ஆசை) க்ரோதம் முதலிய ஆறு குணங்களை ஜயித்துத் தன் வச மாக்கிக் கொள்ள வேண்டியது. சாதனை செய்கிறவன் பிறருடைய குணங்களைப்பற்றி [கெடுதல்] பேசக் கூடாது. அப்படிச் செய்தால், ஒரு சிறு விதை முளை யின் பேரில் பெரிய கல்லை வைத்தால் எப்படியோ அப்படி [தன்சாதனைக்குக் கேடு அல்லது தடை ஏற்படும்]. சாதனை செய்கிறவர் ஒரு நாழிகை காலம்கூட சாதனையை விட்டிருக்கக்கூடாது. இடைவிடாமல் மனது சாதனை செய்துக்கொண்டே இருக்கவேண்டியது.

**265.** அதிக விஸ்வாஸம் வைத்துத்தான் ப்ராண வாயுவை ஊர்த்வ [மேலே போகிற] மார்க்கமாய் நிறுத்த வேண்டியது. அதுவே மோக்ஷத்துக்கு வழி. இந்த சரீரமானது ஆத்மாவுக்கு, குகை; இதில் நித்யனுகிய ஆத்மா ஜீவனுகத் தங்குவது. யோகம் என்பது இரண்டு ஒன்றுகி விடுவது. புத்திக்குள் ஐக்யமாவதே யோகம். ஜீவன் புத்தி மார்க்கமாய்ப்போய் ப்ரம்ம ரந்திரத்தில்

கூடிக்கொள்வது. பக்தி [அன்பு] யுக்தி [க்ரமமான ஆராய்ச்சி] சக்தி [நிலைநிறுத்தும் திறன்] ஒன்ருகி-"ஓம்" ஓங்காரமாகிறது. அகங்காரம் - "ஓம்" - காரத்தில் லயித்து விடுகிறது. கர்ப்பூரம் அக்னியில் மறைந்து போவதுபோல் ஆத்மாவில் சித்தமும் லயித்துவிடுகிறது. சிறு குழந்தைகளைத் தொட்டிலில் இட்டுத் தூங்குகிறபடி செய்வதுபோல் சித்தத்தை புத்தியில் நுழைக்கச்செய்து [லயித்த பின்] தான் யாரென்று கண்டு அறிவது.

266. மனதே! ஆனந்தமெனும் வீட்டை அடை. நீர் ப்ரவாஹம் (வெள்ளம்) வந்து நிறைந்தால், (அங்கே) குளம்-கிணறு-ஏரி முதலிய நீர் நிலைகள் வேருகிக் காணப் படுவதில்லை. இருள் இருப்பதினுலேயே வெளிச்சம் இருப்பதுண்டெனத் தெரிகிறது. தித்திப்பு இருந்தால் காரமும் உண்டென நினை. ஆத்மா சரீரம் அல்ல என்று தெரிந்த ஜீவன் தன் ஸ்திதி என்னவென்றறிகிருன். தான் முதலில் எப்படியிருந்து ஜீவனுனுனே அந்த ஸ்திதி அறிந்து விடுகிருன். "நான்", "எனது" என்பவை ஸ்தூலாபிமான நிலையிலும், மூக்கு நுனிக்குக் கீழும் உள்ளவை. மேல் நிலைகளில் இல்லை. இதற்கு மேல் நிலையில் உள்ளதற்கு, முதல், கடை, முடிவுகள் இல்லை. பார்க்கப்படுகிற எந்த வஸ்துவுக்கு ஆதி (முதல்) அந்தியம் (முடிவு) உண்டு. ஆத்மா இந்த மாம்சக் கண்ணுக்கு காணப்படாத காரணத்தினுல், அதற்கு ஆதி யும் அந்தியமும் இல்லை. ஆத்மாவின் சக்தியைக் குறைக்கக்கூடியவர்களைக் காணமுடியாது. அது எப் பொழுதும் ஒரே ப்ரகாரமாய் இருக்கிறது. ஆத்மா எங் கும் ஒரே விதமாய் (ஆகாசத்தைப்போல்) இருப்பது. ஒரு மனிதன் தலையில் கோடி சூர்யர்களுடைய ப்ரகாசம் நிலைத்திருக்கிறது. கண் பெரியதோ? சூர்யன்

பெரியதோ? என்றால், கண்தான் பெரியது - ஏனெனில், கண் கெட்டுவிட்டால் சூர்யனைப் பார்ப்பதெப்படி? ஆதலின் கண்ணே பெரியது. மனதின் சின்னமான (அடையாளமான) ப்ரதி பிம்பத்தின் ரூபங்கள் (மனதின் இருப்பிதைத்தான் காட்டுமேயல்லாது, அப்பிரதி பிம்பத்தைப் பிடிப்பவனுடைய குணதோஷங்களைக் காட்டாது. ஏனெனின்) "போட்டோ க்ராப்பு" எடுக்கும்போது, உட்கார்ந்துகொண்ட ரீதியிலேயே பிம்பம் வருவதேயல்லாமல், பிம்பத்தை எடுத்தவனுடைய குணமும் தோஷங்களும், பிம்பத்தில் காணுது.

267. உள்ளத்தில் எவ்வளவுக் கெவ்வளவு சிரத்தை கொள்ளுகிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு பலம் (பயன்). நல்லதும் தீதும் ஆத்மாவினிடமில்லை. ஆத்மா சாயலைப் போல் இருக்கிறது. எந்த (ஸ்தூல சூக்ஷ்ம) ரூபமாகவானாலும் ஆகித் தோன்றும். ஜீவனும் கூண்டுக்குள் இட்ட பக்ஷியைப்போல். கூண்டு கெட்டுப் போனால் பக்ஷி கெடுவதில்லை. பக்ஷி வெளியில் ஓடிப் போகிறது. அந்தப் பக்ஷி மற்றொரு கூண்டைக் கட்டி ஆறு மாதங்களுக்குள், அல்லது ஒரு வருஷத்துக்குள், அல்லது நிமிஷங்களுக் குள்ளும் வந்திருக்கவும் முடியும். அதின் ப்ரயத்தனத்தைப் பொருந்தி யிருக்கிறது. இங்கிருந்து "ரெயில்வே ஸ்டேஷனு"க்கு ஒரு நாழிகைக்குள்ளும் ஒரு மாதத்திலும் போகலாம்.

268. வைராக்யம் எப்பொழுதும் ஒரே ப்ரகாரமாய் இருப்பதற்கும், வைராக்யம் ஸ்திரமாய் நிற்பதற்கும் சாதனம் [வழக்கப்படுதல்] வேண்டும். வைராக்யம் சரீரத்தை சம்பந்தித்த தல்ல. மனது, வெளி யுலகத்திலும், உள்ளிலும், ஆகிற காரண கார்யங்களில், ஸ்திரமாய், ஏகசித்தனுய் [த்ருட சித்தனுய்] இருந்தால் தான்,

ஆத்மாவாகிய ஒன்றைப் பார்க்கலாம். ஞானமும், [தெரிதலும்] விஞ்ஞானமும் [நான் தெரிந்து கொண்டேன் என்று தோன்றுதலும்] இல்லாமல் இருத்தல் ஆத்மாவைப் பார்த்தலாம். தெரிந்தும் தெரியாமலிருத்தலே ஆத்மாவின் ப்ரபாவத்தைப் பார்த்தலாம். [ஆத்மப்ரபாவத்தைக் கண்டு பெற்றவர்கள்] குருடரைப் போலும் இருப்பார்கள். கேட்டும் செவிடரைப் போலும் இருப்பார்கள். செய்தும் செய்யாதவர்களெனும்படி இருப்பார்கள். இந்திரியங்களில் ப்ரவர்த்திக்கிற போது அவர்கள் அவைகளுடன் ஒட்டாமல் வேருகி நிற்கிருர்கள். இந்திரியங்கள் செய்தாலும் தாங்கள் வேருகி நிற்றலால், தாங்கள் செய்தபடி இல்லை. செய்தும் செய்யாதபடி இருக்கிறது. ஆத்மாவிடத்தில் தரம் என்பது லயித்துப்போய், செய்தோம் என்கிற எண்ணம் இல்லாமல் லயித்து, ஆத்மாவை அறிதலாலும், செய்தலை அறியாமல் இருத்தலாலும், செய்யாதவர்களாகிருர்கள். மறதியதிகமாய்ச் செய்தாலும் செய்யாதவர்களென்கிருர்கள். சிப்பிக் கெட்டாத கொப்பரைக் கொப்ப, எதிலும் ஒட்டாத ஆத்மாவை அறிந்துகொண்டு நிற்பார். சரீரத்தின் மேல்புத்தி செல்லாது. அப்படியிருப்பவர்கள் புண்ய பாபங்களுக்கு உட்படுவதில்லை. ஒரு நதியில் மிதக்கிற தோணிகளைப்போல் இருப்பார்கள். நீர் வேருகியும் தோணி வேருகியும் இருப்பதைப்போல், அவர்களின் லக்ஷ்யமும் [புத்தியும் நினைப்பும்] பிரகிருதி சம்பந்தமான சரீராதியும் ஒன்றுடன் மற்றவை கலந்து கொள்ளாமல் வேருகி நிற்கும். அவர்கள் ஞானேந்திரிய விஷயங்களில் மட்டுப் ப்ரவேசிக்கிருர்கள் கர்மேந்திரிய விஷயங்களின் சங்கதி அவர்களிடமில்லை. கரும்பின் ரசத்தை மட்டும் எடுத்துக் கொண்டு சக்கையைத்

தள்ளி விடுவது போலாகும். [ஆத்ம பாவனையை அங்கீகரித்துக் கொண்டு சரீராதி மனசு பர்யந்தம் உள்ளதைத் தள்ளி விடுதலாம்]. கரும்பின் ரஸம் வேருகிக் சர்க்கரையானபின், மீண்டும் அது கரும் பாகாது. பழைய பாத்திரம் புதுமையை அடையக்கூடாத படி ஒரு தடவை அப்பியாசப்பட்டு மாறிய பின், மறுபடி முதலிலிருந்த மாதிரியாகாது. [மனது] தன்னிடம் உள்ள வாஸனைகளைப் புத்தியினுல் போக்கிக்கொண்டால், புதிதாக சாத்விகம் என்பதை அடைந்ததாகும். அப் போது, அதினுல்தான் திருப்தி.

269. இப்படி சித்த சுத்தி இல்லையானுல் திருப்தியும் உண்டாகாது. சுத்தி இல்லாதவன் சித்த ஸ்திரத்வம் அடையான். [வாஸனைகள் நீங்கி] சித்தம் சுத்தி அடைந்திராவிட்டால், பேச்சுகள் நிற்காமல் வளர்ந்து முடிவடையாது. பனிக்கட்டி நீரில் இட்டபடி இருக்கும். [தணிப்பு தணிப்புடன் கலந்தபடி வளரும்]. ஆத்ம பாவனையில் நிலைத்தவன் அதே ப்ரகாரம் ஆத்மாவுடன் சேர்ந்து விடுகிருன். நதிகள் சமுத்திரத்தை அடைகிற படி, எல்லா வாஸனைகளும் ஆத்மாவிலேயே ஐக்ய மாகின்றன. ஆத்மன் என்பது ஒரு வஸ்துவல்ல. கர்மம் என்பது ஒரு வஸ்து. சமுத்திரத்தில் "ஸ்டீமர்" [நீராவிக் கப்பல்] இருக்கிறது; பார்க்கிறதற்கு சமுத் திரத்தை ஒட்டிக் கொண்டிருக்கிறபடி தோன்றுகிறது; ஆனுல், 'ஸ்டீமர்' வேறு நீர் வேறு. நீருடன் சம் பந்தித்துக் கொண்டிருக்கவில்லை. அப்படி உலக விஷயங் களில் இருக்கிறவன் [எதிலும் ஒட்டாமல் இருக்க வேண்டும். எந்தக் கர்மங்களிலும் சம்பந்தப் படாமல் இருக்கவேண்டும். எப்படி ஓர் ப்ராம்மணன், போஜன சாலையில் எப்போது இலைகள் போடுவார்கள் என்று

காத்துக்கொண்டிருக்கிறுனே, அப்படி ஒருவன் எப்போது மனது சுத்தியாகி முக்தி கிடைக்குமோ [உலக விஷயங்களிலிருந்து விடுவிக்கப்படுவானே] என்று ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கவேண்டும்.

270 பழங்கள் இல்லாத மரத்தைக் கண்வைத்துப் பார்ப்பாருமுண்டோ? இரார், மனிதன், மனிதன் என்று சொல்வதற்குக் காரணம் யாது? மனஸ் இருப்பதினுல் தான் மனிதன் எனப்படுகிறுன். மனத்தை நானுவிஷயங்களிலும் ஞானத்தை அடையச்செய்து, சாந்தியுடையதாக ஆக்கி, ஓங்காரத்தில் ஒன்றுபடக் கலந்துவிடுவது. முக்தி அடைய வேண்டுமென்று விரும்புகிறவன், உடல் ஸாரமற்றது; அது நானல்ல; என்று தெரிந்திருக்க வேண்டும். அப்படி யுள்ளவர்களுக்குத்தான் ஆத்ம ப்ரபாவம் கண்டறியமுடியும். மற்றப்படி 'நான் சரீரம்'' என்றெண்ணிக் கொண்டிருக்கிறவர்களுக்கு ஆத்ம ப்ரபாவம் காண்பதற்குமுடியாது. ''தான்'' ''தனது''என்னும் எண்ணங் கொண்டிருக்கிறவர்களுக்கு, ஆயிர வருஷங்கள் சாதனை செய்தாலும். எள்ளத்தனை சாந்தியையும் அடைவதில்லை. யாராயினும் நதியில் ஸ்நானம் [நீராடினுல்] செய்தால், உடம்பு அழுக்கில்லாமல் சுத்தமாகிறது. பறையனுயினும் ப்ராம்மணனுயினும், குழந்தைகளாயினும் யாராயினும் ஸ்நானம் செய்தால் அழுக்குப் போதல் காண்க. ப்ரதி மனிதனும் வெளித் தோற்றத்தில் கொஞ்சம் வித்யாஸப்பட்டிருந்தாலும், உள் அந்தரங்கத்தில் [சாதனை செய்வதில்] வித்யாஸம் இன்றி ஒரே மாதிரியாக இருக்கிறது. [பயனை அடைவதைப் பார்க்கவும்]. ஒரு தோட்டத்தில் மிளகாயும், வெள்ளரிக்காயும் பக்கத்தில் பக்கத்தில் விளைந்தாலும் ஒன்றின் சுபாவம் மற்றென்றுக்கு இல்லை. நெருப்பின்

பக்கத்தில் இருப்பவர்கள் நெருப்பின் சூட்டை அறிவார்களேயன்றி நீரில் இருப்பவர்கள் அறியமாட்டார்கள். சாந்தி தண்ணீரைப்போல் குளிர்ந்திருக்கும். சரீராதியின் இயல்பு, நெருப்பைப்போல் உள்ளது. பசி தோன்று முன்பே, சமையல் தயாராயிருக்க வேண்டும். ஆகவே நீ ஒரு க்ருஹஸ்தனுவதற்கு [இல்லறத்தை மேற்கொள்வதற்கு] முந்தி அதை நடத்துமாறும் [முறையும்] அறிந்திருக்கவேண்டும். இல்லறத்தான் உள்ளும் புறமும் பரிசுத்தமாக ஒரே விதமாய் வைத்துக் கொண்டிருக்கவேண்டும். கார்ய காரணங்களின் தன்மையும், எதையும் உய்த்துணரும் உள் ஆராய்ச்சியும் விசேஷமாக இருக்க வேண்டும்.

271. ஒருவன் குதிரைக்குப் பின்னுல் மிதமில்லாமல் ஓடிக்கொண்டே போவதாகுமா? கொஞ்ச தூரத்தில் ஏறத்தான் வேண்டும். அதன் காலைக் கட்டிவிட்டு சீக்கிரம் ஏறலாம். அப்படி உலகத்துள் தங்கள் மனதை விஷயங்களில் பற்றிக்கொள்ள விடாமல் தடுத்து வைத்திருத்தல் வேண்டும். ஓலைக் குடையின்மேல் விழுந்த மழைத்தண்ணீர் ஒட்டாமல் நழுவி விழுந்து விடுவது போல் (என்ன காரியங்கள் செய்தாலும்) எண்ணத்தில் "நான் செய்கிறேன்" என்கிற (அகங்கார மமகாரங்களாகிற) அபிமானம் சற்றும் இல்லாமல் இருக்கவேண்டும். ஒரு க்ருஹஸ்தன் கோயிலுக்கு விடப்பட்ட கன்றைப் போல் இருக்கவேண்டும். செய்கிற எல்லாவற்றையும் ப்ரம்மார்பணம் செய்யவேண்டும். ஆனுல் இப்படிச் செய்கிறவன் தேவர்களுக்குப் பக்கத்தில் இருக்கிருன் என்பதற்கில்லை, இப்படிச் செய்யாதவன் தேவர்களுக்குத் தூரத்தில் நிற்கிருன் என்பதற்குமில்லை. ஆயிரம் ஜனங்கள் முன்னிலையில் ஒரு விளக்கு வைத்தால் அவ்

வெளிச்சத்தை யாவருக்கும் சமமாய் வித்யாசமின்றி வீசுகின்றது. அதை ஒவ்வொருவரும் பேதம் இல்லாமல் அடையலாம். வெளிச்சம் பரவுகிறபோது இருள் இல்லை. இருளில் ஒளி இல்லை. இரண்டில் ஒன்றுதான் நிற்கும். சுபாவம் என்பது சூரியனைப் போல், சித்தம் சந்திரனைப் போல் தணிந்து சாந்தப் பட்டிருக்க வேண்டும்.

*272.* வைராக்ய மென்பது துணிக்குப் பற்றிக்கொண்ட நெருப்பைப்போல் உள்ளது. வைராக்கியம் அதிகமாக ஆக, உள்ளிருக்கும் ஆத்மாவின் ப்ரபாவம் (ப்ரகாசம்) அதிகமாகத் தோன்றும். உடல் சலனமில்லாமல் நிற்கலாம். ஆனால், மனதுதான் சலனமில்லாமல் ஸ்திரமாய் நிற்கவேண்டும். மனது சுத்தமில்லாதவர்களுக்கு, சமதிருஷ்டி (எல்லாவற்றையும் சமமாய் நோக்கும் பார்வை) வருவது அரிது. சாதனை செய்யாதவர்களுக்கு சாத்துவீக குணம் வருவது கடினம். சாதனையினால் சூக்ஷ்ம புத்தி அபிவிருத்தியடையும்; அப்படிச் செய்யாமற் போனால், உலக விஷயங்களிலுள்ள பற்று நாசமடையாது. மண், பெண், பொன், இவைகளின்மேல் உள்ள ஆசை அற்றுப் போகும்படிச் செய்வது பிரயாஸைதான். சாதனையினால் தான் ஆகவேண்டும். (நரஜன்மம் எடுத்ததின் பயன் தான் என்ன வென்ருல்,) சித்தம் சுத்தம் செய்யப்பட்டு சத்வ, ராஜஸ, தாமஸ குணங்களின் வேகத்திலிருந்து விடுவிக்கப்பட்டு ஏக சித்தனுகி நிற்பதே நரஜன்மத்தின் பயன். அது புருஷார்த்தமாம். அழுக்குப்பட்ட வஸ்திரத்தை "ஸோப்பு"த் தண்ணீரில் நனைத்து வைத்தால் (அழுக்கு நீங்கிப் போய்) சுத்தமாகிறதோ, அப்படி மனதின் வாசனைகளை புத்தி என்னும் "ஸோப்பு"த் தண்ணீரில் நனைத்து வைத்தால் ஆகாசத்தைப் போல் சுத்தப்படுத்தி வைக்கலாம். துணி தைக்கும் யந்திரத்தில் பழக ஆரம்பித்தால்,

கைகள் கால்களை அசைகிறபோது, புத்தியைக் கால்களின் மேல் வைக்கவேண்டியதில்லை. கைகளின்மேல் கவனம் எப்படி நிற்கிறதோ, அப்படி அவரவர் புத்தியை ப்ரம்ம ரந்திர ஸ்தானத்தில் வைத்து மனதை புத்தி மூலமாய் ஹ்ருதயாகாச நிலையில் மனனம் செய்து செய்து மனதை நிறுத்தி சாந்தியைப் பெறுவதே நித்யானந்தம் ஆம்.

273. மனது பரிசுத்த மானவர்கள் கடவுளை எந்தப் பெயர் வைத்தும் சொல்லலாம், ப்ரகிருதி (சுபாவம் அல்லது இயல்பு) 'ரெயில்' வண்டிகள் (தொடர்) என்பது ப்ரகிருதி; அதில் செல்லும் ஜனங்கள் என்பது ஞானம்; மூலா தாராதி சக்ரங்கள் 'ரெயில், ஸ்டேஷன்கள்'; சக்கரங்களில் சூக்ஷமம் — சூக்ஷ்ம சக்தி, குழாய்களில் — சூக்ஷ்ம சக்தியுள்ள சூக்ஷ்மக் குழாயில் குண்டலினி சக்தி — ஓங்கார ரூபமாய் சூக்ஷ்மக் குழாய்களில் ஓடுகிற குண்டலினி சக்தி — இவைகளையும், சூக்ஷ்மக் குழாய்களில் உள்ள சூக்ஷ்மத்தையும், சாதனை செய்து செய்து தெரியவேண்டும். (அனுபவம் செய்து, தெரிந்து, சித்தியை அடையவும்).

274. ஒருவர் கோடீஸ்வரராக இருக்கிறார். ஒரே சமயத்தில் எல்லாரும் கோடீஸ்வரராக முடியாது. அவரவர்கள் ஸ்திக்குத் தக்கபடி மேல் நிலைகளை அடையக் கூடும். சமுத்திரத்தில் மிக அதிகமான ஜலம் இருக்கிறது. எடுத்துவர எவ்வளவு பெரிய பாத்திரம் கொண்டு போயிருக்கிறார்களோ, அவ்வளவு மாத்ரம் எடுத்துவர முடியும். அவரவர்களின் கர்ம வாசனைகளுக்குத் தக்கபடி பயனடைகிறார்கள். சாது ஸத் புருஷர்களிருக்குமிடம் சென்று, அவர்கள் சொல் வாக்கியங்களைக் கேட்கவேண்டுமென விருப்பம் வருவதே பூர்வ வாசனை (நல்வாஸனை) இவ்வுலக விஷயாதிகளில் சுகமில்லை எனக் காண்பதே பூர்வ சத் வாஸனையின் காரணத்தால் தான். அம்மாதிரி

யிருப்பவர்களுக்கு ப்ரத்யேகமாக வைராக்யம் வேறு வேண்டியதில்லை. அப்படி உலகத்தில் அருசித் தோன்றுவதே பூர்வ வாஸனை. முக்திக்குப் போவதற்குக் காலம்.

*275.* ஞானத்தையும் முக்தியையும் அடைவதற்கு சிறுவயதென்றும், தள்ளாத முதிர்ந்த வயதென்றும் இல்லை. அதற்கு இதுவே சமயம் (அதன் பேரில் இச்சை வருவதே சமயம்). ஒருவருக்குப் பசி தோன்றுங்கால் உடனே சாப்பிடுகிறார். பசி இல்லாதவர்கள் சற்றுப் பொறுத்துச் சாப்பிடுகிறார்கள். பக்தி வேண்டுமென்கிற பசி அதிகமாக இருக்க வேண்டும். நெருப்பு அதிகச் சூடுடன் எரிந்தால், தண்ணீரும் அதிகம் சூடேறிக் காய்கின்றது. சாந்தி எனும் உறைந்த பனிக்கட்டி சிரஸில் இருக்கிறது. ஸ்ரத்தை என்னும் சூடு அதிகமானால் சாந்தி என்னும் (சம திருஷ்டி) "ஐஸ்" கரைந்து நீராகிறது போல் அந்த சாந்தி உள்ளில் அதிகமாய் வெளியிலும் பரவி விடுகிறது. அப்போது அவனுக்கு எல்லா விஷயங்களிலும். சாந்தி சமத்ருஷ்டியால் த்ருப்தி யடைந்து. மனது விஷயப் பற்றுகளில் அகப்பட்டுக் கொள்ளாமல் பரிசுத்தமாகின்றது. தான • தர்மங்கள் செய்வதிலுள்ள செலவைப் போல், மனது பரிசுத்தம் அடையச் செய்வதில் ஒரு காசும் செலவில்லை.

உள்ளில்ஒருவன் மனது சாந்தியைப் பெற்று விட்டால் வெளியிலும் சாந்தி புலனாகும். உள் சாந்தி ஒருவர்க்கிருந்தால், அவர் ஆயிரம் ஜனங்களுக்குள் போகிறபோது, அவ்வாயிரவர்களுக்கும் கொஞ்சம் கொஞ்சம் சாந்தி வருகிறது. புலிக்குப் பக்கத்தில் ஒருவன் போனால் எவ்வளவு சாந்தியுடன் போகவேண்டுமோ அப்படி ஆயிரம் ஜனங்களிடையே மிகச் சாந்தியுடன் போக வேண்டும். ஒரு சாது உலகிடையே இருப்பின் மஹா

சாந்தியும் பொறுமையும் பெற்றவனுயிருத்தல் வேண்டும். அநேகாயிரம் ஜனங்களின் மத்தியில் ஒரு சாதுவுக்கு சாந்தியும் பொறுமையும் மிகவும் முக்யமாய் உபயோகப் படும்.

*276.* ஒரு சந்தையில் அநேக விதமான சரக்குகள் கொண்டுவரப்படுகின்றன. அவ்வண்ணம் வெவ்வேறு காரியங்களில் நானுவிதமான மாதிரிகளில் சாந்தி வழக்கப் படுதல் வேண்டும். ஆயிரம் ஜனங்களிடையில் தீரத்வம் வேண்டும். ஆயிரம் ஜனங்கள் இருக்கிருர்கள் என்கிற எண்ணம் (ஒரு ஞானிக்கு) வந்தால் இருமை (தானும் ஜனங்களும்) என்பது தோன்றும். ஸ்வபாவம் என் கிற ப்ரகிருதியும் தோன்றும். அப்போது பூமியின் ஸஹாயம் இல்லாத "ஏரோப்ளேன்" போல ப்ரகிருதி யாகிய சரீராதி (ஸஹாயமில்லாமலும்) விசாரம் இல்லா மலும் இருக்க வேண்டும். சரீரம் தானல்ல வென்கிற த்ருட நிச்சயமாகிய கிரீடம் அணிந்தவனைப் போல் ஹ்ரு தயத்தில் நிர்ணயம் வேண்டும். வெய்யிலின் தாபத்தில் மிக்க அலேந்து வழியோரத்திய மரத்தி னிழலே அடைந்து, வழிப்போக்கன் நிழலில் உட்கார்ந்த க்ஷணமே வெய்யில் தாபத்தை மறந்து விடுகிறதைப் போல், பரமாத்ம விசா ரத்தில் இருப்பவர்கள், உலக விசாரத்தை மறந்திருப் பார்கள். குளிர்ந்த நிழலேக் கண்ட மாத்திரத்தில் வெய் யிலின் தாப விசாரம் மறந்து போனபடி, ஆத்ம விசாரம் அனுபவப் படவே, தான் தனதென்னும் வாசனேயும் மறந்து போவதாம். வீட்டுக்குள் இருக்கிறபோது குடை வேண்டுமென்றில்லே. வீட்டை விட்டு வெளியே போகிற போதுதான் குடை வேண்டு மென்பதவசியம். அப்படி ஞான பூரணமான பெரும் சாஸ்வத ஆதாரத்தில் விஷய சங்கமில்லாததால் அதைத் தடுக்கும் வேலேயும் அங்கே

இல்லை. எந்த சாதனமும் வேண்டாம். வீட்டுக்குள் உட்கார்ந்து கதவு மூடிவிட்டால் உள்ளிருக்கும் சாமான் கள் மட்டும் காணப்படுவது போலவும், வீட்டுக் கதவைத் திறந்து வெளியில் வந்தால் தான் வெளி (யுலக) சம்பந்தம் ஏற்படுகிறது. அப்படி இந்திரியங்களும் வெளிப் பார்வை பற்று நிற்கும்படிச் செய்யவும், வெளிப்பார்வை பெற்று இந்திரியங்கள் வெளியே செல்லச் செய்யவும் பழக வேண் டும். ஒரு பண்டசாலை (கடை) கதவுகள் மூடியபின் விலைக்குக் கொள்வதும் விற்பது மில்லை. அதுபோல், தான் வேறு என்றும் உலகம் வேறு என்றும் இல்லாமல் ஐக்யமாகிறது. இந்திரிய விஷயத்தில் உட்பார்வை கொண்டு ஜாக்ரதையுடன் இருக்கவேண்டும். இந்திரியங் களை, குதிரைகளை "லகாம்" இட்டு இழுத்து வைக்கிறபடி வைத்திருக்கவேண்டும். இந்திரியங்களின் பேரில் வைத் திருக்கும் பிடிப்பு ஆணி யடித்தபடி (நழுவியோடாதபடி) ஜாக்ரதையாகப் பிடித்திருக்கவேண்டும். புத்தி ஊர்த்வ முகமாய் (மேல் முகமாய்)த் தலைக்குள் (ப்ரம்ம ரந்த்ர ஸ்தானத்தில்) லக்ஷ்யம் (அசையாத நோக்கம்) வைத்து நிற்கவும். உட்பார்வை (லக்ஷ்யம்) எப்போதும் கழுத் துக்கு மேலேயே இருக்க வேண்டுமே யன்றிக் கீழ்வரக் கூடாது.

277. தங்கம் எப்படி புடத்தில் இட்டு (நெருப்பு) ஊதி ஊதி தங்கம் ப்ரகாசிக்கும்படி செய்கிறார்களோ, அப்படி உள்ளத்தில் சூக்ஷ்ம விசாரமாகிய உட்பார்வையைத் தூண்டி உற்றுத் தெளிய ஆராய்ந்தறியவேணடும். உலகம் தன்னிடத்திலேயே ப்ரகாசிக்கவேண்டும். புத்தி யானது மோக்ஷத்திற்கு மார்க்கமா யுள்ளது. தாரணை என்பது, ஆத்மா, சின்ன லக்ஷணத்தை யுடையது என்று

அறிந்திருத்தல். . இத்திண்ணமான அறிவு ஆத்மாவுக்கு சமீபமாக நெருங்குகிறது. (புஸ்தகப்) படிப்பினுல் அனுபவம் வராது. அனுபவம் பெற்றுப்பின் எழுதப் பட்டவை ஸ்லோகங்கள். வித்துக்குள் மரமிருக்கிறது. மரத்துக்குள் விதையில்லை. மனிதன் உலகத்தில் இல்லை. உலகம் மனிதனுக்குள் அடக்கம். மனதில் நினைத்ததை வார்த்தைகளால் சொல்லுகிறோம். ஹ்ருதயத்தில் வஞ்சனை சூது முதலிய கல்மஷங்கள் இருக்கக்கூடாது. எது நினைக்கிறோமோ அதையே சொல்ல வேண்டும். எது உள்ளில் ஆராய்ந்து தெளிந்ததோ, அதையே சொல்ல வேண்டும். யாரையும் வஞ்சனை செய்யவும்கூடாது. துவேஷிக்கவும் கூடாது. ப்ரத்யேகப்பட்டு த்ருட சித்தனுக (ஒரு மனத்தனுக) இருக்க வேண்டும். மனதில் வஞ்சனை முதலியவை இருந்தால், மழை காலத்துச் சூரிய சந்த்ரர்களின் முகத்தைப்போல் இருப்பார். மனது பரிசுத்தமாயிருக்குங்கால், வைசாக (வேனிற் காலத்துச்) சூர்யனைப் போல் இருப்பர். மேகங்களால் மூடப்பட்ட நக்ஷத்ரமும், ஒவ்வொரு சமயத்தில் வெளிச்சத்துடன் தோன்றுகிறது. மனிதனுடைய சுபாவம் ஐந்து நிமிஷத்திற்குள் வித்யாசப்பட்டு நிற்கிறது. பெரிய நக்ஷத்ரமும் மேகங்களில் மறைந்து சற்று நேரத்திற்கெல்லாம் எப்படி பிரகாசத்துடன் மின்னுகிறதோ, அதே ப்ரகாரமாக சுத்தமாகிய மனதின் ஆந்தரியம் (உள் இயல்பு) அப்படியிருக்கிறது. நக்ஷத்ரம் எப்படி விழுகிறதோ, அப்படி மனிதனுடைய அகங்கார வ்ருத்திகள் (ஆத்ம ஞானத்தினுல்) ஆத்மாவில் விழுந்து நாசமாகின்றன. ஆகாசம் என்பது ஸ்தூலப் பார்வைக்குத் தெரிவதில்லை. சூக்ஷ்ம புத்திக்கு அறியத் தகுந்ததாகுமாம். ஆகாசம் உள் ஆராய்ச்சியினுல் ஆராய்ந்து தெரியவேண்டும். சப்தத்

தினுல் எப்படி ஒலி கண்டு அறியப்படுகிறதோ, அப்படி மனதும் சுத்த அறிவினுல் தெரியப்படுகிறது.

278. ஜீவாத்மாவுக்குள் (ஆத்மாவாக) ப்ரகாசித்துக் கொண்டு இருக்கிறவனே **பரமாத்மா.** ஜீவகுணங்களை (சாக்ஷியாகத்) தெரிகிறவனே பரமாத்மா. ஜீவன் என்கிற எண்ணம் நசித்து, ஆத்மா தாஞகிய நிலை தோன்றலே நித்யாத்ம குணம். மாமரத்தின் கிளையில் தொங்குகிற காய், மரத்துடன் ஒன்ருய்க் கூடியிருக்கிறது. அப்படி ஜீவ பரமாத்ம ஐக்யத்தில் ஜீவன் ப்ரத்யேகம் அல்ல. ஸத்தும் சித்தும் ஆனந்தமும் கூடி ஒனருய் நின்றபோது **சச்சிதானந்தமாம்.** இது **ஜீவாத்ம பரமாத்ம ஐக்யம்** என்றும், **யோகம்** என்றும் சொல்லப்படும்.

279. குண்டலினீ சக்தியை (அக்னியை ஊதுவது போல்) ஊதி ப்ரகாசிக்கும்படி செய்யவேண்டும். ப்ரகாசிக்கும்படி செய்து முக்தியை அடைய வேண்டும். ஸ்ரத்தை என்பது - கயிற்ருல் கட்டியிழுத்தபடி; வாயு சக்தி என்கிற கயிற்ருல் பிடித்த பிடிப்பு விடாதபடி பிடித்துக் கொள்ளவேண்டும். விஸ்வாஸம் (நம்பிக்கை) என்னும் கயிற்ருலும் கட்ட வேண்டும். ஸ்ரத்தை என்ருல் "தாரணை" (பிடிப்பு). "தாரணை" யில் எந்நேரமும் ஞாபகம் வைக்க வேண்டும். ஞாபகம் வைப்பதில் விஸ்வாஸத்துடன் (நாம் பயன் பெறுவோம் எனும் நம்பிக்கையுடன்) நிறுத்த வேண்டும். அந்த நம்பிக்கை நரம்பு, நரம்புகளிலும் விஸ்வாஸம் ததும்ப (நிறைந்திருக்க) வேண்டும். அப்படியிருக்கிறவர்களுக்கு மாயை ப்ரத்யேகமான அவஸ்தையாக இல்லை. மனதே மாயை. அம்மனதே ப்ரதிமை ரூபமாக மாறுகிறது. எல்லா சம்பந்தங்கள், எல்லா சிருஷ்டிகள், காரண கார்யங்கள், ப்ரகாசித்து, ஜகத்து, ப்ரபஞ்சம் வ்யாபித்த

ப்ரகாசம். எல்லாவற்றிற்கும் மூல ப்ரகாசம், ஆகிய இவ்வித்யாசங்கள் எல்லாம் மாயை (அறியாமை) என்று எப்போது அறியப்படுகிறதோ, அப்போது முதல், மாயையின் பயம் வேண்டியதில்லை. இவை தன் உருவங்களே என ஏக நிஷ்டையாய் த்யானம் செய்து த்ருடமாய் நிச்சயித்து எல்லாம் ஒன்றெனும் ஞான நிலையில் நின்றதே மோக்ஷம். மோக்ஷத்துக்கு வழி தன்னைவிட்டுத் தூரமாகவில்லை. கண்ணுக்கும் காதுக்கும் எப்படி பக்கம் பக்கமோ, அப்படி புண்ய பாபங்கள் சமீபமாக இருக்கின்றன. இது புத்திக்கு வெளியில் இல்லை. சுக துக்கங்கள் புத்தியில் ஐக்கியம் ஆம். புத்தி சகாயத்தினுல் அதின் வழியே முத்தியைச் சேரவேண்டும். மனதைத் தன்னில் லயப்படுத்தினுல், ஆத்மாவொன்றே தானுய் நிற்பதே மோக்ஷம். எல்லாம் தன் மயமாய்க் காணப்படுவதே மோக்ஷம். அந்நிலையில், வேறுவிதமான ஞானம் இல்லை. அப்போது அங்கே சொல்லுவதற்கும் கேட்பதற்கும் வேருக (எதுவும்) இல்லை. இதை "ஒன்றும் இல்லாத அவஸ்தை" என்றும் சொல்லலாம். ப்ராண வாயு என்பது, கயிறு போல், போகும் போதும், வரும்போதும் ஒரே மாதிரியாய் நடைபெற்று வரும். ப்ராண வாயுவுக்கு துண்டமாகும் பான்மை இல்லை. இதற்குச் சமயம் முதலிய வித்யாசங்களில்லை. இது ப்ரகிருதியுடன கூடியிருக்கையில் வித்யாஸங்கள் தோன்றுகின்றன். ஜீவனும் வித்யாசங்களில் கலந்து, தன் நிஜ ரூபத்தை (தன் உண்மையான நிலையை) மறந்து கீழ் நிலையில் நிற்கிருன். அப்படி கீழ் நிலையில் நிற்காமல், புத்தி மார்க்கம், ஊர்த்வ கதியில் நிற்க வேண்டும். ஸ்ரத்தை (நழுவாத பிடிப்பு) எனும் கயிற்ருல் கட்ட வேண்டும். ஊர்த்வ கதியில் நிலையாக

நிற்கவேண்டும். மோக்ஷத்தை அடைய வேண்டும். எல்லா விஷயங்களினின்றும் விடுபடலாகும்; அப்போது சாந்தி வரும்; அந் நிலையில் நில். நின்று இவ்வுலகையும், மேலுலகையும் (அச்சம்பந்தமான) எல்லா விஷயங்களை யும் வெல்லலாகும். வென்றவர்கள் சச்சிதானந்த பதவியை அடைவார்கள். (ஸத் - இருத்தல், சித் - அறிதல், ஆனந்தம் - சுகித்தல்.) அவர்கள் நித்ய முத்தர். இனி எவ்விஷயங்களாலும் எப்போதும் கட்டுப்படார். விடுபட்டவரே ஆவர். கர்மப் பயனில் பற்றற்று, கர்ம பந்தங்களால், சாஸ்வதமாக பாதிக்கப் படாதவர்கள் ஆவார்கள். சாஸ்வதமாக ஒரு மனத்த ராவர். ஜீவத் தன்மைகளை ஜயித்தவர்கள். எது வரைக்கும் ஜீவ பாவம் (நான் ஜீவன், உடல் நான் என்கிற தன்மை போகாமல், ஆத்மாவில் ஐக்யம் ஆகாமல்) இருக் கிறதோ, அதுவரைக்கும் முக்தி யென்பது தூரமாய்த் தான் இருக்கிறது என வேண்டும். ஐக்யமாகாமல் - எல்லாம் தானுகத் தோன்றும் நிலையில் நிலைக்காமல் (இருமை, பன்மை நிலைகள் தோன்றும் வரை) யோகமும் செய்ததாக இல்லை. முத்தியும் அடைந்ததாக இல்லை. ஆராயுங்கால், ஒவ்வொருவனும் யோகி எனலாம். இந் நிலையில் அந்த யோகங்களெல்லாம் ஒவ்வொரு வஸ்து. விஷயம், அல்லது ஒவ்வொரு நோக்கம் வைத்துக்கொண்டு. அந்தந்த வஸ்துவும் தானும் ஒன்ருதலும் யோகம்தான். வஸ்துவில் லயப்படாமல் தன்னில் லயப்பட்டு நின்றது யோகம். அந்த யோகம் எல்லாவற்றிலும் காணலும், தண்ணிலையே நிலையாகக் கொண்டு, எல்லாவற்றிலும் ஜீவன் ஒன்றே, இரண்டல்ல, என்று இருமை நீக்கித் தன்னை நோக்கி நின்ருல், எல்லாவற்றிலும் ஒருமை யாகிய தன்மயத்தைக் காணுதல் யோகமென ஏற்படும்

உண்மையான ஐக்யம் - யோக நிலை - எல்லாவற்றிலும் எப்போதும் பற்று வைக்காமல் 'தான் வேருகித்தன்னையே காணல் யோகமாகும். எல்லா ஜீவன்களும் ஒன்றே எனும் நிலை எப்போது வருகிறதோ, எந்த வஸ்துவின் மேலும் விருப்பம் இல்லாமல், அதுவும் தான் என்னும் ஐக்ய யோகம் எப்போது நிலைக்கிறதோ, அப்போது தான் ஐக்யம் ஆனது. ஒவ்வொன்றிலும், ஒவ்வொரு கார்யத்திலும் அதன தன் பயனின்மேல் அபேக்ஷையில்லாமல் செய்வது ஏற்படும். அது மோக்ஷத்துக்கு வழி. 'ஜீவன் நான்' எனும் எண்ணம் ஆத்மாவில் ஐக்யம் ஆகிற வரைக்கும் இருமைகள் சந்தேஹங்கள் போவதில்லை. ஒருவன் மற்ருெருவனுக்குப் பிரீதியில்லாததைச் செய்தால் பைத்தியக்காரனெனக் காணப்படுவான். அந்த வஸ்துவின் மேல் ப்ரீதி வரும்போது அம்மற்றவருக்கு முதல்வன் பைத்தியம் எனத்தோன்ருது. அவ்வஸ்து இவருக்கும் அவருக்கும் (இருவருக்கும்) ஒரே மாதிரியாகக் காணப்படும்போது வேறு விசேஷம் தோன்ருது. மனது, காற்றில் விட்ட பஞ்சைப்போல் ஆம். அம் மனது பக்தியுடன் சேர்ந்தால், அப் பஞ்சின்மேல் நீர் தெளித்தது போல், மனது குவிந்து லயப்படும். மனதெனும் பஞ்சை, ஞானம் எனும் நீரில் தோய்த்து, சித்தத்தைத் ஆசாபாசங்களிலிருந்து விடுவித்து, சித்தத்தைத் தள்ளி வைத்துவிட்டு, பஞ்சு, நீர்பட்டுக் குவிந்தபடி, மனதை ஞான பூர்ணமாக்கிக் குவிந்துவர (ஆத்மாவை)ச் சேரவேண்டும். அநேக விதமான கார்யங்களில் ப்ரவேசித்தாலும், ஆத்மாவின்மேல் உள்நோக்கம் விடாமல் நிற்கலாகும். நானு விஷயங்கள் வெளியிலேயே அன்றி, உள்ளே இல்லை. ஆகையால் நானு கார்யங்களில் ப்ரவேசித்தாலும், உள் நோக்கம் ப்ரத்யேகமாக வைக்க

வேண்டும். "மோட்டார் ட்ரைவர்" தான் "ஸ்டியர்" செய்கிற (நடத்தும் தொழிலைச் செய்துகொண்டிருக்கிற) கையைவிடாமல் - விட்டால் "மோட்டார் கார்" வழி விட்டு எங்கெங்கோ போய் அபாயத்தைத் தந்துவிடுமோ? என்று கை விடாமல் - பிடித்திருக்கிறனே, அப்படி மனதைப் பிடித்த ஞான நோக்கத்தை விடாமல், மனதை புத்திக்குள் சேர்த்தி, புத்தியுடன் நடத்த வேண்டும். மனதை உள் நோக்கத்தை விட்டு வேறு பக்கம் போகவிடக் கூடாது. உள் நோக்கத்தில் ஞான நிலையில், அதே ஸ்திர நிஷ்டை (மாருத நிலை)யாக நிறுத்த வேண்டியது. மனத்தை உள்நோக்க விஷயமாய் வழக்கப்படுத்தி, உள் இந்திரியாதிகளும் வழக்கப்படும்படி செய்யவேண்டும். உள் நோக்கத்தின் நுட்பம் வழக்கத்தினுல் மிகப்பழக்கி, சூக்ஷ்ம புத்தியானது நாடி நரம்புகளில் ஓடும்படியும், அதில் நடக்குமவைகளைத் தெரிந்து கொள்ளச் சிதாகாசத்தில் சேர்ந்திருக்கச் செய்யவேண்டும். மனதே! அப்படிச் சேர்ந்து, அந்நிலையில் நின்று, என்றும் குறையாத திருப்தியடைந்து இரு. நிழலாகிய (இருளாகிய) மாயையைக் கண்டு ப்ரமை கொள்ளவேண்டாம்.

280. சமாதியில் மனுலய மடைந்தவர்கள் எவ்வித மஹேந்த்ர ஜாலங்களைக் கண்டும் ப்ரமிக்கமாட்டார்கள். அவர்களுக்கு எதினின்றும் பயமில்லை. சித்த புருஷர்களுக்கு லோகத்தில் பயமில்லை. அவர்களுக்கு (அவரைப்) பார்த்தவுடனே புலியும் சர்ப்பமும் சாந்தமாகின்றன. எல்லா ப்ராணிகளும் சாந்தமாகின்றன. மனது வராதவர்களும்கூட தற்காலத்துக்கு சாந்தராகின்றுர்கள். சாது ஸத் புருஷரைக் கண்டவுடனே, திடீரென்று ஒன்றுந் தோன்றுது நின்று விடுகிறுர்கள். அது என்ன காரணத்தினுல்? சந்தேஹிக்கும் சுவபாவத்தினுல் ஒன்றும்

தோன்றுது நிற்கிறுர்கள். ஸத் புருஷரைக் கண்டால் இருள் மூடுவதில்லை. உடனே இந்த ஸாது குணம் மற்றவரின் மனதில் ப்ரவேசிக்கிறது. (சுத்தப்படுத்து கிறது).

**281.** எல்லாருக்கும் வயிற்றுப்பசி ஒரே மாதிரியாகவும், (ப்ரமாணமாகவும்), ஒரே சமயத்திலும், ஆவதில்லை. அப்படியே ஒரே சமயத்தில் எல்லாரும் முத்திக்குப் போவதில்லை; சமயத்தில் பேதம். பாஷை வித்யாஸம் ஏற்பட்டால் சண்டை வருகிறது. சர்க்கரைக்கு ஹிந்துஸ்தானி பாஷையில் "மிட்டா" என்றும் மற்றதில் "சர்க்கரை" என்றும் சொல்லுகிறுர்கள். சர்க்கரையிலிருந்து உண்டாகும் ப்ரயோஜனம் வித்யாஸமில்லை. ஒன்றேதான். நானுவிதமாக உபயோகப்படுத்தினுலும் போய்ச் சேரும் இடமும் ஒன்றேதான். ஆயிரம் தைவங்கள் என்பதை மறந்து, ஒன்றே தைவம் என நம்பிய பக்ஷத்தில் அப்போதே சுகம் தெரிய வரும். அப்போதுதான் த்ருப்தியுமாம். பல தைவங்களை நம்பினவர்களுக்கு எவ்வளவு அடைந்தாலும் போதும் என்ற திருப்தி அடைவதில்லை. தைவம் இருவரென நம்புவதில் சுகம் இல்லை. ஒருவனே தைவம்; இரண்டல்ல; - எனும் நிச்சயம் வந்த (வுடன்) அவர்களுக்குத் தன்மயமாய்த் தோன்றும் சுகம் கிடைக்கிறது. (ஒவ்வொருவனும்) தன்னையே பார்ப்பான். அதே மோக்ஷத்துக்கு வழி. அவனுக்கு சத்துருக்கள் என்பதில்லை. எல்லாரும் மித்திரரே. தைவம் இரண்டென நம்பி தன்னைக் கெடுத்துக் கொள்ளக்கூடாது. ஒன்றென நம்பியே முத்தி அடைய வேண்டும். எவ்விடத்திலிருந்து வந்தோமோ, அவ்விடத்துக்குப் போக வேண்டியது. கார்ய காரணங்களைத் தெரிந்து, மாயை

யால் ஆனவைகளைக் குறிப்பினால் தள்ளி, எங்கிருந்து வந்தோமோ, அந்த இடத்தைக்கண்டு அதைச் சேர வேண்டும். மோக்ஷம் அடைய வேண்டும். மோக்ஷம் என்பது நம்மைத் தேடி வருவது அல்ல. நாம் அதை முயற்சியளவில் தேடி அவ்வழியே சேர வேண்டும். மோக்ஷம் என்பது - கர்ம பந்தத்தினால் உள்ளம் கட்டுப் பட்ட நிலையை விட்டு, ப்ரத்யேகமாக (வேறாக சாக்ஷி நிலையில்) நிற்பது - மோக்ஷத்துக்கு வழி. மோக்ஷம் என்பது வேறு வழியினால் கொண்டு வருவதல்ல! தன்னை விட்டு (வேறாக) அல்ல. நாம் மோக்ஷத்துக்கு பாக்யம் போவதற்கே பிரயத்தனம் செய்யவில்லை. அதனால் மோக்ஷம் தூரம் என்று காணப்படுகிறது. மோக்ஷம் என்பது அங்கும் இங்கும் போய் அடைவதல்ல. தன் னிடத்திலேயே தேடித்தெரிந்து புத்தியில் ஐக்யப்பட்டு, உள்ளுணர்வினால் ஆராய்ந்து அறிந்து, முக்தியை அடைய வேண்டும். அப்படி அடைந்த பொருள் அகண்டமான வஸ்து. மனுஷ்யன் அறியாமையினால் சந்தேகங்கள் ஏற் படுத்தி, மாயாரூபமான சங்கல்ப ப்ரதிமைகளை உண் டாக்கிக் கொண்டு (அவைகளைக் கடவுளெனக் கொண்டு) மயங்குகின்றான். அவைகளை உள் ஆராய்ச்சி யாகிய புத்தியின் வழியால் வேருடன் பிடுங்கி எறிய வேண்டும். அப்படிச் செய்து ஜீவன் முக்தி இந்த ஜன்மத்திலேயே முக்தி அடைய வேண்டும்.

பக்தி என்பது ஒன்றின்மேல் ஒருவனுக்குள்ள அன்பு. (ஒன்றை விடாமல் பற்றிய அன்பு). அவ் வன்பும் விஸ்வாஸமும் வைத்த பின், எதினால் அதிக ப்ர யோஜனம் அடைந்தானோ அதையே அவனுக்குப் பெரிய தென அவன் நம்ப வேண்டும். அந்த நிச்சயத்தை விடக் கூடாது. பக்தி இல்லாத ப்ராணி இல்லை. எல்லா

ப்ராணிகளுக்கும் பக்தி உண்டு. பக்தியானது, நீரைப் போல் அவரவரின் நிலைமைக்குத் தக்கபடி, எல்லாப் பக்கங்களிலும் செல்லும். அவ்வித பக்தி விஷயத்தில் எல்லா ப்ராணிகளுக்கும் அதிகாரம் (உரிமை) உண்டு. எல்லா வஸ்துக்களின் மேலும் பக்தி செல்லும். பரிசுத்தமான பக்தியாக இருக்க் வேண்டும். பக்தியை (ஞான) ஆகாசத்தில் சேர்த்து அறிய வேண்டும். உள்ளில் ஈடுபட்ட பக்தியாகி, நுட்பமான போக்கை (உள்ளில்) அறிய வேண்டும். அப்போது நிஷ்காமனுய், எவ்வித சிந்தனையும் இல்லாதவனுய், நிற்பதே நித்ய முக்தி. இதை சுழி முனை (ஸுஷும்னை) வழியாய் அடைய வேண்டும்.

282. குண்டலினீ சக்தியின் சூக்ஷ்ம சக்தியைக் கொண்டு புத்தி மார்க்கமாக நுண்மையான உள் நோக்கத்தினல் ஆராய்ச்சி என்னும் நெருப்பை ஊதி பிராணனைச் சுழிமுனையில் பாயும்படி செய்து, பால் சூடேற்றிக் காய்ச்சுவதுபோல், பிராணனைத் தலை நரம்புக்குள் (ஸஹஸ்ராரத்துக்குள்) பிரவேசிக்கச் செய்து, உள் நிலை அறிந்து சேரவேண்டும். ஒவ்வோர் சக்கரத்தையும் தாண்டும் போது ஒவ்வொரு குணம் வித்தியாஸப்பட்டு வரும்; ஒவ்வொரு குணம் வித்தியாஸம் என்ருல் ஒரு ஜன்மம் மாறுகிறது. ஒவ்வொரு சக்கரத்தில் உள் நோக்கமாக வேலை செய்கிற பிராண வாயுவை ஊர்த்துவ (மேல்) மார்க்கமாக நடத்தும்போது, சாந்தி ஸஹிப்பு முதலிய சுகுணங்களுண்டாகின்றன. ஐந்து சக்கரங்களையும், அவைகளின் ஐந்து பூத ஒதுக்குகளையும் தாண்டி ஆருவது சக்க்ரத்தை அடைந்து ஆறு குணங்களை ஜயித்தவனுய் சத்து சித்து ஆனந்தனுய் இருக்க வேண்டும். ஆக்ஞா (சக்கரத்தில்) நல்ல ப்ரபலனுய் ஆகாசத்தில்

நெருப்பு மண்டலத்தில் சேர வேண்டும். சக்தியும் சிவனும் ஒன்ருய் ஆட வேண்டும். திரிகால பீடம் (முக் காலங்களும் தெரியும்படியான இடம்) ஆத்மாவின் இடம்-'பிந்து'. பிந்துவில் ஞானம் எனும் கேணி (பெரிய கிணர்). அக்னி ரூபமான ஞானம் நரம்புகளில் உள்ள விதத்தை அறிந்து அதில் நோக்கம் வைத்து பிராண லிங்கத்தைச் சேர வேண்டும். பிராண னும் சிவனும்கூடி, ஒன்றே தன்மயமான நிலையில் ஆடி வழக்கப்படவும். யந்திர மந்திரங்களை ஜயித்து யந்த்ர மந்த்ரங்களுக்கு மேல்பட்ட நிலையில் நின்று அவை இல் லாத (அவற்ருல் யாதொரு கலவரமும் அடையாத) நிலை யாக இருக்க வேண்டும். புத்தி ஆகாச மார்க்கமாய்ப் போய் சிரசிலுள்ள ஆத்மாவின் மஹோதயத்தைச் சேர வேண்டும். கர்மங்களிலிருக்கிற குணங்களை அர்ப்பணம் செய்து சுத்த ஆகாச மார்க்கத்தில் ஜீவன் சென்று ஆத் மாவைக் கூடட்டும். ஜீவ பவனம் என்கிற சுஷும்னை யில் அக்ர பாகத்தில் (முதன்மையான பாகத்தில்) ஆத் மாவினுடன் சேர்ந்து இருக்கட்டும். ஜீவ குணங்களை யெல்லாம் ஆத்மாவினுக்குக் கொடுத்துவிடட்டும். தனது உனது எனும் தோற்றங்கள் இல்லாமல் அடங்கட்டும். ஜீவ குணங்களும் ஜீவன் எனும் பாவமும் (எண்ணமும்) ஆத்மாவினிடம் ஐக்கியம் ஆகி நித்ய சித்த (எப்போது ஸம்பூர்ண)ஞய் தீரன் (புத்தியிலேயே நின்றவன்) ஆய் இருக்கட்டும். ஆத்மாவின் நிலையை ஸம்பூர்ணமாய் அடைந்து அந்த ஞானமாகிய அன்னத்தை வேண்டியவர் களுக்குக் கொடுக்கும் பதவியை அடையட்டும். ஆத் மாவை சதா பார்த்து தாஞய் நின்று ஜனன மரணங்களை ஜயித்து, ஜனன மரணங்களில்லாதவனுகுக மனதே! எப் போதும் தன்னிலையில் தன்னையறிந்து கொண்டே இருக்

கட்டும். புத்தி, ஞானத்தினுல் விஸ்தாரப்பட்டு வர வர, அவரவர் குண தோஷங்கள் அவரவர்களுக்குத் தெரியப்படுகிறது. மனதினுல் ஆக்கப்படுவதும் (எழுந்து வருதல்) மனதில்தான் இவை நிலைத்திருப்பதுவும் தெரிகிறது. கண்ணுடியில் எப்படித் தன்னுருவைக் காண்கிருனே அதுபோல் மனதின் கல்பனைகள் புத்திக்குத் தெரிந்து விடுகிறது. தெண்ணீரில் ஆகாசம், நீர் வேறு ஆகாசம் வேருகக் காணப்படுகிறபடி, (சரீரங்களாய் உள்ளமாய்த் தோன்றுகிற) மாய்கையான பிரகிருதி வேருகவும், அதில் உள்ளாராய்ச்சி செய்யும் நுட்பமான சூக்ஷ்மம் வேருகவும், ஆத்மானுபவம் உள்ளவர்களுக்குக் காணப்படுகின்றன. நீருக்குள் அமிழ்ந்திருக்க நிலைமையில் ஆந்தர்யம் (உள்ளம்) இருக்கிறது. எல்லாத் தோற்றங்களிலும் அதே காணப்படுகிறது. அப்படி ஞானமெனும் மஹா சமுத்திரத்தில் முழுகியிருக்கட்டும். ஆத்மாவின் ஞானமாகிய கங்கா ப்ரவாஹத்தில் மனதிலுள்ள வாசனைகள் என்கிற சேற்று நாற்றங்கள் சுத்தமாய் இல்லாமல் அற்றுப் போகும்படி கழுவப் படட்டும். அப்போதே அந்த ஆனந்தம் அடையப்படும். எவ்வாற்ருனும் முக்தியை இப்படிச் சேருக. உட்கார்ந்திருந்தாலும், நடந்து கொண்டிருந்தாலும், படுத்துக் கொண்டிருந்தாலும், முக்தியின் ஆனந்தத்தை ஒரே பிடியாகப் பிடியை விடாது அந்நிலையில் ஊன்றி நின்று விடுக, இதுதான் சமயம் என்று குறிக்கப்படுவது ஒன்றுமில்லை. தாமும் மற்றொருவரும் சேர்ந்து போகும் போதும் தன்னுள்ளம் (அல்லது தானே) எதற்கும் சம்பந்தப்படாமல் ஆகாசத்தில் தனித்து நிற்கட்டும். அப்படி நிற்க, நிலைத்து நிற்க. அந்த முக்தி அமிர்த தாரை அதைக் குறிப்பாகக் கண்டு சிரத்தையுடன்

குடிக்கட்டும். அதிக அன்பும், மாயையிலிருந்து விடு பட்ட நிலையும் பெற்று, ஒரே நிலையில் நின்று ஓங்கார ஸ்வரூபத்தில் கூடி யிருக்கட்டும்.

இந்திரியங்கள் பத்தும் புத்தியில் ஈடுபட்டு அடிமைப்பட்டு, ரக்கைகளில்லாத பக்ஷிகளைப்போல அடங்கிக் கிடக்கட்டும். பத்து பக்கங்களில் வேலை செய்கிற தச விதப் பிராணங்களும் ஒன்ருய் (ஒரு முகமாய்) அந்தர் முகம் கொண்டு உள் நோக்கம் வைத்துக்கூடி நடக்கட்டும். சிதாகாச வழியைப் பிடிக்கட்டும். அவ்வழியில் நிலைப் பட நிலைப்பட உள் சாந்தியை அடைக. எப்பக்கமும் சாயாது சமநோக்கம் கொண்டு நின்று வழக்கப்பட, சர்வ விஷயங்களினின்றும் விடுபடுதல் ஏற்படும். ஸர்வ ஜகத்திலிருந்தும் சர்வ விஷயப்பற்று அற்று விடுபட்டுப் பார்க்கட்டும்.

சரீரம் என்கிற "எஞ்சினே", ஞானம் என்னும் நீராவியைக் கொண்டும், விவேகம் என்பதனுல் நகர்தல் செய்யவும் சிரத்தை என்னும் விடாப்பிடி தவருது பிடித்து ஒழுங்கிலும் சரியாய் நடத்தட்டும் "டிரைவ" ராகிய புத்தியின் நிலையும். "பாய்லர்" என்ப ஜீர்ண கோசமும், 'ஸ்க்ரூ'க்கள் என்னும் நாடி நரம்புகளும் சூக்ஷமம் என்கிற புத்தி மார்க்கமாக சென்று ஆத்மாவில் சேரட்டும். சாந்தியை அடையட்டும். "ரைல்" பட்டைக் கம்பிகளின்மேல் "ரைல் வண்டி" எப்படிப் போகிறதோ? அதுபோல் உள் ஆராய்வு புத்தியின் மார்க்கமாகப் போகட்டும்.

283. 'ரைல்' பட்டைக் கம்பிகளுக்கும் (மேல் ஓடுகிற) வண்டிக்கும் பார்க்கும்போது இவ்விரண்டும் கூடினதைப் போல் காணப்படுகிறது. ஆனுல் வண்டி வேறு, 'ரைல்' பட்டைக் கம்பிகள் வேறு. 'ரைல்' பட்டை என்பது

ஸ்வாபாவிகமாய் நடக்கிறது. "வண்டி"யோ சூக்ஷ்ம புத்தி மார்க்கமாகப் போகிறது. அப்படிப்போல் ஆத்மாவிற்கும் தேஹத்துக்கும் இருக்கிற சம்பந்தத்தைப், புத்தி மார்க்கமாய் அசைத்துப்பார்த்து, சூக்ஷ்மத்தால் ஆராய்ந்து அறிந்து, சாஸ்வதமான சாந்தியை அடையட்டும். 'ரைல்' வண்டித் தொடர்கள் சங்கிலிகளால் ஒன்றுக்கொன்று சேர்க்கப்பட்டிருக்கிறபடி ஜீவனும் பரமாத்மாவும் ஒன்ருகக் கூட்டிக் கூடிய நிலையில் நிற்கட்டும். அப்படி சரீரத்துக்குச் சம்பந்தப்பட்ட ஜீவகுணங்களை சமதிருஷ்டியினுல் ஒன்றென்ருய்க் கத்தரித்துவிடுக. இப்படி ஜீவன் சாஸ்வதமான முக்தி மந்திரம் (-நிலை) அடையச் செய்க.

284. த்யானமும், மனமும், பிடிப்பும் இம்மூன்றும் கூடி சூக்ஷ்ம ஸ்தானமாம் நிலையாகிய புருவ மத்யத்தில் உள்ளில் தோன்றி நின்று ஒன்றுபட்டிருக்கட்டும். ஓங்கார ஸ்தானத்தில் சாய்தல் இல்லாமல் நேரான சித்த விருத்தியைக் கள்ளம் கசடில்லாத புத்தி மார்க்கத்தில் (உள் ஆராயும் அறிவு வழியில்) எப்போதும் அறிவை விடாதபடி செலுத்தவும். ஸ்திரமாய் நின்று அசையாது த்யான நிலையிலூன்றி தாரணையால் சமாதி நிலையில் நிற்க. ஒரு முகமாய் நிற்க. ஆகாசத்தில் சித்தத்தை நிலையில் நிறுத்துவதற்குச் சமாதியைவிடச் சிறந்த உபாயம் வேறு இல்லை.

ஓ ஜீவனே ஞாளுகாசத்தில் நீயே பிரவேசித்துவிடு. ஆகாசத்தில் பிரவேசிக்கிற ஜீவனுக்கு லோகம் என்பது பிரத்யேகமாக (வேருக) இல்லை. தேஹமும் அதன் சம்பந்தப்பட்ட மற்றவைகளின் விஷயமான உள் தோற்றங்களிலும் ஈடுபடாமல் விடுபட்டுத் தனி நிலையில் நில் மனமே. சித்தத்தை இப்படி நிலை நிறுத்துவதற்கு

சாதனம் செய்கிற வழி தவிர வேறு வழியில் நிறுத்துவது கடினம். எப்போதும் சமாதியில் இருப்பவர்க்கு சரீர விஷயம் வேருகயிருக்கும். எப்போதும் சமாதியில் இருப்பவர்க்கு ஸ்தூலம் உலர்ந்த மாங்கொட்டைமேல் சிப்பியை ஒட்டாமல் நிற்கிறதைப் போல் விலகி நிற்கிறது. தேஹம் (உடலம்) தானல்ல - எனும் நிச்சயம் எப்போதும் இருக்கிறவர்களுக்கு சமாதி என்பது வேருக இல்லை. அவர்கள் எப்போதும் இருக்கும் நிலையே ஏகாந்த சமாதி - சிவானந்த உள்ளத்தில் ஸமாதி மனது உள்ளே போய் ஆத்மாவில் கலந்த சமாதி. சதா (எப்போதும்) ஞானம் என்னும் சர்க்கரையில் முழுகி இருக்கிறவர்களுக்கு சர்க்கரை என்னும் ஞானம் தவருக இராது. அவர்களுக்கு வெளிக் கார்யங்களில் யாதொரு பற்றும் சம்பந்தமும் இராது. (எவ்வாறருனும் வேறு விஷயங்களில் ஈடுபடார்கள் – பெரிதெனக் கொள்ளாரென்க).

285. ஓங்காரமாகிய குண்டலினீ சக்தியானது ஓர் நீரூற்றைப் போன்றது நீரூறி உற்றின நாலாப் பக்கங்களிலும் வழிதற் போலதுவுமாம். அது உள்ளிலும் வெளியிலும் புத்தியின் தெளிவு மேலாகி (நமது உள்ள மாகிய இந்திரியங்களுக்கு மேம்பட்டு மனதுக்கு மேலாய் நின்ற புத்தியிலும் ஞான சக்தி வியாபித்து புத்தியை மெள்ளக்கவர்ந்து) புத்தியில் கலந்து அதில் ஐக்யமாய் கசடு முதலியவைகளை ஒதுக்கி லயிக்கச் செய்து, ப்ரகாசமே ஏகமாகி, அதிர்ச்சியின்றி, அச்சக்தியின் ஞானத்தில் புத்தி ஐக்யமாகி, அச்சக்தியின் ஞானமயமாய் சப்தமும் நிஸ்ஸப்தமும் புத்தியில் ஐக்யமாகி, ஞானகாரமாய் புத்தியும் ஓங்காரத்தில் (அந்த ஞான உற்றில்) லயித்து விடுகிறது. ஓங்காரமாகிய சக்தி - ஞானப்ரகாசமாய் - புத்தியில்

நிறைந்து விடுகிறது. புத்தியும் ஓங்காரத்தில் ஐக்யம் ஆகிவிடுகிறது. அவ்வோங்கார சக்தியோ உலகத்தி லெல்லாம் வியாபித்து அகண்டமாய் ஐக்யமாய் விடுகிறது. உலக மென்பது வேருகத் தோன்ருமல் அவ்வோங்கார மாகிய ஞாஞ காரத்தில் ஐக்யப்பட்டிருக்கிறது. உலகமும் ஓங்காரமாகிய அம்மஹா சக்தியும் ஒன்றுக் கொன்று வேறுபடாமல் ஞாஞகாரமாய் அகண்டமாய் மஹா ஆகாசத்தில் நீக்கமின்றி நிறைந்து ஐக்கியமாய் விடுகிறது. அவ்வாகாசந்தான் புத்தீந்திரியாதிகளிலும் உள்ளத்தி லும் வேறுபாடின்றி ஐக்யப்பட்டு நிற்கிறது. புத்தி யும் ஆகாசத்தில் ஐக்யப்பட்டு நிற்கிறது. இந் நிலையில் புத்தியும் ஆகாசமும் ஓம்-காரத்தில் ஐக்யம். (அந் நிலையில் ஞானமாய் அறிந்து கொண்டிருக்கிறது அக்ஷர மெனப்படும்). அக்ஷரமும் புத்தியில் ஐக்யம். அவ்வாற றிந்து கொண்டிருக்கிற அந்த அக்ஷரமும் அதின் அறி வாகிய ஞானமும் புத்தியில் ஐக்யம். புத்தியும் ஆத்மா வில் ஐக்யம். ஆத்மாவும் புத்தியில் ஐக்யம்.

உருவங்களும் நுட்பமான உள்ளுணர்வும், புத்தி யின் அறிவு மூலமாக ஆத்மாவில் அர்ப்பிதமாய் ஐக்ய மாய் விடுகின்றன. கார்ய காரணங்கள் இவ்விரண்டு மாத்மாவில் ஐக்யம். ஞாஞ ஞானங்களிரண்டும் உள் ளுணர்வின் மூலமாய் ஆத்மாவில் ஒடுங்கும். இப்படி ஆத்மாவில் ஐக்யம் ஆக ஆக சாந்தி என்பது ஆகாசத்தைப் போல் சுத்தமாய் இருக்கின்றது. அச்சாந்தியில் சுத்தம் அசுத்தம் என்கிற இரண்டினுலும் தொடப்படுவதில்லை. சாந்தி சாஸ்வதமான சுத்தியே யாகியும், சாந்தி உருவ மற்று மாறுபாடுகள் அற்றது. உருவமும் அதன் விகாரங் களும் புத்தியில் ஐக்யமாகி எல்லா இடங்களிலும் (எல்லா அவஸ்தைகளிலும்) எல்லா உருவங்களிலும் சமமாகிக்

காணப்படுகிறது. அது ஒரு உத்தேசத்தை அனுசரித்தே அல்ல. ஒரு உத்தேசத்தைப்பொருந்தி யிருக்கமுடியாது. பிரத்தியேகமாக எல்லாவற்றிற்கும் வேருகி எங்கும் நிறைந்துளது. சாந்தி என்பது உத்தமமான கதி (நிலே). புத்தியின் மூலமாக இவ்வுலகத்துக்கும் மேலுலகத்துக்கும் ஒட்டாமல் தனித்து நின்ற நிலே. கஷ்ட சுகங்கள் இரண்டும் சாந்தி நிலேயை மாற்ருது, தொடாது. எங்கும் எவற்றிலும் ஞானரூபமான ஆத்மா ஒன்றே, அவ்வொன்றையன்றி வேருெதுவுமில்லே என்றறிந்த ஞான நிலேயே (உண்மையான சாந்தி) யதார்த்தமான சாந்தி. அந்த சாந்தியே இவ்வுலகத்துக்கும் பரததுக்கும் ஒரே சுகரூபமானது. இதுவே வேத வாக்யம். இதுவே உத்தம புருஷனுடைய தர்மமென்கிற நிலே. மனுஷ்யனுய்ப் பிறந்ததற்கு இச்சாந்தியை யடைதலே ஸார்த்தகம், இதுவே ஜன்ம ஸாபல்ய முக்தி. இதே உண்மை. இதுவே அதி உத்தமமான நிலே. இதே எல்லாம்.

இதுவே கோரிக்கை யற்ற பக்தி; நிராசையான பக்தி. நிராசையே நிஷ்கல்மஷமானது. நிஷ்கல்மஷமானதே ஆத்மன் என்கிற நிர்ணயம். நானு வஸ்துக்களின் மேல் பிரமையை விட்டு, சத்யமானதை யடைந்து ஆத்மாவை சேவை செய் மனமே! மனப்பூர்வகமாய் உள்ளுணர்வின் மூலமாக சாந்தி நிலேயில் ஆத்மாவைக் கொண்டாடுக. மனமே கொண்டாடுக! 'சத்' என்கிற நிர்ணயம் 'சித்' என்கிற ஜீவனுக்கு எப்போதும் புத்தியின் மூலமாக அந்தரத்தில் கொண்டாடு, மனமே! ஆத்மாவைக் கொண்டாடு. இரவு பகலென்கிறதே மறந்து இடைவிடாது ஒப்பற்ற சாந்தியால் மஹோதயமாய் (ப்ரகாசத்தில் தெளிந்த ஆத்மாவில்) ப்ரகாசிக்கட்டும். மனமே! அப்போது ஜகத்தெல்லாம் தன்மயமாகிக்

காணட்டும். அங்ஙிலே, கனவு நினைவு தூக்கங்களில் ஒரே ஞானுவஸ்தையாய் ஆத்ம மயமாய் இருக்கட்டும். மஹா சாந்தியை ஆத்ம மயமாய் விளைவிக்கட்டும். ஜகத்தைத் தெரிந்து கொண்டாடட்டும் (இதை யறிந்து தெரிந்து கண்டு சுகியுங்கள். புத்தி மார்க்கத்தில் ஜகத்தின் நிலையைத் தெளிந்து, மனம் தெளிந்து, ஆத்மாவை யறிந்து நில்லுங்கள். மற்றொருவன் சொல்லித் தாங்கள் தெரிகிறதல்ல. தன்னில் தானே சிந்திக்கட்டும். தன்னிடத்தில் தானே சிந்திக்கட்டும். உண்மையாகிய ஞானமே ஓங்கார மயமாகி ஆத்மாவாய் எங்கும் நிறைந்ததாய் பிரபலிக்கட்டும். சித்தத்தின் குணம் எந்த விருத்தியிலும் செல்லாமல் புத்தியிலே புகுந்து லயித்து நிற்கட்டும். சத்யமென்பது உள்ளில் சேஷித்து சித்தம் என்பது லயிக்கட்டும். அவ்வாகாசத்தில் சத்யமெனும் உண்மையானது தாரக மயமாகட்டும். தாரக மயமாகி சமதிருஷ்டியால் ஜகத்தை உற்றுப்பார்த்து அறியட்டும். சமதிருஷ்டியால் தெரிந்து, 'நான்', 'நீர்' எனும் பாவனையை நீக்கி, சமதிருஷ்டியால் நித்ய சத்யமாகிய ஆத்மாவை யறியட்டும். சத்யமல்லாத மற்றொன்றில்லையென்று எப்பொழுதும் இடைவிடாது அறியட்டும். அறிவாய் நிற்க. அதே ஸச்சிதானந்த பதவி. ஆதியுமந்தமும் ஸத்யமே ஆனது. உள்ளிலும் வெளியிலும் சத்யமே. ஒருவனே என்பது சத்யம், இருவரென்பது சம்சயம். ஒருவனெனன, ஒன்றென ஏற்படும் நிர்ணயமே சத்யம். அதி ஜாக்கிரதையான இந்த நிர்ணய மனனத்தில் எப்பொழுதும் உள்ளில் சென்று மனனம் செய்து சாதித்தறிந்து நிலை நிறுத்தட்டும். சத்ய மென்பதே சத்கதி. சத்ய மென்பதே சர்க்கரை. சர்க்கரை என்பது நிர் விகல்ப விருக்ஷத்தில் இருக்கிற மனோரசம். (ஆனந்த

நிலையிலேயே நின்று கரைந்து லீனமான மனதின் ரஸம் ) அம்மனோ ரஸமே ஞான ரஸம்.

ஞான ரஸமே யோக ரஸம். அந்த யோக ரசமே ஸர்வாங்க குணங்களையும் மேல் நோக்கும் வழிக்க்குத் திருப்பி (எல்லாவற்றையும்) மேல் நோக்கத்திலே இருக்கும்படியாகச் செய்து அந்த மார்க்கத்தையே சேர்ந்திரு! மனமே!

சிவனென்கிற கங்கையில் அங்கோபாங்கங்களிலுள்ள சம்சயங்க ளெனும் அழுக்கை அலசி மெள்ள ஸ்னுனமும் செய்யட்டும். சிவனும் சக்தியின் ஓங்காரமயமாகி கூடிச் சேரட்டும். ரூப குணங்களில் இருக்கும் சம்சயத்தை முக்கண்களால் பார்த்து, காம வைரிகளைச் சுட்டு அவ்விபூதியை சர்வாங்கங்களில் தரித்து, நீயும் சிவனும் கூடி மூன்று கண்களாலும் பார்வை எங்கும் பறவச்செய்யட்டும். நீயே சிவனுகட்டும், சிவனே நீயாகட்டும். நீயும் சிவனும் என்கிற பிரத்யேக பாவனையை, பஞ்ச இந்த்ரிய மத்தியில் பஞ்சாக்னிக்குமேல் வஞ்சனை இல்லாமல் சம்சயங்களை எல்லாம் ஹோமம் செய்யட்டும். ஹோமாக்னியில் ஜீவ குணங்களை அர்ப்பணம் செய்து தபஸ் செய் ஜீவனே! இப்படி நிஷ்காமமான மார்க்கமாக க்ஷண க்ஷணம் பஞ்சாமிருதத்தைச் சேவித்திடுக. சுட்டெரித்த அமிருத சேவையை சேவித்திடுக. சஞ்சலம் இல்லாமல் சேவித்திடு ஜீவனே. (கலக்கம் முதலியவையின்றி சேவித்திடு). தத்துவ மார்க்கமாய் (மர்மமறிந்து) இப்பரம சிந்தனையில் நிலைத்திரு. உண்மை தெளிந்தபின் மரண பயம் இல்லை. சத்தியம் அறிந்த பின், 'நான்', 'எனது', என்பதுவும் இறந்து போனபடி ஆயிற்று; எப்போதும் செத்தபடி இருப்பது ('நான்' 'எனது' என்று வேருகத் தோன்றுவது தான் மரண

பயம். 'தான்' 'தனது' என்பதே மரண பயம்: இது மேல் வழி நோக்குக்குத்தடை. (தூக்கக்காலத்தில்) உலகத்தை மறந்த ஸ்திதியை தூக்கம் என்று பஹிர் விஷயமாகிறதோ, அப்படியே மரணமும் பஹிரவஸத்தை யாகிறது. உள் அவஸ்தை (உள் வாழ்க்கை) பிரத்யேக மான அவஸ்தையாக வேருக இல்லை (உள் வாழ்க்கை வெளி வாழ்க்கை என்பன வேருக இல்லை). உள்ளும் உணர்ந்து வெளியும் உணர்ந்து எல்லாம் உணர்த்து ஒன்ருக நின்ற தனி நிலை. அப்பொழுது இந்திரியங்கள் உள் முகமாகி அந்தக்கரணங்களாகி நடத்தப்படும்போது 'நான்' 'எனது' என்பது அகண்டத்தில் அணுப்பிரமாண மாய் லயமாய் விடுகிறது. ஜீவன் திடீரென விழித்து வெளியுலகத் தோற்றத்தைக் கண்டால், அப்போழ்து அதுவரைத் தூங்கிய தூக்கத்தின் நிலையைக்கண்டு இன்ன தென்று அறிந்து கொள்ளுகிருன். அதுதான் ஞானத் தின் நிலை. ஜனன மரணங்களுக்குக் காரணம் ஆசை அல்லது பற்று, இதனுல் சாயை உண்மையாய்க் காணப் படுகிறது. பற்று மனிதனுடைய ஸ்வாதீனத்கில் உள்ளது. இப்பற்றுகளை அடக்கும் திறமையுள்ள புத்தி (உள்ளுணர்வுடையவன்) ஜனன மரண பயத்தை அடையவேண்டியதில்லை. பற்றே ஜனன மரணங்களுக்கு மூல காரணம். மனது பற்றுக்குக் கீழ்ப்படிந்து, பற்று மேலிட்டு (அதற்கு) இடங்கொடுக்கப்பட்டால் கஷ்ட சுகங்கள் பாதிப்பதற்கு இடமாகிறது, ஏனெனில், ஆசைகள் மனுஷ்யனுடைய ஸ்வாதீனமானுல் கஷ்ட சுகங் களினுல் பிறமை அடையமாட்டான். பற்றுக்களுக்கு மனம் வசப்படும்படி விட்டு விட்டபின், அவை வந்து பாதிக்கும். கஷ்ட சுக நிவர்த்திக்காக மனிதன் வெளிச் சகாயங்களை நாடுகிருன். ஆசைகளை (பற்றுகளை) ஸ்வா

தீனத்தில் வைத்திருக்கும் பக்ஷத்தில் கஷ்ட சுகங்களுக்கு பிரமிக்க வேண்டியதில்லை. மனது ஆசைகளின் ஸ்வாதீன மான காரணத்தினுல் மனிதனுக்கு வேறு ஆசிரயம் வேண்டியதாகின்றது. மனிதன் சில அப்யாஸங்களில் பழகி, அவ்வப்யாஸங்களுக்கு அடிமைப்பட்டுவிட்டால். அம்மனிதன் மேன்மையான அல்லது கீழ்மையான ஜனங் களுக்கு உட்பட நேருகிறது. ஆகையினுல் எந்த அப்யா ஸமும் ஒருவன் தன் ஸ்வாதீனத்தில் வைத்திருக்க வேண் டும். அப்யாஸம் - வேண்டுமெனில் வேண்டும், அப்யா ஸம் - வேண்டாம் எனில் வேண்டாம் - எனத் தள்ளி விடும்படி இருக்கவேண்டும். அப்படிப்பட்ட புத்தி நிர்ணய சாமர்த்தியம் (திறமை) இருக்க வேண்டும். வெறும் கல்பனைகளுக்காக வழக்கப்படுத்தப்பட்ட அப்யாஸத்தால் ஏற்படுகிற கார்யம் சாசுவதமாய் இருப்பதல்ல. புத்தியின் நுட்ப ஆராய்ச்சியினுல் கண்டறிந்து செய்யப்பட்ட அப்யாஸத்தால், ஏற்படுகிற கார்யம் சரீரம் இருக்கிற வரைக்கும் நிற்கும். கல்பனைகள் எப்பொழுதும் சாசு வதமானவை அல்ல. கல்பனை புத்தியைப்பார்க்கிலும் மிகவும் கீழ்தரப்பட்டது. கல்பனை என்பது சிறு விரலைப் போன்றது. புத்தி என்பது நடு விரலைப் போன்றது. யாதாயினும் ஒரு வஸ்துவின்மேல் கொள்கை, அல்லது, கார்யம் வகைராக்களின்மீது பிரேமை அதிகமாக இருந் தால் அது வாசனை. இந்த வாசனை ஜன்மத்துக்குக் கார ணம், வாஸனைகள் உடற் கூற்றின் சம்பந்தமாக மனித னிடத்தில் அப்போதைக்கப்போது தோன்றி மறையும். இவை நீரின்மேல் எழும் குமிழிகளைப்போல் தோன்றுகின் றன, மறைகின்றன. உடலோ ப்ரகிருதி (ஸ்வாபாவிதம்) ஆக இருக்கிறது. யாதேனும் ஒன்றின்மேல் வைத்த அதிக ப்ரேமை என்கிற வாசனையால் நாம் மற்ருெரு

சரீரத்தை எடுக்கவேண்டும். அந்த வாசனை எவ்விதமாக இருக்கிறதோ அதன் பிரதிபிம்பம் உள்ளத்தில் பிரவேசித்து விடுகிறது. அது ஜீவ வர்க்கத்தில் தகுந்த சரீரத்தில் தயாராகிவருகிறது. இந்த வாசனை யிருந்த மனுஷ்யன் எந்த கார்யம் செய்தாலும், அவனுடைய சரீரம் அதற் கிணங்கிச் செய்வது மல்லாமல், அவ்வாஸனையில் ஏற்பட்ட ப்ரீதியும் வேருகி நின்று, அதற்குத் தகுந்த சரீரம் சிருஷ்டி செய்யப்பட்டுத் தயாராகி வருகிறது. இச் சரீரத்திலிருக்கையில் அந்த வாசனையைத் திருப்திப் படுத்துவதற்கு அஸாத்யமாகி, இச் சரீரம் ஏதோ ஒரு வியாதியினுல் பீடிக்கப்படுகிறது. முடிவில் இச் சரீரத்தைவிட்டு ப்ராணன் போய் மரணத்திற்குப்பின், ஆங்கு தயாராகி நின்ற சரீரத்தைப் பெறுகிறது. இந்த சரீரம் விடப்படுகிறது, ஆங்கு ஒரு ஜன்மமாயிற்று. அந்த ஆசையைத் திருப்திப் படுத்துவதற்காக இந்த ஜன்மம் வாய்ந்தது. எந்த எந்த ஆசை சம்பந்தங்களை இச்சிக்கிறதோ அந்த அந்த வகை ஜன்மத்துக்குக் காரணம். * இஃதெப்படி இருக்கிறதென்றுல், நாம் நடக்கும் பொழுது கால்கள் இரண்டையும் ஏக காலத்தில் எடுப்பதில்லை யன்றே! இரண்டில் ஒன்றை ஊன்றி மற்றென்றை எடுக்கின்றேம். ஒரு காலை வைத்து மற்றெரு காலை எடுக்கவேண்டும். அஃதே போல் பூர்வ வாசனை என்பது ஜன்மங்களுக்குக்காரணம்.

286. நிஷ்காம்யமான பக்தியும் இம்மைச் சுகம் பயப்பதற்காக அன்று. இந்த பக்தியும் ப்ரகிருதி சம்பந்தமானதல்ல. கஷ்டங்களைப்பரிஹாரம் செய்யவுமல்ல, கஷ்டங்களுக்கும் அதற்கும் யாதொரு சப்பந்தமுமில்லை.

---

* முதலில் இச்சைப்படுதல், பின்பு ஜன்மம் வருதல், ஆக ப்ரகிருதியில் இருக்கிறது.

அது தேஹ வைராக்கியம் அல்ல. இந்த பக்தியின் வழியில் முன் செல்லுவதே யன்றி பின்னடைதல் ஆகாது. இந்த பக்தியும் எத்தனை கஷ்டங்கள் வரினும்,— உடும்பு எப்படி தான் பிடித்ததை விடாமல் இருக்கிறதோ, அப்படி நிஷ்காம்ய பக்தியை ஹ்ருதய கமலத்தில் திண்ணமான சிரத்தையினுல் பிடித்துக் கொள்ளுங்கள். பக்தி என்பது அன்பே. யுக்தி என்பது கௌசலம் (புத்திசாலித்தனம்). அம்மார்க்கமாய் சக்தி என்னும் திறமைக்கு உடன்பட்டு மூன்றினையும் சேர்க்கட்டும் (மூன்றினையும் உபயோகியுங்கள்). பக்தி நானுவிதமான உபாதிகளினின்றும் (பற்பல வாஸனைகளால் ஏற்பட்ட பற்றுகளும் உருவங்களுமில்லாமல்) பரிசுத்தமான உள்ளத்தனுகி, சுத்த வைராக்கியத்தையே (வேறெப் பற்றுமில்லாது) முன்னிட்டு இந்திரியங்கள் தம் தம் நிலையில் உள்முகமாய் நிறுத்தப்பட்டு வைராக்யமே முக்யமாய்க் கொண்டு (உள் தோற்றங்களும் பற்றுக்களும் இல்லாதவனுய்) சாந்தியைக் கொடுக்கிற ஜகத் கர்த்தன் எல்லாம் ஓங்காரமானவன் - வெளித் தோற்றங்களும் பற்றுக்களுமில்லாதவனெனலாகி ஜகத் கர்த்தன் (ஜகத்தைத் தன்னிடத்தில் தோற்றமாகக் கொண்டவன்) ஓங்கார சமஸ்தன் (எல்லாமு மோங்காரமாய் அவ்வோங்காரம் தானுனவன்) எனலாகி, எவ்விதமான அசைதலு மில்லாது (வெளி யசைவும் உள் அசைவும் இல்லாது) ப்ரபஞ்சங்களெல்லாப் தானுய் நின்ற அகண்ட பரமாத்வினில் உள் கலந்த நிலையாகிய பரம பக்தியே ஸ்திரமாக நிலைப்படுத்துகிற அதே உண்மையான பக்தி. அதே நித்யமான (சாசுவதமான) சாந்தி. அதே தானுய் விளங்கிக் கொண்டிருக்கிற பிரகாசம். அதே எப்போதும் நிலைத்த நிர்ணய ரூபமான நிலை. இஹ பரங்

களுக்கு புருஷ ப்ரயத்தனமும் அதன் பயனும் இதுவே. இதே சதானந்தத்தில் மூழ்கிய மனதுள்ள நிலைமை. சதானந்தத்தில் தோய்ந்த மனது சர்வ வஸ்துக்களிலும் விதையைப் போன்றது. சதானந்த நிறைவுற்ற மனதே சர்வ வஸ்துக்களிலுமுள்ள நுட்பமான உண்மை. அதே புத்தியின் ஸம்பூர்ண ஆராய்ச்சியின் விளைவு. சதானந்த ஸம்பூர்ணமானதே, இருளும் மருளும் இல்லாத தெருட்சியைப் படைத்தது. நிரஞ்சனமானது. இனி எக்காலத்தும் எவ்வாற்றுனும் எவ்வகையிலும், தடைகளாலும் உபாதிகளாலும் சலனங்களாலும் அசைக்கக் கூடாததுமாகியது. எல்லா இடங்களிலும் நீக்கம் இல்லாமல் நிறைந்த ஞான பூர்த்தியுள்ளவனுகி அவனே சிருஷ்டி கர்த்தா எனப்படுவதும். அதேதான் சர்வ சாக்ஷியாயுள்ளது. அதே இஹத்திலும் பரத்திலும் எப்பொழுதும் எங்கணும் நின்றுள்ளது. அதே உள்ளும் புறம்பும் எங்கும் நிறைந்து ஒளி வீசி ஆனந்தப் பரப்பாயிருப்பது. அதே எல்லாவற்றையும் அறியும் ஞானமாகவும், தன்னையறியும் அகண்ட ஞானம் ஆகவும், காரண கார்ய கர்த்தாக்களாகி, திரிகாலங்களிலும் நின்ற சாக்ஷியாகவு மானது. ஓங்காரமே! கரையில்லாச் சுக வாரிதியே! பரமாத்மாவே, ஸதா ஸாக்ஷியே! அதே குருவுக்கும் குருவாம். அதே சர்வ ஜகத் சோபையாம். அதே ஸர்வ ஜகன்மாதா - அதே ஸர்வ ஜகத் பிதா - அதே ஓங்கார நிலை. அதே ஸர்வ பிந்து நிலை. அதே மகார ஆகார இகார ஓங்கார பரம் பொருளே. சராசர கோசர வடிவே! சராசர கோசர வடிவினுட் கலந்த உண்மைப் பொருளே! ஸகல நிர்ணய ஸாரமே!

ஓம்! ஓம்!! ஓம்!!!

